Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீராமாநுஜன் 21

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * —ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

15— 3 —1966ல் வெளியிட்டது.

# P. B. அண்ணங்கராசார்யர் பதிப்பித்த முக்கிய நூல்களுக்கு

## அகராதி வரிசையில் ஜாபிதா

ஸ்ரீ எழுத்தை முதலில் கொண்ட நூல்கள்.

| | ரூ. | பை. |
|---|---|---|
| 1. ஸ்ரீ குணரத்நகோச விரிவுரை | 2 | 00 |
| 2. ஸ்ரீ சைலேசமந்த்ர ப்ரபாவம் | 1 | 00 |
| 3. ஸ்ரீவரவரமுனிதண்டகம்உரையுடன் | 1 | 00 |
| 4. ஸ்ரீ வரவரமுனி ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| 5. ஸ்ரீவேங்கடநாதஸ்தோத்ரம் உரையுடன் | 0 | 75 |
| 6. ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| 7. ஸ்ரீ ரங்கராஜஸ்தவ வியாக்யானம் | 4 | 00 |
| 8. ஸ்ரீ ரங்க ஸ்ரீ: (வடமொழியிலும்) | 1 | 00 |
| 9. ஸ்ரீ ராமாநுஜ பூஷணம் | 1 | 00 |
| 10. ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| 11. ஸ்ரீ ராமாயண ரஸ்யரஹஸ்யம் | 0 | 75 |
| 12. ஸ்ரீ ராமாயண ஸௌரபம் | 1 | 00 |
| 13. ஸ்ரீலோகாசார்ய ஸ்துதி-உரையுடன் | 0 | 75 |
| 14. ஸ்ரீ வசனபூஷண ஸாரம் | 2 | 00 |
| 15. ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 16. ஸ்ரீ வைஷ்ணவ ஸௌபாக்யம் | 1 | 00 |

---

| | ரூ. | பை. |
|---|---|---|
| 17. அத்திகிரி வைபவம் | 0 | 75 |
| 18. அத்புத சக்தி | 0 | 75 |
| 19. அத்புதோபந்யாஸ மாலை | 1 | 50 |
| 20. அத்யாபக ஹஸ்த பூஷணம் | 1 | 25 |
| 21. அபூர்வ ராமாயணம் | 1 | 50 |
| 22. ஷை ஆங்கிலத்தில் | 1 | 25 |
| 23. அழகியசிங்கர் ப்ரபாவம் | 1 | 00 |
| 24. அழுகையும் அழச்செய்கையும் | 0 | 75 |
| 25. அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி (324 உபந்யாஸங்கள்) | 3 | 00 |
| 26. அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 27. அறுபத்திரண்டு வார்த்தா மாலை | 2 | 00 |
| 28. அறுபத்துமூன்று உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 29. ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி | 1 | 50 |
| 30. ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்யம் | 1 | 00 |
| 31. ஆசார்யசிஷ்ய ஸம்வாத கண்டனம் | 1 | 00 |
| 32. ஆசார்யஹ்ருதயப் பதவுரை | 4 | 00 |
| 33. ஆசார்யஹ்ருதயம் பாடபரிஷ்காரம் | 1 | 00 |
| 34. ஆர்த்திப்பிரபந்தவுரைமுதலானவை | 2 | 50 |
| 35. ஆழ்வார்கள் உகந்த ராமன் / ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் | 1 | 25 |
| 36. ஆழ்வார்கள் வைபவம் | 1 | 00 |
| 37. ஆழ்வார்களின் கால நிர்ணயம் | 1 | 00 |
| ஷை ஆங்கிலம் | 1 | 00 |
| 38. இயற்பா ஆயிரமும் தீபிகை யுரை | 15 | 00 |
| 39. உபதேச ரத்தின மாலை உரை | 1 | 00 |
| 40. உபந்யாஸ சதத்வயம் | 4 | 00 |
| 41. உபந்யாஸ ஸப்தகம் | 1 | 00 |
| 42. உள்ளுறை பொருள் விளக்கு | 1 | 50 |
| 43. எம்பெருமானார் தரிசனம் / எம்பெருமானார் வைபவம் | 1 | 50 |
| 44. எம்பெருமானாரறுபத்திரண்டு | 1 | 50 |
| 45. எழுபத்துநான்குவிருந்து | 1 | 25 |
| 46. ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை | 2 | 25 |
| 47. ஐப்பசித் திருமூல மலர் | 1 | 50 |
| 48. ஐப்பசித் திருமூல நன்னாட்சிறப்பு | 1 | 00 |
| 49. ஒருமிதுனமே உத்தேச்யம் | 0 | 75 |
| 50. கண்டீரவாவதார காரண நிருபணம் | 0 | 75 |
| 51. கம்பர்கண்ட கண்டீரவம் | 0 | 75 |
| 52. கம்பரின்பக்கவித்திரட்டு | 2 | 00 |
| 53. கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 75 |
| 54. கோதாஸ்துதி யுரை முதலியன | 1 | 00 |
| 55. கோதை தமிழ்ச்சுவை யமுதம் | 1 | 00 |
| 56. கோதை போலுமாராய்ச்சி | 1 | 50 |
| 57. க்ஷேத்ர தீர்த்த யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 58. சங்கத் தமிழ்மாலை முப்பது | 1 | 00 |
| 59. சதபூஷணி வஜ்ரகுடாரம் | 1 | 00 |
| 60. சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரம் | 1 | 00 |
| 61. சரம ச்லோகார்த்த ஸாரம் | 1 | 00 |
| 62. சரணாகதி ஸாம்ராஜ்யம் | 0 | 75 |
| 63. சாடுச்லோக சதகம் உரை | 1 | 00 |
| 64. சாரீரக மீமாம்ஸை | 1 | 00 |
| 65. சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி | 3 | 00 |
| 66. சேஷாவதாரச் சிறப்பு | 0 | 75 |
| 67. ஜகதப்யுதயைக மூலம் | 1 | 00 |
| 68. ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி | 1 | 00 |
| 69. ஞானஸார உரை முதலியன | 1 | 50 |
| 70. தசாவதாரஸ்தோத்ர உரைமுதலியன | 1 | 50 |
| 71. தத்வத்ரய ஸாரம் | 1 | 50 |
| 72. தத்வஹிதோபதேசம் | 1 | 00 |
| 73. தத்வார்த்த பூஷணம் | 1 | 00 |
| 74. தானேயெழுதிய தன் சரிதை | 3 | 00 |

# ஸ்ரீ ராமாநுஜன்—214



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் **19** | 1966 அக்டோபர் மாதத்திற்காக 15-8-66-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை **10**


## திருவாய்மொழி நூற்றந்தாதி—90.

**மாலுமது வாஞ்சை முற்றும் மன்னுமுடம்பின்முடிவில்***
**சாலநண்ணிச் செய்வனெனத் தானுகந்து*—மேலவனைச்**
**சீர்ரார் கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன்***
**தாராரோ நந்தமக்குத் தாள்.**

| | | | |
|---|---|---|---|
| மால் | எம்பெருமான் | மேல் அவனை | ‘அப்பரம புருஷனை |
| உமது வாஞ்சை முற்றும் | ‘(ஆழ்வீர்) உம்முடைய அபேக்ஷிதங்களெல்லாவற்றையும் | சீர் ஆர் கணபுரத்தே சேரும் எனும் | திருக்கண்ணபுரத்திற் சென்று ஆச்ரயியுங்கோள்’ என்றருளிச்செய்த |
| மன்னும் உடம்பின் முடிவில் | இந்த சரீரத்தின் முடிவிலே | சீர் மாறன் | நம்மாழ்வார் |
| சால நண்ணி செய்வன் என | மிகவும் பொருத்தமாகத் தலைக்கட்டித் தருகிறேன்’ என்றருளிச்செய்ய | நந்தமக்கு | நமக்கு |
| தான் உகந்து | தாம் மனமகிழ்ந்து | தாள் தாராரோ | தமது திருவடிகளை ப்ரஸாதித் தருளமாட்டாரோ? |

* * *—‘நாளே லறியேன்’ என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் ‘ஆழ்வீர்! உமக்கு இந்த தேஹாவஸானத்திலே உம்மைப் பரமபதத்திலே கொண்டுபோய் அடிமை கொள்ளக் கடவோம்’ என்று நாளிட்டுக்கொடுக்க, அத்தாலே திருவுள்ள முவந்து அப்பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே சென்று சேருங்கோளென்று பரோபதேசம் பண்ணின பதிகம் *மாலைநண்ணி யென்பதாம். *மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான்* என்றதில் நோக்கு.

கீழ் *அறுக்கும்வினைப்பதிகத்திலே அவனைப் பெறவேணுமென்கிற மனோரதமாய்ச் சென்றது. அந்த மனோரதம் நிறைவேறாமையாலே மிகவும் கிலேசித்தபடி சொல்லிற்று கீழ்த் திருவாய்மொழியிலே. இப்படி நோவுபடுகிறவிவருடைய கிலேசத்தையறிந்த எம்பெருமான் "ஆழ்வீர்! என்னைப் பெறாமையாலே நீர் நோவுபடுகிறது கிடக்கட்டும்; உம்மைப் பெறாமே இழவுபட்டுக்கிடப்போம் நாமன்றோ; உமக்கொரு குறையுண்டோ? திருநாட்டைவிட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம் ஸன்னிதி பண்ணியிருப்பது உமக்காக வன்றோ; இந்த சரீரத்தின் முடிவிலே உம்முடைய அபேக்ஷிதம் நிறைவேற்றக்கடவோம்" என்று சொல்லி ஸமாதானம் பண்ண, ஆழ்வாரும் ஸமாதானமடைந்து அதனைச் சொல்லி மகிழ்கிறார் *மாலைநண்ணித்திருவாய்மொழியில். "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கிற பாசுரம் இப்பதிகத்திற்கு உயிராயிருக்கும்

'ஸர்வேச்வரன் ஸர்வஜநஸமாச்ரயணீயனாய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே கோயில்கொண்டிராநின்றான்; எல்லீரும் அவனைச் சென்று ஆச்ரயியுங்கோள்; ஆச்ரயிக்கு மிடத்தில் அவன் திருவடிகளிலே பக்தியைப் பண்ணுங்கோள்; பக்திக்கு உபகரணமில்லா தார் ப்ரபத்தியைப் பண்ணுங்கோள்; அதற்குரிய அத்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தை யாகிலும் சொல்லுங்கோள்; அவ்வளவே கொண்டு அவன்றான் கைவிடான்; ஆனபின்பு எல்லாருமொக்க அவனை ஆச்ரயியுங்கோள்' என்று பரோபதேசரூபமாய் நிகழ்ந்தது அப்பதிகம். "மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனை போக்கி உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதஞ்சொல்லியல்லது நிற்கமாட்டார்" என்பர் நம்பிள்ளை. ...

# ஸ்ரீமதுபயவே. யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார்ஸ்வாமி.

"நர: பதிதகாயோபி யச:காயேந ஜீவதி" என்பது ஸுப்ரஸித்தமான ஸுபாஷிதம். 'பூதவுடல் மறைந்தாலும் புகழுடல் மறையாது' என்பது இதன் பொருள். இப்படி கீர்த்திமூர்த்தியுடன் விளங்குமவர்களை நாம் அநாதிகாலந்தொட்டே எல்லா நாடுகளிலும் எல்லா மதங்களிலும் கேட்டுவருகிறோம். முற்காலத்தில் (அதாவது ஏறக்குறைய நூறாண்டுகட்குமுன்பு) உருவப்படம் சேகரிக்கும் கருவியில்லாததனால் நாம் பண்டைக் காலத்து மஹான்களை ஒருவாறு ஸேவித்துக் களிக்க பாக்கியமில்லையாயிற்று. இக்காலத்தில் அந்தப் பஞ்சமில்லையென்பது நமக்கு எவ்வளவோ மகிழ்ச்சியைத் தருகின்றது. அவரவர்கள் சிரமப்பட்டு ஸம்பாதிக்கும் யோக்யதைகள் பலவகைப்பட்டவை. அப்படிப் பட்ட யோக்யதைகள் பெற்றவர்கள் பிறநாடுகளிற்போல நமது தென்னாட்டிலும் பலர் விளங்கினார்கள், விளங்குகின்றார்கள். இத்தகைய மஹான்களில் தலைவராகவோ ஒருவரா கவோ மதிக்கத்தக்கவொரு மஹானை அடுத்தபக்கத்தில் ஸேவைஸாதிக்கச் செய்கிறேன். யோகி. பார்த்தஸாரதி ஐயங்காரென்று ப்ரஸித்தரான இந்த மஹான் தேவியாரோடுங் கூட ஸேவை தந்தருளுகிறார். இவரை அடியேன் இளமையில் திருவல்லிக்கேணியில் ஸேவித்திருக்கிறேன். ஆனால் நெருங்கிப் பழகினதில்லை. யோகி சிங்கம்மா என்று ப்ரஸித்தி பெற்ற இவரது தேவியாரை நன்கறிவேன். அயோத்திமாநகரில் ஐந்தாறு பரியாயம் விடைகொண்டு இந்த அம்மாவின் அற்புதமான ஞானவைபவத்தை யநுபவித்திருக்கிறேன். அயோத்யை சிங்கம்மா என்கிற ப்ரஸித்தியுமுண்டு. பார்த்தஸாரதிஸ்வாமி பிரசண்ட

வித்வானுயிருந்ததோடுகூட பிரபல தனிகராயுமிருந்தார். அதனுல் அந்த ஸ்வாமி செய்தருளின லோகோபகாரங்கள் அளவுகடந்தவை. உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டிருக்கிருர். அவற்றுள் இரண்டு மஹா க்ரந்தங்களை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். (1) ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம் இரண்டு அரும் பதவுரைகளோடும் ஸ்ரீ வசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் [ஆயிரம் பக்கங்களுக்கு மேல் கொண்ட மிகப் பெரிய ஸ்ரீகோசம்] இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது. (2) ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனுதிகளோடுங் கூட மிகப் பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு. காஞ்சீபுரத்தில் வித்வத்ஸிம்ஹமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத். குன்றபாக்கம் சீமாச்சார் ஸ்வாமி இந்த மஹாைேடு அதிகமாகப் பழகினவர். அந்த ஸ்வாமி இவருடைய மேதையையும் ப்ரதிபையையும் பலகால் ப்ரசம்ஸித்து ஸாதிக்சக் கேட்டிருக்கிறேன்.



இம்மஹான் லக்னே (Lucknow) மஹாநகரத்தில் பெரிய உத்யோக பதவியில் அமர்ந்திருந்தகாலத்தில் சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவைஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸாவஹித்து அயோத்யையில் **கோலாகாட்** என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தாக்ஷிணுத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம். இற்றைக்கும் தாக்ஷி

ஞத்யர்களைக்கொண்டே திருவாராதனம் நடைபெறுத்தப்பட்டுவருகிறது இதற்குப் பர்யாப்தமான மூலதனமும் சேமிக்கப்பட்டுள்ளது. இந்த ஸன்னிதியின் தோற்றங்களை நேரில் ஸேவிக்கப்பெறுதவர்களும் கண்டுகளிக்கும்படி இங்கே இரண்டு உருவப்படங்களாக சேகரித்து வெளியிடுகின்றேன். இந்த ஸன்னிதியை **அம்மாஜீமந்தீர்** என்றே வடநாட்டினர் வழங்குவர். சிங்கம்மாவின் திருநாமம் **அம்மாஜீ** யென்பது. இந்த அம்மா தம்முடைய வாழ்நாளைப் பெரும்பாலும் இந்த ஸன்னிதியிலேயே கழித்தார். பகவத் விஷயத்திலும் ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் இந்த அம்மாவுக்கிருந்த ப்ரஜ்ஞை அமோகமானது. ஒருநாள் தவருமல் ப்ரவசனம் செய்து கொண்டிருந்ததை நேரில் பலகால் அநுபவித்திருக்கிறேன்.





ஸ்ரீமத் பரமஹம்ஸ. அயோத்யா. ராமாநுஜஜீயர் ஸ்வாமி [கோயில் ஸ்ரீரங்கநாராயணஜீயர் ஆஸ்தானத்தில் சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து விலகினவர்] க்ருஹஸ்தாச்ரமத்தில் ப்ரவேசியாமல் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலேயேயிருந்தவர் அயோத்யை ஸன்னிதியில் பலவாண்டுகள் கைங்கர்யபரராயிருந்து கொண்டு சிங்கம்மாவிடத்திலேயே ஸ்வருபக்ரந்தங்களெல்லாம் அதிகரித்தவர். ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார் ஜீயர்ஸ்வாமியாக எழுந்தருளியிருந்த சிறுகுன்றம் ஜீயர் ஸ்வாமியும் அப்படியே. இவ்விரு ஸ்வாமிகளும் இந்த அம்மாவின் தனியனை ஸேவித்தே காலக்ஷேபங்கள் செய்தருளினதாகப் பலகால் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். உத்தராதி வைஷ்ணவர்கள் பலர்க்குங்கூட ஸ்வருபக்ரந்தங்களை ப்ரவசனம் செய்துகொண்டு வாழ்ந்த மஹாநுபாவை. இந்த விலக்ஷண தம்பதிகளின் சிந்தனையைப் பரம புனிதமாக நினைத்துச் செய்தேனின்று. ...

# தேவப்பெருமாளுடைய ஆடிகருடன் மஹோத்ஸவம்.

நம் தேவப்பெருமாளுக்கு வைசாக மஹோத்ஸவத்தில் நடைபெறும் கருடோத்ஸவமே உலகமுழுது முணர்ந்தது. ஆனி ஆடி இவ்விரண்டு மாதங்களிலுங்கூட இரண்டு கருடோத்ஸவங்களுண்டு. இவ்விரண்டும் இரவில் நடைபெறுவது, மாடவீதிகளில் மட்டுமே நடைபெறுவது. ஆனிகருடன் பெரியாழ்வாருடைய வருஷத்திருநக்ஷத்ர மஹோத்ஸவ நிமித்தமாக நடைபெறுவதால் ஸம்ப்ரதாயைதிஹ்ய நிபந்தனமானது. ஆடி கருடன் கஜேந்திரமோக்ஷோத்ஸவமென வழங்கப்பெறும். முதலைவாய்க் கோட்பட்ட கஜேந்திராழ்வானுக்குப் பெரியதிருவடியின் மீதெழுந்தருளி ஸேவை ஸாதித்து இடர்தீர்த்த படியால் அவ்வநுக்ரஹம் உலகில் நீடூழி விளங்குமாறு இந்த கருடோத்ஸவம் அநாதி காலமாக அனேக தேவாலயங்களில் நடைபெற்றுவருகிறது. இவ்வுத்ஸவம் நடத்தப்பட வேணுமென்று ஸ்ரீ பாஞ்சராத்ராதிகளில் விதியில்லையாயினும் பூர்வாசாரியர்களின் நியமனமடியாகவே இது சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. இவ்வுத்ஸவம் நம்பெருமாள் ஸன்னிதியில் சித்திரைப் பௌர்ணமியில் நடைபெற்றுவருகிறதாம். சில திவ்யதேசங்களில் நக்ஷத்திரத்தை நிமித்தமாகவைத்து இது நடத்தப்பட்டு வருகிறது. தேவப்பெருமாள் ஸன்னிதியில் நியமேந ஆடிமாதத்துப் பௌர்ணமியில்தான் நடந்து வருவது.

மற்ற திவ்ய தேசங்களிற்காட்டிலும் இங்கு இதற்கு விசேஷமுண்டு. அதாவது, ஹஸ்திகிரி மாஹாத்மியமென்று ப்ரஸித்தமான இந்த ஸன்னிதியின் புராணத்தில் கஜேந்திர மோக்ஷ விருத்தாந்தம் இங்கே நடைபெற்றதாகவுள்ளது. *துரகஸவநவேத்யாம் ச்யாமலோ ஹவ்யவாஹ:* என்றும் *ஹைரண்யகர்ப்பஹயமேத ஹவிர்ப்புஜம் த்வாம்* என்றும் வேதாந்தவாசிரியர் பணித்தபடி நான்முகனுடைய அயமேத வேள்வியில் அவதரித்தவர் தேவப்பெருமாள். அது க்ருத யுகத்தில். அந்த யுகத்தில் அப்பிரமனுடைய திருவாராதனம்; இரண்டாவதான த்ரேதாயுகத்தில் கஜேந்த்ராழ்வானுடைய திருவாராதனம்; மூன்றுவதான த்வாபரயுகத்தில் ப்ருஹஸ்பதியின் திருவாராதனம். நிகழுமிந்த கலியுகத்தில் திருவனந்தாழ்வானுடைய திருவாராதனம்—என்று இவ்வடைவு புராணவிதிதம். இப்படி ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொருவர் திருவாராதனம் செய்து போருவதற்குரிய இதிஹாஸமும் ஹஸ்திகிரி மாஹாத்மியத்தில் விசதம். த்ரேதாயுகத்தில் கஜேந்திராழ்வானுக்குச் செய்தருளின அநுக்ரஹமொன்று மட்டும் இங்ஙனே மஹோத்ஸவமாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

இதிஹாஸ புராணங்களில் பக்தாநுக்ரஹ கதைகள் பலபல விருந்தாலும் கஜேந்த்ராநுக்ரஹ கதைக்குத் தனிச் சிறப்புண்டு. சிறந்த சாஸ்த்ரார்த்த மொன்றை நிர்ணயித்துக் கொடுப்பதாகிற சிறப்பாம் அது. அதனைச் சிறிது விவரித்தநுபவிக்கிறேனிங்கு.

கஜேந்திர கதையை அறியாதாரில்லை. பரமபக்தனான கஜேந்திராழ்வான் பெருமாளுக்காகப் பூப்பறிக்க வொரு தடாகத்திலிறங்க, முதலைவந்து காலைக்கதுவ *கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே* என்னும்படி யானை தரைக்கிழுக்கவும் முதலை நீருக்கிழுக்கவுமாய் நெடுங்காலம் செல்ல பிறகு கஜேந்திரன் வலிமாண்டு ஆதிமூலமேயென்றழைக்க, எம்பெருமான் திருநாட்டினின்று கருடாரூடனாய்ப் பதறியோடிவந்து. *குட்டத்துக்

கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தானென்னும்படி அருள்செய்தானென்பது கஜேந்திரமோக்ஷ கதை. ஸாமர்த்தியவான்கள் இதை மிக விஸ்தரித்துப் பேசலாம். கதையின் ஸாரம் இவ்வளவே; ஆனாலும் இந்த இதிஹாஸத்திலிருந்து அரிய பெரிய சாஸ்த்ரார்த்தமொன்று சிக்ஷிதமாகிறபடியை இங்கு முக்கியமாக நிரூபிக்க விரும்புகிறேன். நாஸ்திகர்கள் இந்தக் கதையையே கல்பிதம் என்று ஸஹஸா சொல்லிவிடுகிறார்கள். ஆஸ்திகர்களுங்கூடப் பலர் சங்காகளங்கித மநஸ்கர்களாய்க் கிடக்கின்றனர். கஜேந்திரன் பரமபக்தனாகவே யிருக்கட்டும்; அவனையொரு நீர்ப்புழு நலிந்ததென்று, அரைகுலையத் தலைகுலைய இதற்காகப் பரமபதத்திலிருந்து ஓடிவரவேணுமோ பகவான்? அவனிடத்தில் அப்ரதிஹதமான ஸங்கல்பசக்தியொன்றுண்டே; அது எங்கே போயிற்று; "க்ராஹ: நஷ்டோ பவது; கஜேந்த்ர: ரக்ஷிதோ பவது" என்று திருவுள்ளத்திலே நினைப்பிட்டால் ஆகாததுண்டோ? மற்றொன்றுங்கேண்மின்; மடுவின்கரையிலே யெழுந்தருளின எம்பெருமான் முதலையின் மீது திருவாழியாழ்வானைப் பிரயோகித்துக் காரியங்கொண்டதாக "க்ராஹம் சக்ரேண மாதவ:" "ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்து சென்று நின்றாழி தொட்டானை" இத்யாதி ப்ரமாணங்களாலறிகிறோம். அந்தத் திருவாழியாழ்வான் "கருதுமிடம் பொருது கைநின்ற சக்கரத்தன்" என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே தான் நொடிப்பொழுதில் காரியம் ஸாதித்து வரவல்லவன்; அத்திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் எளிதாகக் காரியமாகாதோ? எம்பெருமான் தானே பதறியோடிவந்தது எதற்காக? என்று நாஸ்திகர்கள் கேட்டால் விடைகூறியாகவேண்டுமன்றோ? புராணம் சொல்லியிருக்கிறதென்றால் த்ருப்தியாகுமோ?

இக்கேள்வியை நம்மாழ்வார் எம்பெருமானை நோக்கிக் கேட்டு ஸமாஹிதரான படியை அவ்வாழ்வார்தாமே திருவாய்மொழியில் (3-1-9.) *மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தையாய்* என்கிற பாட்டிலே வெளியிட்டருளினார். இதில் முதலடியாலும் மூன்றாமடியாலும் திருவாழியாழ்வானுடைய சக்தியையும் ஸங்கல்பரூபஜ்ஞானத்தின் சக்தியையும் பரக்கப்பேசி, [புள்ளூர்ந்து தோன்றினையே.] இவற்றாலே காரியங் கொள்ளாதே கருடாரூடனாய்ச் சென்று மடுவின்கரையிலே சேர்ந்தாயே, இந்த ப்ரயாஸம் எதற்காக? என்று ஆழ்வார் கேட்டதற்கு, எம்பெருமான் ஆழ்வாருடைய திருச்செவியிலே [தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினேன்] என்றான். அதுகேட்டுப் பரமத்ருப்தியடைந்த ஆழ்வார் அதைத் தம் திருவாக்காலே அநுவதித்தருளினார். இப்போது கேள்விக்கு என்ன ஸமாதானம் வந்ததென்னில்; கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானை நோக்கி "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந!, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ." என்றான். (அதாவது) என்றேனுமொருநாள் அழிந்தே போகக்கூடியதான இவ்வுடலுக்காக நான் கரையவில்லை; எம்பெருமானே! உன்னை ஸேவித்து உனது பொற்றாமரையடிகளிலே இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்காகவே கரைந்தேனென்றவாறு. இப்படிப்பட்ட ஆவல்கொண்ட பக்த சிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்ட முடியாதன்றோ. திருவாழியையிட்டு முதலையைத் துணிக்கலாமேயொழிய (மேலேசொன்ன) கஜேந்திரனாசையைத் தலைக்கட்டப்போமோ? நேரில் வந்து நின்று திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்க வேண்டும் என்னும் சீரிய பொருளை ஆழ்வார் இப்பாசுரத்திலே அமைத்துவைத்தார்.

"'பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவர்'' என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின்படி அருளிச் செயலைக்கொண்டே ஸூத்ரார்த்த மொருங்க விட்டருளும் பாஷ்யகாரர் மேலே விவரித்த பாசுரத்தை ஸ்ரீபாஷ்யத்தில் மிக நல்லவிடத்தில் பொருந்தவைத்தார். எங்கேயென்னில்; அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் இந்த மஹாநிதி யுள்ளது. அங்கு பரம புருஷனுக்கு சரீரஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்குமிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீரபரிக்ரஹம் பகவான் செய்தருளுகிறபடியை நிரூபித்துவருகையில் *பரித்ராணாய ஸாதூநா மித்யாதி கீதாவசனத்தை யெடுத்துக்காட்டி ''ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ் து துஷ்க்ருதாம் விநாச:; ஸங்கல்பமாத்ரேணாபி ததுபபத்தே:'' என்றருளிச் செய்தார். எம்பெருமான் அவதாரம் செய்தருளுவது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்; துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்பமாத்திரத்தினாலும் ஆகக்கூடிய தாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று என்பது மேலெடுத்துக்காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் பொருள். துஷ்டர்களைத் தொலைப்பது ஸங்கல்பஸாத்யமாகிருப் போலே ஸாதுபரித்ராணமும் ஸங்கல்ப ஸாத்யமாகக் கூடாதோ ? 'ஸாதவோ ரக்ஷிதா பவந்து' என்று பகவான் ஸங்கல்பிக்க முடியாதோ ?; தாராளமாக முடியுமே. அப்படி யிருக்க துஷ்க்ருத் விநாசநமே ஸங்கல்பஸாத்யமென்றும் ஸாதுபரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எதுகொண்டு ஸாதித்தாரென்று ஆராயுமளவில், மேலே விவரித்த ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியைக்கொண்டே ஸாதித்தாரென்று அறுதியிடத் தட்டில்லை. உதாஹரித்த திருவாய்மொழிப்பாசுரத்தில் **''தொழுங்காதல் களிறு''** என்றதை ஜீவநாடியாகப்பிடித்து கீதாபாஷ்யத்திலேயே ஸாதுபதத்தை ஆச்சர்யமாக விவரித் தருளினார் ஸ்வாமி. அவ்விடத்துப் பங்க்திகள் பரமபோக்யமானவை; கண்டபாடம் செய்து நித்ய மநுஸந்திக்கத்தக்கவை; ''ஸாதவ:— உக்தலக்ஷணதர்மசீலா வைஷ்ணவாக் ரேஸரா: மத்ஸமாச்ரயணே ப்ரவ்ருத்தா:......மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணா திகம் அலபமாநா: க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா: ப்ரசிதிலஸர்வகாத்ரா பவேயுரிதி மத்ஸ்வரூப சேஷ்டிதாவலோகந ஆலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய...'' இத்யாதி. ஆழ்வார்கள் எம்பெருமானைக்காணாமல் தாங்கள்படும் அலமாப்பை வெளியிட்டருளின பாசுரங்களை மொழிபெயர்க்கும் வண்ணமாகவன்றோ இந்த ஸ்ரீஸூக்திகள் அவதரித்துள்ளன. இப்படிப்பட்ட ஸாதுக்களிலே கஜேந்திராழ்வானையு மொருவனாகக்கொண்டு நேரேயோடிவந்து காத்தருளினனெம்பெருமான். ஆதிமூலமே ! என்று களிறு கதறினது திருநாட்டில் செவிப்பட்டவாறே நடந்த செய்திகளையும் அப்பெருமானுக்குண்டான பதற்றத்தையும் 'என்னுடைய பக்தனை ஒரு நீர்ப்புழுவின் வாயிலே துடிக்கவிட்டுக் கெட்டேன் கெட்டேன்' என்று முடிமேல் மோதிக்கொண்ட படியையும் பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *தேவீஹஸ்தாம்புஜேப்ய: *அதந்த்ரித சமூபதி ப்ரஹிதஹஸ்தம்* யம் பச்யந் விச்வதுர்யாம்* ஸ்ரீரங்கேசய சரணம் மமாஸி* என்கிற நான்கு சுலோகரத்னங்களினால் மிகவற்புதமாகவருளிச் செய்தார். இவை ஒரு தட்டாயும். ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலருளிச்செய்த *விச்வம் தியைவ விரசய்ய* இத்யாதி ச்லோகத்தில் *ஆஜக்முஷஸ் தவ கஜோத்தமப்ரும்ஹிதேந பாதம் பராமம்ருசுஷோபி ச கா மநீஷா* என்கிற உத்தரார்த்தம் ஒரு தட்டாயுமிருக்கும்படியை ஆரேயறிகிற்பார்?

இவற்றுக்கெல்லாம் அடியேனுடைய வியாக்கியானங்கள் உலகம்பரவியிருப்பதனுல் ரஸிகர்கள் அவற்றைக் கண்டுகளிப்பது. உபந்யாஸத்திற்கு அவை மிகப் பாங்கானவை.

இந்த கஜேந்திர கதையில் மற்றோர் அரியபெரிய விசேஷமுமுண்டு. அஃது என்னென்னில்; கஜேந்திராழ்வானை ப்ரபந்ந கோடியில் சேர்த்துப் பேசுகிருர்கள். இவன் செய்த ப்ரபத்தி எத்தகைத்து? என்று ஆராய்ந்து பார்த்தால், ப்ரபத்தி லக்ஷணத்தைப் பலர் பலவாறு கூறினுலும் ஸித்தாந்தமாகத் தேறுவது ஒன்றே. அதாகிறது "பகவத் ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" எனப்படுகிறது நம் மஹாசாரியர்களால். இவன் ஆதிமூலமே! யென்று ஓலமிட்ட பிறகுதானு இவனுடைய ஆர்த்தி பகவானுக்குத் தெரிந்தது? உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியுமவனுக்கு இந்த கூக்குரல் செவிப்படுவதற்குமுன்பு இவனுடைய ஆர்த்தி தெரியாதென்னப்போகாதே. தெரிந்து ஏன் உதவிற்றிலன்? என்ருல், *கஜ ஆகர்ஷதே தீரே* என்னும்படியான ஸ்வப்ரவ்ருத்தியில் அவனிருந்தான்; அது பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியாயிருந்தது. அத்தகைய ஸ்வப்ரவ்ருத்தி கழிந்தவாறே பகவத் ப்ரவ்ருத்தி ஏற்பட்டது. ஆக ப்ரபத்தி லக்ஷண சிக்ஷகன் கஜேந்திராழ்வான் என்கிற ஏற்றமும் இவன்பால் அறியத்தக்கதாயிற்று.

## ஆளவந்தாரும்—எம்பெருமானுரும்.

இன்று ஆடியில் உத்தராடம். ஆளவந்தாருடைய திருவவதாரத்திஞல் புனிதமாய நன்னுளிது. கீழே சில ஸம்வத்ஸரங்களில் அவதாரஸ்தலமான காட்டுமன்னுர் ஸன்னிதிக்கு விடைகொண்டு நாலைந்து நாளிருந்து குணுநுபவம்செய்து மஹோத்ஸவம் ஸேவிக்கும் மஹாபாக்யம் பெற்றிருந்தேன். இவ்வாண்டு அந்த பாக்யத்தையிழந்த சோகத்தை இங்குச் சிறிது குணுநுபவம் பண்ணிப் போக்கிக்கொள்ள முயல்கின்றேன். "ஆளவந்தாரும் எம்பெருமானுரும்" என்று இந்த வியாஸத்திற்கு மகுடமிட்டேன். இவ்விரு மஹாசாரியர் களையும் தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுதுமாகக் கலந்து பரிமாறவொட்டாமல் வஞ்சனைசெய்த தெய்வத்தை அடிக்கடி பழிப்பவனடியேன். எம்பெருமானுர் தாமும் அடிக்கடி யருளிச்செய்துகொண்டிருப்பராம் "நான் ஆளவந்தாரோடே சேர்ந்திருந்தேனுகில் பரமபதத்திற்குப் படிகட்டியிருப்பேன்" என்று. விபவகாலத்தில் இவ்விரு மஹாசார்யர்களும் ஒன்றுசேராமற் போனுலும் அர்ச்சையில் சேர்ந்திருக்கிருர்கள் என்பதைவிட அடியேனதுள்ளத்தகத்தில் இடைவீடின்றிச் சேர்ந்து திகழ்கின்ருர்களென்பதை அடியேன் பெருமையாகப் பாராட்டிப் பேரின்பவெள்ளம் பெருக விஜ்ஞாபிக்கிறேன்.

மணவாளமாமுனிகள் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றேம் முழுதுமக்கவை பொழுதுபோக்காகப்பெற்றேம்" என்றருளிச்செய்த கணக்கிலே பூர்வாசாரியர்களைப்பற்றியும் அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகளைப்பற்றியும் சிந்தனை செய்வது தவிர வேறு போதுபோக்கு அடியேனுக்கு என்ன இருக்கிறது? விசேஷித்து திவ்ய ஸ்ரீஸூக்திகளையருளிச்செய்த ஆசார்ய ஸார்வபௌமர்கள் பக்கலிலே நெஞ்சைப்

பறிகொடுப்பவனடியேன். ஆளவந்தாரையும் எம்பெருமானாரையும்பற்றித் தனியாகவே சிந்தை செய்வது அடியேனியல்பு. ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்திகள் நமக்கு அதிகமாகக் கிடைக்காமற்போனாலும் கிடைத்தவரையில் அமோகமானவை. ஸித்தித்ரயம், ஆகம ப்ராமாண்யம் என்கிற இரண்டு க்ரந்தங்கள் மிக உத்துங்கமானவை. இவற்றில் ஆழ விழிந்து அவகாஹித்தநுபவிக்க இக்காலத்தில் அதிகாரிகள் மிகவும் துர்லபர். அடியேனுடைய அநதிகாரத்தை நோக்கி விஜ்ஞாபிக்கிறபடி. ஆங்காங்குத் தோன்றும் அர்த்த ஸந்தேஹங்களைப்பற்றிப் பெரியார்களைப் பணிந்து கேட்டால் 'ஏதேனும் பாடஸ்கலனமிருக்கும்போல் தோன்றுகின்றது' என்கிறார்கள். அதிப்ரௌட மான சைலி. கீதார்த்த ஸங்க்ரஹமும் ஸ்தோத்ரரத்னமும் சதுச்ச்லோகியும் பேரின்பவெள்ளம் பெருகும் திவ்ய க்ரந்தங்கள். ஸ்தோத்ரரத்னமென்று திருநாமஞ்சாற்றின மஹாசார்யர் எம்பெருமானாராகத்தானிருக்கக்கூடும்.

பெரிய வித்வான்களுக்கு ஸ்தோத்ர நூலென்றால் இளப்பமான எண்ணம். இந்த ஸ்தோத்ர ரத்னத்திற்குத் தனியனிட்டவர்கள் "ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம், ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ர:" என்றிட்டது உட்புகுந்து அநுபவித்தேயென்னத் தட்டில்லை. கூரத்தாழ்வான் ஸாதித்த பஞ்சஸ்தவங்கள், பட்டர் ஸாதித்த ஸ்ரீரங்கராஜஸ்தவாதிகள் பரமபோக்யங்களாயிருந்தாலும் ஸ்தோத்ர ரத்னத்தின் போக்யதை அந்யாத்ருசம் அப்ரமேயம் என்னத்தக்கதத்தனை.

ப்ருந்தாவன ஸந்நிதி ஸ்தாபகரான ஸ்ரீமத் கோவர்த்தனம் ஆத்யரங்காசார்ய ஸ்வாமி உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இந்த ஸ்தோத்ர ரத்னத்தை ஒரு விலக்ஷண ஸ்வரஸந்நிவேசத்தோடு கற்பித்துவைத்தருளினார். அந்தஸ்வர பத்ததி வடநாடெங்கும் பரவியுள்ளது. 1910ஆம் ஆண்டில் ஆனிமாதத்தில் புரீஜகன்னாதத்தில் நடந்த ரதயாத்ரோத்ஸவத்திற்கு ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமியோடுகூட அவ்விடம் விடைகொண்டிருந்தேன். எமார்மடத்தில் தங்கியிருந்தோம். அந்த மடத்தின் விஸ்தாரம் நாலு பர்லாங்கு கொண்டது. மித்தைமேல் திறந்தவெளியான ஹால் நாலாயிரம் நபர்கள் சிரமமில்லாமல் உட்காரக்கூடிய விசாலமான இடமுள்ளது. அந்த இடத்தில் பௌர்ணமியன்றிரவு 8 மணிக்கு உத்தராதி ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்தோத்ர ரத்னாநுஸந்தானத்திற்கென்று வந்து சேரத் தொடங்கினார்கள். ஸ்தோத்ரம் தெரியாதவர் ஒருவர்கூட மேலே வரக்கூடாதென்கிற நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அரைமணியில் ஹால் நிரம்பிவிட்டது. ஸ்ரீ காதி ஸ்வாமி நடுநாயகமாக வீற்றிருக்கிறார். அடியேனும் சிலருமிருக்கிறோம். உத்தராதி ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஸ்தோத்ராநுஸந்தானம் இரண்டுமணிகாலம் நடைபெற்றது. ஐம்பத்தாறு வருஷமாயிற்று. இந்த ஸந்நிவேசத்தை அடியேன் நினையாத நாளில்லை. அப்போதைய ஆனந்தத்தை எந்த ஆனந்தத்தில் சேர்ப்பேன்? ப்ரஹ்மானந்தம் என்கிற பதம் ஏகதேசம். பட்டர் கண்ணனுடைய வேணுகானச் சிறப்பை *சைலோக்ஷிச் ச ஜலாம்பபூவ* என்று தொடங்கிச் சொல்லிவந்து "**த்வம் தேஷ்வந்யதமாம்பபூவித**" என்று தலைக்கட்டினார். வேணுகானத்தில் விகாரமடைந்தவர்களில் கண்ணபிரானும் ஒருவனாயினன் என்று கூறினது பட்டர் ஸாக்ஷாத்கரித்துக் கூறினதாகவல்லாமல் வேறு விதமாக இருக்கமுடியாது. இதனையருளிச்செய்கின்ற கூரத்தாழ்வான் *பஞ்சாபி கிஞ்ச

பரிவ்ருத்தகுணநி பூதாநி உர்வீக்ருசாநு மருதம்பர சம்பராணி* என்று பஞ்சபூதங்களும் விகாரமுற்றதைமட்டுமே யருளிச்செய்தார். "த்வம் தேஷ்வங்யதாம்பபூவித" என்ற வார்த்தைக்கு விண்ணெல்லாமுண்டோவில்லை? அந்த வேணுகான கோஷ்டியை ஏகதேச மாக்கிவிட்டது எமார்மடத்து ஸ்தோத்ர ரத்னகான கோஷ்டி.

நம்முடைய ஸம்பிரதாயத்தில் ஆளவந்தார்க்கு முன்னே ஸ்தோத்ரமருளிச்செய்த ஆசாரியர் ஒருவருமில்லை. பின்னேயிருப்பது தெரிந்தது. பட்டருடைய ஸ்ரீஸூக்தி "பதாநாம் ஸௌப்ராத்ராத் அநிமிஷநிஷேவ்யம் ச்ரவணயோ:" என்று தாமேயருளிச் செய்யும்படியிருந்தாலும் ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்தி மாதுர்யம் உலகில் எந்த வாக்குக்கும் அமையாது. சதுச்சாஸ்த்ரவித்வத்தமராக எழுந்தருளியிருந்த அவருடைய திருவாக்கு இவ்வளவு லலிதமாக அமைந்ததென்றால் இதுவொரு விலக்ஷண பகவத் ஸங்கல்ப நிபந்தனமென்றல்லது வேறொன்றும் சொல்லப்போகாது. பெரும்பாலும் ச்லோகந்தோறும் ஆழ்வாரருளிச்செயற் பொருள்களையே அமையவைத்திருப்பதுதான் ஸ்தோத்ரரத்னத்தின் ஏற்றத்திற்கு ஏற்ற காரணம். அதுதன்னில் "ஸக்ருத் த்வதாகார விலோகநாசயா த்ருணீக்ருதாநுத்தமபுக்தி முக்திபி:, மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்கிற சுலோகம் நிகரற்றது. இதில் முதலிரண்டு பாதங்கள் நம்மாழ்வாருடையபடியை நிரூபிப்பன. நான்காவதுபாதம் அவ்வாழ்வார் திறத்திலே எம்பெருமானிருந்தபடியை நிரூபிப்பது. இதைச் சிறிது உபபாதிக்கிறேன் ஸஹ்ருதய ரஸிகமணிகளின் திருவுள்ளவுகப்புக்காக. **[ஸக்ருத் த்வதாகாரவிலோகந ஆசயா.]** *ஒருநாள் காணவாராயே* என்றும் *கூராராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால் வாராய் ஒருநாள்* என்றும் விண்ணப்பம் செய்தபடியைத் தெரிவிக்கிறது. **[த்ருணீக்ருத அநுத்தமபுக்தி முக்திபி:]** *எம்மாவீட்டுத் திறமும் செப்பம்* என்றதிலே எல்லாமடங்கும். ஆக ஆழ்வார்படி சொல்லிற்றாயிற்று. இனி **[யத்விரஹ: க்ஷணேபி தே துஸ்ஸஹ:]** என்ற நான்காவதுபாதம் மிகமிக ஆழ்ந்து நோக்கத்தக்கதாகவுள்ளது. இந்த ச்லோகம் "......த்ருணீக்ருதாநுத்தமபுக்தி முக்திநா மஹாத்மநா" என்று ஏகவசநாந்தமாகவேயிருக்கலாம். ஆளவந்தாருடைய திருவுள்ளம் அதுதான். ஆனாலும் பஹுவசநாந்தமாக இட்டருளினது க்ராந்திகசைலியென்றே கொள்ளவேணும். இங்கு மஹாத்மசப்தத்தால் நம்மாழ்வாரொருவரே விவக்ஷிதராகிறார். எம்பெருமானுடைய பிரிவு ஆழ்வார்க்கு அஸஹ்யமென்பதற்குப் பலபல பாசுரங்கள் கிடைக்கும். ஆழ்வாருடைய பிரிவு எம்பெருமானுக்கு அஸஹ்யமாகிறதென்று இங்குச் சொல்லப்படுகின்றதே, இதற்கு ஏதேனும் பிரமாணம் கிடைக்குமோ? ஆழ்வார் தாம் வாய்விட்டுப் பாசுரங்கள் பாடினவராகையாலே இவருடைய ஆற்றாமையை இவர் பாசுரங்கள் கொண்டு அறியலாம். எம்பெருமான் ஒரு பாசுரமும் பாடினவனல்லனே; அவனுடைய ஆற்றாமையை அறிவதற்கு மூலமில்லையே; அப்படியிருக்க எதுகொண்டு ஆளவந்தார் இங்கு "க்ஷணேபி தே யத்விரஹ: அதிதுஸ்ஸஹ:" என்று அருளிச்செய்தாரென்று ஆராயவேண்டும். இவ்வாராய்ச்சி மிக அவசியமானதன்றோ. இதற்குப் பல வழிகளில் ஸமாதானம் சொல்லலாம். முக்கியமான ஸமாதானம் கேளீர்.

திருவாய்மொழியில் இரண்டாம்பத்தில் ஆறாவதான பதிகம் *வைகுந்தா மணிவண்ணனே* என்பது. இதில் முதற்பாட்டில் *உன்னைநான் பிடித்தேன்கொள்

சிக்கனவே* என்பது ஈற்றடி. இதன் மருமமறிந்து வியாக்கியானம் செய்தருளாநின்ற ஆசாரியர்கள் ஆழ்ந்து பணித்துள்ள சீரிய பொருளை யார்க்கு எடுத்துரைப்பது? ரஸிகர்களுக்கு உரைக்கின்றேன். கீழ் *அந்தாமத்தன்பு செய்து* என்னும் பதிகத்திலே எம்பெருமான் ஆழ்வாருடனேவந்து கலந்து தான் பெறுப்பேறு பெற்றானாயிருந்தான். அப்படியிருக்கச் செய்தே ஆழ்வார் "அல்லாவியுள்கலந்த" வென்று தம்முடைய நைச்சியத்தைக் காட்டி 'ஐயோ! பொருளல்லாத வென்னோடே இப்படி கலந்து ஏக தத்வமென்னலாம்படி கிடக்கிறானே!' என்று தலைசீய்த்துப் பேசினார். அதிலிருந்து எம்பெருமானுக்கு ஒரு கலக்கமுண்டாயிற்று; 'ஆழ்வார் *வளவேழுலகு பதிகத்திற்போலே நைச்சியாநுஸந்திக்கத் தொடங்கிவிட்டாரே! நம்மை விட்டிடுவர் போலிருக்கிறதே! இவரைப் பிரிந்து நாம் எப்படி தரிப்பது! என்று நைந்து கிடந்தான்; அதனையறிந்த ஆழ்வார் அவனுக்கு அபயப்ரதானம் பண்ணுகிறார் *உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனவே* என்று. எம்பெருமான் (கீதையில்) சரமச்லோகத்தில் (மா சுச:) என்று சொல்லி நம்முடைய சோகநிவ்ருத்தி பண்ணினதுபோல இப்பாசுரம் ஆழ்வார் எம்பெருமானுக்கு (மாசுச:) சொல்லுவது—என்று வியாக்கியானம் செய்தருளுகிறார்கள். திருவாய்மொழி நூற்றந்தாதியில் இது ஸுவ்யக்தமாகக் காணலாம்; அவ்விடத்துப் பாசுரம் வருமாறு:—"வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற தன்மைதனைக் கண்டு உன்னைத் தான் விடேனென்றுரைக்க, வன்மையடைந்தான் கேசவன்" என்பதாம் மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து எம்பெருமான் நைந்தானென்றும், அதுகண்டு ஆழ்வார் அவனைத் தேற்றினாரென்றும் நம் ஆசாரியர்கள் நிர்வஹிக்குமிது மூலத்திற்கு மிகவும் இணங்கியதேயல்லது ஏறிட்டுரைக்குமதன்று. ஆக, எம்பெருமானுடைய விச்லேஷம் ஆழ்வார்க்கு அஸஹ்யமென்பது எப்படி ப்ரமாண ஸித்தமோ அப்படியே ஆழ்வாருடைய விச்லேஷம் எம்பெருமானுக்கு அஸஹ்யமென்பதும் ப்ரமாண ஸித்தமே யென்று கண்டுகொள்க. இப்புடைகளிலே ஆளவந்தார் அருளிச் செய்வதெல்லாம் அருளிச்செயற்கடலில் அவருக்கிருந்த அவகாஹநாதிசயத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டி நிற்கும்.

ஆளவந்தாருடைய தனியன் *யத்பதாம்போருஹத்யாநவித்வஸ்தாசேஷகல்மஷ:, வஸ்துதாம் உபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம்* என்பது. இஃது எம்பெருமானார் அருளிச் செய்தது. ஸ்வாமியருளிய கீதா பாஷ்யத்திற்கு மங்களச்லோகமாகவும் அமைந்துள்ளது இது. ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தைசெய்து தாம் ஸத்தை பெற்றதாகக் கூறியுள்ளது இதில். ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் மட்டுமன்று இங்கு விவக்ஷிதம். மொத்தம் பதினான்கு திருவடிகள் இங்கு உத்தேச்யமாகத் தெரிவிக்கப்படுகிறது. எங்ஙனே யென்னில்; ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்ததே. சிஷ்யர்களைத் திருவடியென்றே வழங்குவது ஸம்பிரதாயமாகையாலே, *பஞ்சாசார்ய பதாச்ரிதரான ஸ்வாமிக்கு ஆசார்யர்கள் ஐவரும் ஆளவந்தாருடைய திருவடிகளேயாதலால் இவர்களும் இங்கு விவக்ஷிதர்கள். இவர்களது திருவடிகள் பத்து. ஆளவந்தார் கொண்டாடின திருவடிகளும் யத்பதாம்போருஹ சப்த விவக்ஷிதமேயாகக் குறையில்லை. *மாதா பிதா யுவதய:* என்கிற சுலோகத்திலே "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுலாபிராமம் ஸ்ரீமத் தத் அங்க்ரியுகளம்" என்று போற்றப்பட்ட இரு திருவடிகள் நம்மாழ்வாருடையவை. ஆகப் பதினான்கு திருவடிகளைத் தாம் தியானித்து ஸத்தை பெற்றதாக ச்லோகரசநா நைபுண்யம் ஸ்வாமிக்கே அஸாதாரணமானது. ... ... ❃

# சாதுர்மாஸ்ய வித்வத்ஸபை.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி மடஸம்ஸ்தானம் மானேஜர் ப்ரஹ்மஸ்ரீ. ம. வி. க்ருஷ்ணமூர்த்தியவர்கள் தெரிவிக்கிறார்கள்.—

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் சாதுர்மாஸ்யவ்ரதானுஷ்டானத்தை காளஹஸ்தி ஸ்தலத்தில் நடத்திவருகிறார்களென்பது ஜகத்விதிதமே. அவ்விடத்தில் பெரியவாள் ஸன்னிதானத்தில் அகிலபாரத வித்வத்ஸபையொன்று 11—9—66 தேதி முதல் 16—9—66 தேதி வரையில் ஐந்துநாள் நடத்த நியமனமாகியிருக்கிறது. (கீழ்க்காணும் விவரப்படி) வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் பரீக்ஷை கொடுக்க விருப்பமுள்ளவர்கள் இந்த வித்வத்ஸபையில் அவகாசம் பெறலாம்.

**(வேதவிபாகம்.)** ருக்வேதத்தில்—ப்ராதிசாக்ய்யகனுந்தம். க்ருஷ்ண யஜுர் வேதத்திலும் சுக்லயஜுர் வேதத்திலும் அப்படியே. ஸாமவேதத்தில் புஷ்பஸூத்ர ரஹஸ்யாந்தம். அதர்வவேத ஸம்ஹிதை.

**(சாஸ்த்ரவிபாகம்.)** **வ்யுத்பத்திவாதம்** — த்விதீயாந்தம். **பாட்ட ரஹஸ்யம்**—சதுர்த்தியந்தம். **வையாகரணலகுமஞ்ஜூஷா**—ப்ராதிபதிகார்த்தமும் ஸுபர்த்தவிசாரமும். **கண்டனகண்டகாத்யம்**—முதல் பரிச்சேதத்தில் ப்ரத்யக்ஷகண்டனுந்தம்.

**(குறிப்புகள்.)** வேதபாகத்தில் வாக்பரீக்ஷைமட்டுமே. மற்ற க்ரந்தங்களில் வாக்பரீக்ஷையும் எழுத்துப் பரீக்ஷையுமுண்டு. வேதத்திலோ சாஸ்திரத்திலோ முதல் வகுப்பில் தேறுமவர்களுக்கு ஐந்நூறு ரூபா ஸன்மானமும் ஜோடி சால்வையும் அளிக்கப்படும். இரண்டாம் வகுப்பில் தேறுமவர்களுக்கு 250 ரூபாயும் ஒரு சால்வையும் பரிசளிக்கப்படும். பயணச் செலவு தனியாகக் கொடுக்கப்படும். பரீக்ஷையில் அந்வயிக்க விருப்பமுள்ளவர்கள் 31—8—66க்குள் "மானேஜர். ஸ்ரீ காமகோடி மடஸம்ஸ்தானம். காளஹஸ்தி" என்கிற முகவரிக்கு விண்ணப்பமெழுதிக்கொள்ள வேண்டியது. இவ்வண்ணமாக மடம் மானேஜர் தெரிவிக்கிறார். ...

# ஸ்ரீமதுபயவே. நல்லான். சக்ரவர்த்தி. தேசூர். ரங்கஸ்வாமி ஐயங்கார் (வைகுண்டவாஸி.)

மேலே குறித்த திருநாமமுடைய ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதிக்கிறூர். இவர் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதியில் அறுபது வருஷகாலம் இடையறுமல் அருளிச்செயல் கைங்கரியம் நிர்வஹித்தவர். தேவப்பெருமாள் ஸந்நிதியில் நடைபெறும் அருளிச்செயல் கைங்கரியத்தின் பெருமை பலர்க்குத் தெரிந்திராது. அதை இங்கு ப்ரஸங்காத் தெரிவிக்கவேண்டியது அவசியமாகிறது. ஸ்ரீ வைஷ்ணவக் கோவில்களில் (அதிலும்) ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திவ்ய தேசங்களில் தினப்படி காலை மாலைகளில் அருளிச்செயல் ஸேவை (திவ்யப்ரபந்த ஸேவா காலம்) நடைபெறுமலிராது. காலை வேளைகளில் திருப்பாவை ஸேவையும், மாலை வேளைகளில் நித்யாநுஸந்தானக்ரமமும் ஸேவிப்பது எங்குமுள்ள வழக்கம். அந்தந்த திவ்யதேசப் பதிகங்களை மாலை நித்யாநுஸந்தானத்தில் சேர்த்து ஸேவித்துவிடுவர்கள். தேவப்பெருமாள் ஸன்னிதியில் ஸேவாக்ரமம் இப்படியன்று. காலைவேளைகளில் நியமேந நாலாயிர திவ்யப்பிரபந்த அடைவிலேயே ஸேவை நடந்து வரும். அதாவது, முதலாயிரம் தொடங்கி தினந்தோறும் ஐம்பது பாசுரங்கள் முறையே ஸேவித்து வருவது. திருச்சந்த விருத்தம், திருவந்தாதிகள், திருவிருத்தம், திருவாய்மொழி போன்ற திவ்ய



ப்ரபந்தங்களை இடையில் (50 பாசுரத்தில்) நிறுத்துவது உசிதமன்றுகையால் அவை ஸேவிக்க நேருங்காலத்தில் ஒவ்வொரு நூறு பூர்த்தியாகவே ஸேவிக்கப்படும். இடையிடையில் திருவீதியுத்ஸவங்கள் நேருவதுண்டே, அப்போது, கீழே விவரித்த நாலாயிர

ஸேவாக்ரமத்தில் எந்த பகுதி ஸேவிக்க ப்ரார்ப்தமாகிறதோ அதுதான் ஸேவிக்கப்படும். திருவீதிகளில் திருவாய்மொழியாயிரம் ஸேவிக்கிற ஸம்பிரதாயம் எங்குமே கிடையாதாத லால் அது ஸன்னிதிக்குள்ளேயே ஸேவிக்கப்படும். மற்ற மூவாயிர திவ்வியப் பிரபந்தங்கள் முறைப்படி நித்ய திருவாராதனத்திலும் திருவீதியுத்ஸவங்களிலும் ஸேவிக்கப்பட்டு வருவது இந்த திவ்யதேசத்திற்கு அஸாதாரணமான சிறப்பு. இந்த க்ரமம் எந்த நாளில் தொடங்கப்பட்டதென்பதை யாருமறியார். இது அவிச்சின்னமாக நடைபெற்று வருகின்றது. ஸம்வத்ஸரத்தில் மூன்று நான்கு பரியாயமாகும்.

தேவப்பெருமாளுக்கு **அருளிச்செயல்பித்தர்** என்று ஒருவ்யபதேசமுண்டு. அதனால்தான் திருவரங்கம் பெரிய கோயிலிலிருந்து திருவரங்கப் பெருமாளரையர் இங்கே வந்து தேவப்பெருமாளை அருளிச்செயல்கானத்தினால் மயக்கி வசப்படுத்தி 'நம் இராமானு சனைத்தந்தருளவேணும்' என்று வரம்பெற்று எம்பெருமானாரைக் கோயிலுக்கு எழுந் தருளப்பண்ணிக் கொண்டு போனது, அந்தஸம்பவமில்லையாகில் ஸகல ஆசாரியர்களும் பெருமாள் கோயிலிலன்றோ மண்டிக்கிடப்பர்கள். "ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய" "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்கிற மங்களா சாஸனங்கள் நமது காஞ்சீபுரிக்கன்றோ பொலிவு பெற்றிருக்கும். தேவப்பெருமாள் எம்பெருமானாரை யிழந்தது அருளிச்செயல்வியாமோஹத்தினால்தான் என்பது ப்ரஸித்தமான விஷயம். அந்த வியாமோஹத்தை இற்றைக்கும் காட்டி வருகிறான் நம் பேரருளாளன். அவன் திருவுள்ள முகக்கஸேவிக்க வல்லவர்களை அவன்தானே அப்போதைக்கப்போது தன் திருவருளாலே யே ஸித்தப் படுத்திக் கொள்ளுகிறான்.

எழுபத்தாறுவது பிராயத்தில் வாழ்ந்து வருமடியேன் பத்தாவது பிராயத்திலிருந்து ஏறக்குறைய ஐம்பது அத்யாபகஸ்வாமிகளை இந்த திவ்யதேசத்தில் ஸேவித்திருக்கின்றேன். அத்யாபகர்களென்று சொல்லக்கூடியவர்கள் எல்லாருமே அத்யாபகர்களல்லர். அருளிச் செயலை ஸந்தேஹவிபர்யயமறக் கற்றிருக்க வேண்டும்; நல்ல நிருடியுள்ளவர்களாயிருக்க வேண்டும். பகவத் கைங்கரியத்தில் இயற்கையான அன்பும் ஆர்வமும் கொண்டிருக்க வேண்டும். குறளாசிரியர் "கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்" என்றொரு குறள் பாடியுள்ளார். (திருக்குறளில் இதுதான் முதற் குறள்.) இது, பொதுவாக கற்றவர்களுக்கு பகவத் பக்தியிருக்க வேண்டுமென்பதை மட்டும் காட்ட வல்லது. பகவானிடத்தில் பக்தி செலுத்துவது பல வகைப்பட்டது. அஷ்டவித பக்தி, நவவித பக்தி—என்று சொல்லப்படுவது நூற்களில் ப்ரஸித்தம். அர்ச்சாவதாரப்ராவண்ய ரூபமான பக்தியைத்தான் பக்தியாகக் கொள்வர் திருமங்கையாழ்வார் போல்வார். அவரு டைய பாசுரங்களில் *உலக மேத்துங்கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே* என்கிற பாசுரம் தலைசிறந்தது. ஆகவே அர்ச்சாவதார ப்ராவண்யம் பூண்டு, தாங்கள் பரிச்ரமப்பட்டுப் பெற்ற யோக்ய தையை அர்ச்சாவதார எம்பெருமான்களிடத்திலே ஸபலமாக்கிக் கொள்பவர்களையே கற்றவர்களாக அடியேன் கருதுவது. காஞ்சீபுர வாஸிகளில் அடியேன் மதித்த பெரியார் கள் கீர்த்திமூர்த்திகளாயுள்ளவர்கள் பலர். அவர்களின் திருவுருவப் படங்களையெல்லாம் சேகரித்து வெளியிட ஆவல் கொண்டிருக்குமடியேனுக்கு இன்று இந்தத் திருவுருவப் படம் ப்ராப்தமாயிற்று. இப்பெரியார் ஒப்பற்ற நிருடிகொண்டு அறுபதுஸம்வத்ஸரங் களுக்கு மேலாகவே அவிச்சிந்நகைங்கரியம் பண்ணின ஏற்றம் பெற்றவர். இந்த ஸ்வாமி அடிக்கடி ஸாதிப்பதொருவார்த்தை—"நான் தப்பினால் அண்ணா எடுத்துக் கொடுக்க வேண்டும், அண்ணாதப்பினால் நான்தானெடுத்துக் கொடுக்க வேண்டும்" என்று. அண்ணா என்பது அடியேனை. இவர் பரமபதித்துப் பதினைன்கு வருடங்களாயின. ...

## ஸ்ரீமதுபயவே. V. N. வேங்கடவரதாசாரியர்ஸ்வாமி. Advocate. Egmore.

முன்னேகாட்டிய மஹான் வைகுண்டவாஸி. இங்கே காட்சிதரும் மஹான் நம்முடைய பாக்யவசத்தினுல் லீலாவிபூதியை அலங்கரித்திருக்குமவர். அடியேனுக்குத் தெரிந்து சென்னையில் பலபல பிரபல வக்கீல்கள் விளங்கினுர்கள். ஸ்ரீ வைஷ்ணவர்களில் மட்டுமன்றிக்கே ஸ்மார்த்தமாத்வர்களில் விளங்கின பல பிரபல வக்கீல்களையும் யானறி வேன். இக்காலத்தில் எல்லா வக்கீல்களும் பெரும்பாலும் Advocate எனப்படுகிறுர்கள். முற்காலத்தில் சிலரே இப் பட்டப் பெயருக்கு உரியரா யிருந்தனர். அன்னவர்களில் மிகச் சிறந்து விளங்கினவர் ஸ்ரீமத். T. ரங்காசாரியார் ஸ்வாமியென்பவர் இவர் ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்தவர். சென்னையில் பெரும் புகழ் படைத்து விளங்கினவர். இந்த ஸ்வாமி பரமபதம் சேர்ந்து ஏறக்குறைய முப்பது வருஷ மாஞலும் இவர் பெருமையை நன்கறிந்த பல மஹான்கள் இப்போதும் பலவிடங்களில் விளங்குகின்றுர்கள். அடியே னுக்கு அவருடைய பரிசயம் விசேஷமாக இருந்தது. காஞ்சீ புரம் தேவப்பெருமாள் தேவஸ் தானத்தில் Trust Board Supervisor பதவியில் அவர் சில வருஷங்கள் அமர்ந்திருந்த படியால் ஸமய விசேஷங்களில் காஞ்சீபுரத்திற்கும் விஜயம் செய்து அநுக்ரஹம் செய்திருக் கிறுர். மிகப் பெருந்தன்மை வாய்ந்தவர்.



அவருடைய ஜாமாதா ஸ்ரீஉவே. V. N. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமியென்பவர் இங்கே ஸேவை ஸாதிக்கிறுர். இந்த ஸ்வாமி அடியேனைவிட மிகப் பெரியவர். நாற்பது வருஷகாலமாகவே இவருடைய பரிசயங்கொண்டிருக்கிறேன். இவருடைய திருவம்சத்

தைச் சேர்ந்த பல பெரியார்கள் அடியேன்பால் பரமகருணை பொலிந்தவர்கள். இவர்களுடைய திருமாளிகைகளில் நடைபெறும் கல்யாண ஸந்தர்ப்பங்களில் சில ஸமயம் அடியேன் விடைகொண்டிருக்கையில் ஸம்பாவநாப்ரகரணத்தில் வம்சபிருதாவளிகள் சொல்லக் கேட்டிருந்தேன். இவர்கள் திருமலைநல்லான் சக்ரவர்த்தி வம்சஸ்தர்களாதலால் ஆசார்யபீடஸ்தர்கள். இவர்கள் அநுஸந்திக்கும் பிருதாவளிகள் அடியேனுக்கு செவிக்கினிய செஞ்சொற்களாயிருந்தபடியால் சில வருடங்களுக்கு முன்னமே குறிக்கொண்டிருந்த அவற்றை ஆத்மத்ருப்திக்காக இங்கே பிரசுரம் செய்கிறேன்.

## தி. ந. சக்ரவர்த்தி வம்ச பிருதாவளி

"ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநா சார்யோபயவேதாந்தாசார்யாணும் ஸ்ரீமந் நாதமுநி சரணாரவிந்த ப்ருங்காயமாநமாநஸாநாம் தத்ப்ரஸாதாதிகத ஸகல சாஸ்த்ரரஹஸ்யாநாம் ஸ்ரீவத்ஸவம்ச ஜாதாநாம் ஸ்ரீமத் திருமலை நல்லான் சக்ரவர்த்தி வம்சகூடஸ்தாநாம் உருப்புட்டுரோச்சான்ஸம்ஜ்ஞகாநாம் தத்ரபவதாம் ஸ்ரீ ம தா ம் வரதாசார்யாணும் ஸம்பாவநா.

ஸ்ரீமத்வேத மார்க்க ப்ரதிஷ்டாபநா சார்யோபய வேதாந்தா சார்யாணும் ஸ்வபக்தவர்ய தநூஜக்ருத்யகரணஸந்துஷ்ட ஸ்ரீவரதராஜதத்த நல்லான் ஸம்ஜ்ஞகாநாம் தப்தாயஸ்துரக ஸமாரோஹண ரூபபணபந்த நிர்வஹண ஸுப்ரீத வ்ருஷபாசலாதீச்வரதத்த ஸ்ரீவைஷ்ணவ சக்ரவர்த்தி பிருதபாஜாம் ஸ்ரீபாஷ்யகார நிதேசாதிகத சதுஸ்ஸப்தத்பங்யதமஸிம்ஹாஸநாசார்யபீட நிர்வாஹ துரந்தராணும் சிஷ்யஸஞ்சாரகாலிக—பூதோடபூர்வபாக சிஷ்யோடோத்தரபாக சிபிகாரோஹண நிர்ஜிதகநகாக்க்ய காலீநாம் அதஏவ பூதவாஹந நாமதேய ப்ரதிதாநாம் மா க்கமத்யே மத்யாஹ்நஸமயே க்ஷுத்பிபாஸாபரீத சிஷ்யஜநாநுக்ரஹாய ஸமீபஸ்தாங் விஷத்ருமாநபி ஸ்வாதுபலாங் க்ருதவதாம், இச்சாகாலகாவேரீ ப்ரவாஹாப்தி ப்ரப்ருத்யத்புத க்ருத்யநிவஹ விக்க்யாதமஹா மஹிமசாலிநாம் பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம் ஆசார்ய பங்க்தி மத்யவர்த்திநாம் தத்ரபவதாம் ஸ்ரீமதாம் ஆசார்யவர்யாணும் ஸம்பாவநா.

பகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வபௌமாநாம் ஸ்ரீநிவாஸாசார்யாணும் மஹாதேசிகாநாம் ஸம்பாவநா."

இந்த பிருதாவளிகளை விசேஷஸந்தர்ப்பங்களில் பலர் கூடிப் பெருமிடறு செய்து அநுஸந்திக்கும் போது கர்ணச்ராவ்யமாயிருக்கும். இத்தகைய பெருமை பெற்ற மஹாவம்சத்தில் தோன்றிய நம் வேங்கட வரதாசார்ய ஸ்வாமிக்கு அடியேனறிந்த விசேஷமான சிறப்பு, கோயில் திருமலை பெருமாள் கோயிலென்கிற திவ்யதேசங்கள் மூன்றிலும் நேரும் உபப்லவங்களை நீதிமன்றம் மூலமாக நிவர்த்திப்பதே. இப்பெரியார் நீடூழி வாழவேணுமென்று பல்லாண்டுபாடி நிற்கிறேன். ... ... ✽

# வேதம்மாவும் வேங்கடம்மாவும் பேசுகிருர்கள்

**(வேதம்மா.)** அம்மா வேங்கடம்! உன்னைப்பார்த்து வெகு நாளாயிற்றே, ஊரில் இல்லையா என்ன? எங்கிருக்கிருய்? உன்னுடைய யோகக்ஷேமம் தெரிந்து வெகுநாளாய் விட்டதே. **(வேங்கடம்.)** இந்த பிணக்கட்டை எங்கிருந்தாலென்ன? எக்கேடுகெட்டா லென்ன? என் வயிற்றெரிச்சல் வீட்டைவிட்டுக் கிளம்புவதற்கே மனமில்லை. என்னைப் பற்றி எதுவும் விசாரிக்கவேண்டாம். **(வேதம்மா.)** வேங்கடம்! என்ன இவ்வளவு வைராக்யமாகப் பேசுகிருய்? எவ்வளவோ உற்சாகமாகவும் தமாஷாகவும் பேசிக் கொண்டிருந்த நீ திடீரென்று இப்படி பேசத்தொடங்கி விட்டாயே; என்ன காரணம்? பிள்ளைக்கு நல்ல உத்யோகமென்றும் உயர்ந்த சம்பளமென்றும் சொல்லுகிருர்களே. மெய்தானே? குடும்பவாழ்க்கை நன்ருகத்தானே நடக்கிறது? **(வேங்கடம்.)** அந்த வயிற்றெரிச்சலைக் கிளப்பாதேயென்று நான் சொன்னுல் அதையே கிளப்பித் தொலைக் கிருயே. என்னை விட்டுவிடு; நான் வீடுபோய்ச் சேருகிறேன். **(வேதம்மா.)** உள்ள கஷ்டத்தை உள்ளபடி எனக்குச் சொல்லாமல் நீ போகவே கூடாது. பிள்ளைக்கு நல்ல உத்யோகமும் உயர்ந்த சம்பளமும் மெய்தானே. மாதம் 500 ரூ. சம்பளமென்று கேள்விப் பட்டேன். என்ன குறையுனக்கு? என்னிடத்தில் உள்ளதைச் சொல்லக் கூடாதா? **(வேங்கடம்.)** பிள்ளைக்கு சம்பளம் 500 ரூ. என்று யார் சொன்னது? 1750 ரூ. சம்பளம். அது தவிர கிம்பளம் ஆயிரம் இரண்டாயிரம் வரும். **(வேதம்மா.)** அப்படியிருக்க ஏன் இவ்வளவு பரிதாபத்தோடு பேசுகிருய்? உன்னுடம்பில் நகையொன்றையும் காணம்; நல்ல சேலையைக் காணம். கிழவர் ஸௌக்கியந்தானே. **(வேங்கடம்.)** என்னைப்போலே அவரொரு ஜீவச்சவம் விழுந்து கிடக்கிருர். நான் வீட்டைவிட்டு வெளியில் தலை காட்டினதே தப்பாய்விட்டது. நான் போகிறேனம்மா. **(வேதம்மா.)** பிள்ளை கொள்ளை கொள்ளையாகப் பணம் சம்பாதிப்பதாகச் சொல்லுகிருய். அப்படியிருக்க ஏன் இவ்வளவு வயிற்றெரிச்சலாக வார்த்தை சொல்லுகிருய்?

**(வேங்கடம்.)** ஆறு இருகரையும் பெருகிளுலும் நாய் நக்கித்தானே குடிக்க வேண்டுமென்கிற வசனம் உனக்குத் தெரியாதா? அவனுக்குப் பணம் வெந்தால் எனக்கு என்ன ஆச்சுது? தம்பியின் பெண்ணைத்தான் கல்யாணம்செய்து வைத்தேன். வீட்டுக்கு வருகிறவரையில் தம்பிபெண்ணுகவேயிருந்தாள். வீடுவந்து சேர்ந்தாளோ இல்லையோ, சண்டாளியாக ஆய்விட்டாள். பிள்ளையாண்டானுக்கு மருந்திட்டு விட்டாள். என் வாயைக்கிளறி வயிற்றெரிச்சலைக் கிளப்பவேண்டாம். **(வேதம்மா.)** பிள்ளை உன்னை யென்ன பண்ணுகிருன்? அடிக்கிருனு? புடைக்கிருனு? **(வேங்கடம்.)** அதுவும் வேணு மென்று உனக்காசையா? நாலுநாள்போனுல் அதுவும் நேருமோ என்னமோ? **(வேதம்மா.)** பின்னை என்னத்தான் நடக்கிறது? அதைச் சொல்லாமல் ஏதேதோ சொல்லுகிருயே. **(வேங்கடம்.)** சொல்லித் தொலைக்கிறேன் கேள். பிள்ளையாண்டானுடைய படிப்புக்காக வீட்டை விற்று வாசலை விற்று காணியை விற்று கண்டதெல்லாம் விற்று எவ்வளவோ சிரமப்பட்டு எவ்வளவோ செலவு செய்தோம். இப்போது நோட்டுநோட்டாகச் சம்பளம் கிம்பளம் வாங்குகிருனே, அம்மா அப்பா கண்ணில் ஒரு பைஸா காட்டுகிருனு? அப்படியே அந்த சண்டாளியிடத்தில் கொண்டு ஸமர்ப்பித்துவிட்டு பெட்டி சாவியை

*

அவள் தாலியில் தொங்கவிட்டு அவளுக்குத் தோப்பிக்கணம் போடுகிறுன். அவள் இப்போது ஆகாசத்திலே யேறிவிட்டாள். இந்த வயிற்றெரிச்சலுக்குப் பரிஹாரமேது?

**(வேதம்மா.)** ஆமாம் ஆமாம்; இந்த காலம் இப்படியாய் விட்டது. வரவர கலி முற்றுகிறது. எனக்கு பெண்ணுமில்லே பிள்ளையுமில்லே. ஒரு கஷ்டமுமில்லாமல் காலம் கழிக்கிறேன். இந்த துக்கத்தை நீ மறந்துவிடு. உனக்கு ஒரு பெண் உண்டே? அவள் ஸௌக்கியமாக வாழ்ந்துகொண்டிருக்கிருளா? அதைச் சொல்லு. **(வேங்கடம்.)** அடி வேதா! இந்த துக்கம் மறைய அதைக் கேட்டாயே, சொல்லுகிறேன் கேள். மாப்பிள்ளைக்கு மூவாயிரம் ரூபா சம்பளம். ஒரு பைசா கூட தன் கையில் வைத்துக் கொள்ளமாட்டார். அப்படியே கொண்டுவந்து என் பெண்ணிடமே கொடுத்துவிடுவர். அமட்டனுக்கோ வண்ணுனுக்கோ இவளிடம் பிச்சை வாங்கித்தான் கொடுக்கவேண்டும். மாமியார் மாமனுர்கள் சொல்லாமலே வீட்டைவிட்டு ஒழிந்துபோய் விட்டார்கள். என் பெண்ணுக்கு எண்ணெய் தேய்ப்பதோ ஸ்னனம் செய்விப்பதோ புடவை யுடுத்துவதோ சாப்பாடு சாய்ப்பதோ எல்லாம் மாப்பிள்ளைதான் செய்து வருகிருர். பல் கூட அவள் கையால் தேய்ப்பதில்லே, அவர்தான் தேய்க்கிருர். பிள்ளையானுலும் பிள்ளையா? தங்கமான பிள்ளை. அவள் கீற்றின கீற்று தாண்டவே மாட்டார். அந்த குணங்களை எத்தனை நாள் சொன்னுலும் போதாது. **(வேதம்மா.)** ரொம்ப ஸந்தோஷம், ரொம்ப ஸந்தோஷம்! மாப்பிள்ளைதான் இப்படி யிருக்கலாமேயொழிய பிள்ளை இப்படி யிருக்கக்கூடாதென்று பகவானை வேண்டிக்கொள். நல்லது. இந்த சந்தோஷத்தை நினைத்துக்கொண்டு அந்த துக்கத்தை மறந்துவிடு. உன் மாட்டுப்பெண்ணைப்பற்றி அவளுடைய தாயாரும் தகப்பனுரும் சந்தோஷப்படட்டும். நல்லது. போய்வா. நானும் போய்வருகிறேன்.

# அமுதனின் (திருவரங்கத்து) அமுதம்.

## (அகராதி)

**ப்ரபந்ந ஸாவித்ரீ**யென்று குலாவப்படும் **'இராமாநுச நூற்றந்தாதி'**, திருவரங்கத் தமுதனுர் ஓங்குமன்பால் இயம்பும் கலித்துறையந்தாதி. இதுதான் பரமபோக்யமா யிருப்பதால், இதுதன்னை ஓத இசையாத நெஞ்சமுளதோ வென்னும்படியாயிருக்கின்றது. இந்த ப்ரபந்தகர்த்தா ஸ்ரீ பகவத் ராமாநுசனின் ஈராறு திருநாமங்களையும் அநுபவிக்கப் பாரித்து, இராமாநுசனென்னும் ப்ரதம நாமாவில் ஆழங்கால்பட்டு, அப்பால்போக வொண்ணுதபடி ஈடுபட்டவிதம் நிதர்சனமாகக் காண்கிறேம். அஸ்மதாதிகளும் அவ்வண்ணமநுபவிக்க ப்ராப்தமாயிருக்கிறது. நித்யாநுஸந்தானக்ரமத்தில் இப்பாசுரங்களை அடைவே ஸேவித்து, " இருப்பிடம் வைகுந்தம் " முதலான மூன்று இறுதிப் பாசுரங்களை சாற்றுமுறையில் அநுஸந்திக்கவேண்டியதாயிருப்பினும், கீழ்க்கண்ட அகராதியும் அத்யந்த அநுபாவ்யமாயிருக்குமென்பதில் ஐயமில்லை. ஆனதுபற்றியே இதைத் தொகுத்துள்ளேன். இதனை கானரூபமாய் ஸேவித்து அடியேனெய்தும் இன்பநிலையை—பரவசத்தைச் சொல்லித் தலைக்கட்டமுடியாது. நம்மிராமாநுசன்பால் ஈடுபட்ட அனைவரும் இவ்வின்புத்தைப் பகிர்ந்துகொள்ளுவாராக. ... ... ...

குவாலியர்,
26-7-'66

**S. ஸத்யமூர்த்தி ஐயங்கார்.**

(ராகம்: அடாணு)

1. அரங்கர் மௌளி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன்.
2. அரங்கன்செய்ய தாளிணைகள் பேர்வின்றிப் பெறுத்தும் இராமாநுசன்.
3. அரங்கன் மலரடிக்கு ஆள் உற்றவரே தனக்கு உற்றவராய்க் கொள்ளும் உத்தமன் இராமாநுசன்.
4. அருமுனிவர் தொழுந்தவத்தோன் இராமாநுசன்.
5. அருள்சுரந்தெல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கனென்னும் பொருள் சுரந்த இராமாநுசன்.
6. அற்புதன் செம்மை இராமாநுசன்.
7. அறம் சீறும் உறுகலியைத்துரக்கும் பெருமை இராமாநுசன்.
8. அறுசமயச் செடியைத் தொடரும் மருள்செறிந்தோர் சிதைந்தோடவந்து இப்படியைத்தொடரும் இராமாநுசன்.

(ராகம்: கானடா)

9. இராமாயணமென்னும் பத்திவெள்ளம் குடிகொண்ட கோயில் இராமாநுசன்.
10. இருள்கொண்ட வெந்துயர்மாற்றித் தன்னீறில் பெரும்புகழே தெருளும் தெருள்தந்த இராமாநுசன்.
11. இறைஞ்சப்படும் பரன் ஈசன் அரங்கனென்று இவ்வுலகத்து அறஞ்செப்பும் அண்ணல் இராமாநுசன்.
12. இன்புற்ற சீலத்து இராமாநுசன்.
13. ஈட்டிய சீலத்து இராமாநுசன்.
14. ஈன்கவிகளன்பால் மயல்கொண்டு வாழ்த்தும் இராமாநுசன்.

(ராகம்: வராளி)

15. உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும்புக்குநிற்கும் குணந்திகழ்கொண்டல் இராமாநுசன்.
16. உணர்வின் மிக்கோர் தெரியும் வண்கீர்த்தி இராமாநுசன்.
17. உண்மைநன் ஞானமுரைத்த இராமாநுசன்.
18. உயிர்கள் மெய்விட்டு ஆதிப்பரனோடொன்றுமென்று சொல்லுமவ்வல்லலெல்லாம் வாதில்வென்ற இராமாநுசன்.
19. உலகோர்களெல்லாம் நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காமாறுவந்த அண்ணல் இராமாநுசன்.
20. ஊழி முதல்வனையே பன்னப்பணித்த இராமாநுசன்.
21. எண்ணருஞ்சீர் நல்லார் பரவும் இராமாநுசன்.
22. எனக்குற்ற செல்வம் இராமாநுசன்.
23. ஒள்ளிய நூல் கற்றார் பரவும் இராமாநுசன்.

(ராகம்: தன்யாசி)

24. காசினியோர் இடரின்கண் வீழ்ந்திடத்தானும் அவ்வொண்பொருள்கொண்டு அவர்பின்படருங்குணன் இராமாநுசன்.
25 கார்கொண்ட வண்மை இராமாநுசன்.
26. காரேய்கருணை இராமாநுசன்.
27. கீதையின் செம்மைப்பொருள் தெரியப் பாரினில் சொன்ன இராமாநுசன்.
28. கீர்த்திப்பயிரெழுந்து விளைந்திடும் சிந்தை இராமாநுசன்.
29. குறையல் பிரானடிக்கீழ்விள்ளாத அன்பன் இராமாநுசன்.
30 கொண்டலனையவண்மை ஏரார்குணத்து இராமாநுசன்.
31. கொல்லிகாவலன் சொல்பதிக்கும் கலைக்கவிபாடும் பெரியவர் பாதங்களே துதிக்கும் பரமன் இராமாநுசன்.
32. கொள்ளக்குறைவற்றிலங்கிக் கொழுந்துவிட்டோங்கிய வள்ளல் இராமாநுசன்.

(ராகம்: பிலஹரி)

33 சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம் உய்தற்குஉதவும் இராமாநுசன்.
34. சலியாப்பிறவிப் பவம்தரும் தீவினைபாற்றித்தரும் இராமாநுசன்.
35. சீரரங்கத்து ஐயன் கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியாமெய்யன் இராமாநுசன்.
36. சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால் வாரிப்பருகும் இராமாநுசன்.
37. செம்மைநூற் புலவர்க்கு எண்ணருங்கீர்த்தி இராமாநுசன்.
38. செறுகலியால் வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த அருந்தவன் இராமாநுசன்.
39. ஞானமென்னும் நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடித்தாள்கள் நெஞ்சத்து உறையவைத்தாளும் இராமாநுசன்.
40. தண்டமிழ்செய்த நீலன்தனக்கு உலகில் இனியான் இராமாநுசன்.
41. தமிழ்த்தலைவன் பொன்னடி போற்றும் இராமாநுசன்.
42. தவம்தரும் செல்வும்தகவும்தரும் நீதிலிராமாநுசன்.
43. தன்னை எய்தினர்க்குத் தன்தகவென்னும் சரண்கொடுத்து வானம் கொடுக்கும் இராமாநுசன்.
44. திக்குற்ற கீர்த்தி இராமாநுசன்.
45. திசையனைத்தும் ஏறும்குணன் இராமாநுசன்.

(ராகம்: மோஹனம்)

46. திருவாய்மொழியின் மணந்தரும் இன்னிசை மன்னும் இடந்தொறும் புக்குநிற்கும் குணம்திகழ்கொண்டல் இராமாநுசன்.
47. துயரகற்றி உயக்கொண்டு நல்கும் இராமாநுசன்.
48 தெரிவுற்ற கீர்த்தி இராமாநுசன்.
49. தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ்தன்னை தன்பத்தியென்னும் வீட்டின்கண்வைத்த இராமாநுசன்.

50. தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்பூண்ட அன்பாளன் இராமாநுசன்.
51. தென்னரங்கன் கழல்சென்னிவைத்துத் தானதில் மன்னும் இராமாநுசன்.
52. தென்னரங்கள் தொண்டர் குலாவும் இராமாநுசன்
53. நம் தலைமிசையே பொங்கிய கீர்த்தி இராமாநுசன்.
54. நல்தவர் போற்றும் இராமாநுசன்.
55. நல்லன்பர் மனத்தகத்தே எப்போதும் வைக்கும் இராமாநுசன்.
56. நல்வேதியர்கள் தொழுந்திருப்பாதன் இராமாநுசன்.
57. நினைவார் பிறவியை நீக்கும் பிரான் இராமாநுசன்.

**(ராகம்: சாவேரி)**

58. பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாயமதமாய் விண்டிட
மெய்ம்மைகொண்ட நல்வேதக் கொழுந்தண்டமேந்திக்
குவலயத்தே மண்டிவந்தேன்ற இராமாநுசன்.
59. பரந்தாம மென்னும் திவந்தரும் தீதில் இராமாநுன்.
60. பல்கலையோர் தாம்மன்னவந்த இராமாநுசன்.
61. பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்தாள் பேராதஉள்ளத்து இராமாநுசன்.
62. பல்லுயிர்க்கும் விண்ணின்தலைநின்று வீடளிப்பான் இராமாநுசன்.
63. பழியைக்கடத்தும் இராமாநுசன்.
64. பாரதப்போர் முடியப் பரிநெடுந்தேர் விடுங்கோனை முழுதுணர்ந்த
அடியர்க்கு அமுதம் இராமாநுசன்.
65. பாவுதொல்சீர் எதித்தலை நாதன் இராமாநுசன்.
66. பின்னைதன் காதலன்பாதம் நண்ணுவஞ்சர்க்கரிய இராமாநுசன்.
67. புகழ்ப்பாண்பெருமாள் சரணும்பதுமத்தாரியல் சென்னி இராமாநுசன்.
68. புண்ணியர்தம் வாக்கில் பிரியா இராமாநுசன்.
69. புவனமெங்கும் ஆக்கியகீர்த்தி இராமாநுசன்.
70. புன்மையிலோர் பகரும்பெருமை இராமாநுசன்.
71. பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த பாமனது
மாறன் அடிபணிந்துய்ந்த இராமாநுசன்.
72. பெருவினையைக் கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்றும் ஒள்வாளுருவி
வெட்டிக்களைத்த இராமாநுசன்.
73. பொய்கைப்பிரான் மறையின் குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும்
கூட்டி ஒன்றத்திரித்தன்றெரித்த திருவிளக்கைத்
தன் திருவுள்ளத்தே இருந்தும் பரமன் இராமாநுசன்.
74. பொய்தவம்போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்த மெய்ஞானத்து இராமாநுசன்.
75. பொய்யைச்சுரக்கும் பொருளைத்துறந்து இந்தப்பூதலத்தே
மெய்யைப் புரக்கும் இராமாநுசன்.
76. பொருவரும் சீர் ஆரியன் செம்மை இராமாநுசன்.
77. பொன்னரங்கமென்னில் மயலேபெருகும் இராமாநுசன்.
78. போற்றரும் சீலத்து இராமாநுசன்.

*

**(ராகம்: தோடி)**

79. மழிசைக்கிறைவன் இணையடிப்போது அடங்குமிதயத்து இராமாநுசன்
80. மன்பல்லுயிர்கட்கிறைவன் மாயனெனமொழிந்த அன்பன் அனகன் இராமாநுசன்.
81. மாமலராள்புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்
புக்குநிற்கும் குணந்திகழ்கொண்டல் இராமாநுசன்.
82. மாயவன் தன்னை வணங்கவைத்தகரணம் உம்க்கன்றென்று
உயிர்கட்கு அரணமைத்த இராமாநுசன்.
83. மிக்கநான்மறையின் சுடரொளியால் கலியிருளைத்துறந்த இராமாநுசன்.
84. யமுனைத்துறைவன் இணையடியாம் கதிபெற்றுடைய இராமாநுசன்.

**(ராகம்: மத்யமாவதி)**

85. வலிமிக்கசீயம் இராமாநுசன்—கலிமிக்க செந்நெல் கழனிக்
குறையல் கலைப்பெருமான் ஒலிமிக்கபாடலை உண்டுஉள்ளங்
கடித்து அதனால் வலிமிக்கசீயம் இராமாநுசன்.
86. வாணன் பிழைபொறுத்த தீர்த்தனையேத்தும் இராமாநுசன்.
87. வாமனன் சீலன் (வாமன துல்ய சீலன்)
88. வேதத்தின் உச்சிமிக்கசோதியை நாதனென்ன அறியாது
உழல்கின்ற தொண்டர்பேதமை தீர்த்த இராமாநுசன்.
89. வைகுந்தம், வேங்கடம், மாலிருஞ்சோலை தன்னெனும்
மாயன் வந்திருப்பிடம் இராமாநுசன்.

**ஸத்யமூர்த்தி.**

# ஸ்ரீஉவே. ஸத்யமூர்த்தி ஸ்வாமியின் பேருதவி.

ஆங்கிலபாஷையை அற்புதமாகக் கற்று மிகத் தெளிந்த ஸம்பிரதாய ஞானமும் பெற்று எழுதும் வல்லமையையும் ஈடுமெடுப்புமில்லாமல் பெற்றிருக்கின்ற பெரியார்களில் ஸ்ரீஉவே. S. ஸத்யமூர்த்திஸ்வாமி தற்காலத்தில் முன்னணியில் நிற்பவர். க்வாலியர் ஸிடியில் வாழ்பவர். ஸதாசார்ய ஸம்பந்தம்பெற்று ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தங்களை நிஷ்களங்கமாக அறிந்தவரென்பது இப்பெரியார்க்குத் தனிச்சிறப்பு. பத்தெட்டு வருடங்களுக்கு மேலாகவே இந்த ஸ்வாமியோடு அடியேன் அடிக்கடி நேர்முகமாகவும் கடித மூலமாகவும் பழகிவருகின்றேன். இவருடைய ஆங்கிலநடையை உலகமெல்லாம் மெச்சுகின்றது. அடியேனுடைய பல வியாஸங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உதவியிருக்கின்றார்; மேன்மேலும் உதவியருள உறுதி கூறியிருக்கின்றார். நேற்றைய ஸ்ரீ ராமாநுஜனில் (212, 213ல்) "நம்மாழ்வாருத்ஸவமும் தேவப்பெருமாளுத்ஸவமும்" என்று மகுடமிட்டு அடியேனெழுதியிருந்த வியாஸத்தை இந்த ஸ்வாமி மிகவும் ரஸித்து அதை ஆங்கிலமாக்கியருளியிருக்கின்றார்; அதனை இங்கு அநுபவிக்க வேண்டுகின்றேன் ஆங்கிலமறிந்த அன்பர்களை.

# ON FESTIVALS OF THE LORD AND HIS DEVOTEES.

The eleven-day long festival of Nammazhvar, the chief of the Vaishnavite Saints and the Brahmotsavam of Lord Devaraja, both conducted recently by the Devarajaswami Devasthanam at Kanchi, went through without any hitch or hinderance, with all the customary pomp and pageantry befitting these annual celebrations Speaking about the festivals of the Deity, the Azhvars and the Acharyas, celebrated by the Vaishnavite world, all over, we are led to meditate on their respective roles, their interaction and their impact on the Vaishnavites.

As between the Lord, and the Azhvars and the Acharyas all of whom we adore and venerate, the Lord's Supremacy is, no doubt, unquestionable. And yet, He considers the Azhvars and the Acharyas, the God-intoxicated gnanies (ஞானி) as His own self and holds them dearest of all, seeing that they solely subsist on Godlove and are soaked in it all the time. Therefore it is, He has enlogised, in Sloka 34, Chapter IV of Bhagvad Gita' 'Tadviddhi pranipatena pariprasnena sevaya, Upadekshyanti te gnanam gnaninastatva darsinah', these sages the great seers = as the propagators of true knowledge of the self, shorn of all doubts and despair, discrepancies and deviations, which the frail human beings, choked with sins and ignorance, are heir to. The Azhvars and Acharyas do a good bit of a job in weaning away the sense-buried and earth-bound commonalty, despair of even the Almighty Lord, and making them God-bound, a thing, which naturally compels the affectionate admiration of the Lord for these Divine Messengars. To put it frankly, but for the miraculous metamorphosis wrought by the Azhvars and the Acharyas, the Lord will be an unknown entity, sunk into oblivion. The manner in whieh Nammazhvar has turned to good account the very duds and riffraffs has well been brought out in the penultimate stanza of Mathura Kavigal's "Kanninun siruthambu" Why go so far? The perplexed mother who describes the peculiar conduct and behaviour of the religious fervom of her daughter (Nammazhvar) "Oorum nadum ulagamum thannaippol avanudaya pehrum thargalum pithatra" (Tiruvoimozhi 6-7-2) indirectly brings out the mass conversion effected by the Azhvar, making all and sundries throughout the length and breadth of the land, sing like him the glory of the Lord and recite His names as vociferously as he did. Likewise, Amudanar has highlighted, in his "Ramanuja Nootran-tadi", the reclamation work carried out by Sri Ramanuja in making the people of this land, straying away from the lord, God-minded The marvellous interaction, rather interdependence between the Lord and the Azhvar-Acharyas

and their mutual adoration fully explain our celebrating their festivals, stemming, as it does, from our adoration of all of them.

But then, we find that the festivals of the presiding Deity are being celebrated everywhere on a much grander scale and with greater eclat than those of the Azhvar-Acharyas. The question being asked by some is, why there should be a distinction of this sort, if as elucidated in the foregoing paragraph, there is mutual adoration between the Lord and the Azhvar-Acharyas, suggestive of our obligation to bestow on them the same degree of love and reverence - an interesting point for examination indeed. In the 432nd aphorism of 'Srivachana Bhooshanam', it has been argued that it would be possible for the disciple to recompense the Acharya, in an adequate measure, only if there were four vibhooties (there are only two vibhooties, (viv) Nitya vibhooti or Eternal land (High Heavens) and the Lila Vibhooti - the sportive universe, (subject to violent fluetuations) and two Gods - the idea being that any reward short of both the worlds and the lord God Himself will be inadequate and, therefore, in order to make a suitable reward, two sets of each would be necessary - an obvious impossibility. The very next choornika (433) goes to stress that only link with the Acharya sets us on the one-way traffic, leading exclusively to the final goal, unlike our bonds with the lord, which operate both ways, depending upon His *modus operandi* (viz) throwing us back again into the whirlpools and eddies of Samsara, solely guided by the credit and debit entries in the ledger account for our good and bad actions respectively, (sure enough, there will be far more of the latter than the former) or granting us 'Moksha' invoking His voluntary redemptive grace. Against this background of doubt and uncertainty it is now crystal-clear that the Acharya is even superior to god, from our point of view. The Acharya is, however, the Lord's gift to us. It is indeed a wonderful cyclic operation = the gift of an Acharya to us by the Lord and the Acharya's gift, in turn, of the Lord to us. The greater of the two gifts, namely, the Acharya, has thus come to us from this point of veiw, the Lord becomes the Superior benefactor. This at once justifies the celebration of the Lord's festivals on a grander scale than those of the Azhwar - Acharyas. What an ingenious and interesting study.

Gwalior<br>16—7—66

S. Satyamoorthi.

# விலக்ஷணஜகதுபகாரம்

ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

(ச்லோகம்.) வேங்கடாசார்ய ஷஷ்ட்யப்தபூர்த்தி ஸ்மாரகபுஸ்தகம்.
விம்ருசந் ஷஷ்டிஸங்க்யாகவார்த்தாமாலாம் ஸமர்ப்பயே.

(வெண்பா.) வேங்கடவர் வீங்குபுகழ் மேதினியி லோங்கிடவே
தீங்கறுநற் செம்மொழிகள் சேர்த்திடவே—பாங்குடனே
பேரருளா ளப்பெருமாள் பேரருளாற் பேசுகின்றேன்
பாருலக முய்யப் பரிந்து.

1. நாம் காவ்யபாடம் வாசிக்கத் தொடங்கும்போது காளிதாஸருடைய ரகுவம்ச காவியத்தையே முந்துறமுன்னம் எடுத்துக்கொள்ளுகிறோம். அதில் முதல் சுலோகம் "**வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ**" என்பது. 'உபமா காலிதாஸஸ்ய' என்றபடி உவமை கொடுத்துப் பேசுவதில் நிகரற்றவராகப் புகழ்பெற்ற காலிதாஸ கவிவரர் தமது காவியத்தை உவமையிலேயே ஆரம்பம் செய்தார். 'நித்யயுக்தர்களான பார்வதீ பரமேச்வரர்களைத் தொழுகின்றேன்' என்று சொல்ல விரும்பிய கவி அவர்களின் நித்ய யோகத்திற்கு நிதர்சனங்காட்டப் புகுந்து "**வாகர்த்தாவிவ**" என்றிட்டது மிகவும் சுவைக்கத் தக்கது. 'சொல்லும் பொருளும் சேர்ந்திருப்பது போல' என்றதை நாம் ஊன்றி ஆராயவேண்டும். சொல்லும் பொருளும் ஒன்றைவிட்டொன்று பிரியாமலிருப்பன என்பதை நாம் அறியாமலில்லை. அறிந்த விஷயமும் ஒருவர் எடுத்துக் காட்டின பின்பே நமது நெஞ்சில் நன்றாகப் பதிகின்றது. காளிதாஸர் கொடுத்துள்ள அருமையான பல உவமைகளுள் இது மிகச்சிறந்ததென்று அடியேன் இளமையிலேயே கிரஹித்தது.

2. இதிலிருந்து நாம் உய்த்துணரத்தக்க விஷயமொன்றுண்டு. அதாவது, சொல் ஸுஷ்டுவாக இருந்தால்தான் அர்த்தம் (பொருள்) ஸுஷ்டுவாக அமையும்; பொருள் ஸுஷ்டுவாக இருக்கவேணுமானால் சொல் ஸுஷ்டுவாக இருக்கவேணும் என்பதாம். 'சொல் எப்படியிருந்தாலென்ன? பழக்கவழக்கங்களினால் நமக்குப் பொருள்பட்டு விடுமானால் சொற்களில் ஏற்றத்தாழ்வு இருந்தாலிருக்கட்டுமே. அதனால் என்ன குடி கெட்டுப்போய்விடும்?' என்று சிலர் தர்க்கிப்பதுண்டு. இது விதண்டாவாத மெனப்படும். அறிவாளிகள் விவேகிகள் என்று பேர்பெற்றவர்கள் இங்ஙனம் சொல்லார்கள். மண்வெட்டியை மமிட்டியென்றும், திருமண் பெட்டியைத் திருமட்டியென்றும் ........ இங்ஙனே பல்லாயிரக்கணக்கான விகார வழக்குகள் உலகில் நடையாடுகின்றன. எழுதும் போது இந்தச் சொற்களை உபயோகிக்கலாகாதென்றும் ஸுஷ்டுவான சொல்வடிவங்

களையே யெழுத வேண்டுமென்றும் எண்ணியிராதவர்கள் இல்லை. 'எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்' என்று பேர்பெற்றவர்கள் கைபோனபடியெல்லா மெழுதாமல் அவதானத்தோடுதான் எழுதி வருகிறார்கள். உலகமெல்லாம் காணும்படியாக அச்சிட்டும் வெளியிடுபவர்கள் மிகுந்த அவதானத்தோடுதான் எழுதுவர்கள் என்பதில் ஸந்தேஹ மில்லை. ஆனால், இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிற மனுஷ்ய ஸஹஜமான குற்றங் களுக்கு வசப்பட்டவர்கள் அவதானங்கொண்டும் பயனில்லாமற்போகிறது. அந்ய தாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களினால் சிலபல சொற்களைத் தவறாகவே யெழுதி வழக்கப் பட்டவர்கள் மேன்மேலும் அந்தத் தீய வழக்கத்தையே அநுவர்த்திக்கச் செய்துகொண்டு போனால் அது உலகுக்குத் தீங்காக முடியும். உபந்யாஸகர்களுக்குப்போல் எழுத்தாளர் களுக்கும் அடியேன் நெடுநாளாகவே உபகாரங்கள் செய்து வருபவனாதலால் இப்போது சில எழுத்தாளர்களுக்கு நன்கு உத்போதனம் செய்யும் முகத்தால் உலகுக்கு மஹோபகார மொன்று செய்ய முயல்கின்றேன். இந்த வியாஸத்திற்கு **விலக்ஷணஜகதுபகாரம்** என்று மகுடமிட்டது ஸபலமாகவேணும்.

3. சுத்தமான ஸம்ஸ்க்ருத பாஷையிலும் சுத்தமான தமிழ்ப் பாஷையிலும் சுலோகமாகவோ செய்யுளாகவோ வசனமாகவோ எழுதுமவர்கள் பெரும்பாலும் ஜாகரூகர்களாகவே எழுதுவர்கள், எழுதுகிறார்கள். தமிழ் வசனமாகவே யெழுதுகையில் ஊடேயூடே ஸம்ஸ்க்ருத பதங்களைச் சேர்த்து எழுதவேண்டிய நிர்ப்பந்த முள்ளவர்கள் சில தவறான வழிகளைக் கைப்பற்றி வருகிறார்கள். தமிழ்ப் பாஷையிலும் ப்ரஜ்ஞை யில்லாமல், வடமொழியிலும் விமர்சஸஹமான ப்ரவேசமில்லாதிருக்க, 'நாம் பேசி வருகிறோம், எழுதிவருகிறோம்' என்பதேகொண்டு தாராளமாக எழுத முன்வருகிறார்கள். 'இப்பவும் இவடம் க்ஷேமம்; அவடம் க்ஷேமத்தைத் தருவிக்கவும்' என்றெழுதக் கற்றிருக்கிறோமே, எதையுமெழுதலாமன்றோ? என்று துணிந்தே காகிதமும் மசியும் தூலிகையும் கைவசமுள்ளதென்றுங்கொண்டு எழுத முற்படுகிறார்கள். உணர்த்தினாலும் உணரமாட்டாத (அல்லது) அவத்தங்களை அகற்றிக்கொள்ள நினைக்கவும் மாட்டாத பிடிவாதக்காரர் பலருண்டு; அன்னவர்களை நோக்கி நாம் எதுவும் எழுதமாட்டோம். கொண்டது விடாமை யென்கிற தீய குணத்திற்கு ஆளாகாமல், எம்பெருமானளித்த விவேக சக்தியை ஸபலமாக்கிக் கொள்ள விருப்பமுடையாரும் சிலரிருக்கக் கூடுமாதலால் அன்னவர்களை வியாஜமாகக் கொண்டு இந்த விலக்ஷண ஜகதுபகாரத்தில் கைவைக்கிறேன். எம்பெருமானார் வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில் "ஸாராஸாரவிவேகஜ்ஞா: கரீயாம்ஸோ விமத்ஸரா:, ப்ரமாணதந்த்ராஸ் ஸந்தீதி க்ருதோ வேதார்த்தஸங்க்ரஹ:" என்றருளிச் செய்ததை நினைப்பூட்டுகிறேன்.

4. சில நாட்களுக்கு முன்பு அடியேன் ஸ்ரீபெரும்பூதூர் விடைகொள்ள நேர்ந்த போது அங்கு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி எம்பார் ஜீயர் ஸ்வாமியை ஸேவித்து வார்த்தை யாடி விடை பெற்றுக்கொண்ட பின்பு ஸ்ரீகார்யஸ்தர் மூலமாக ஒரு புத்தகத்தைக் கொடுத்தனுப்பி இதைக் கடாக்ஷிக்க வேணுமென்று நியமனம் தந்தருளியிருந்தார் ஜீயர் ஸ்வாமி. முகப்பில் ஸ்ரீ பார்த்தஸாரதி உபயநாச்சிமாருடன் ஸேவை ஸாதிக்கப்பெற்ற புத்தகமிது. இதில் சில பண்டிதர்கள் வெவ்வேறு விஷயங்களைப்பற்றி யெழுதிய

வியாஸங்கள் பிரசுரமாகியிருக்கின்றன. இன்னின்னாரெழுதியவை யென்று காணும்போதே எழுத்தின் போக்கு இன்னபடி யிருக்குமென்பது அடியேனுக்கு நன்கு தெரியுமாதலால் ஏடுகளைத் தள்ளிக்கொண்டே போம்போது **சுகர்சுவைத்த வேதக்கனி** யென்பதோர் வியாஸம் கண்ணில் பட்டது. இதை யெழுதினவரின் திருநாமமும் நவீனமாகக் கண்டது. சைலி எங்ஙனே யுள்ளதென்று பார்ப்போமென்று அதனை வாசிக்கக் குதூஹலம் கிளர்ந்தது. வாசித்தேன். முக்கியமாக இந்த வியாஸத்தை வியாஜமாகக் கொண்டே அடியேனுடைய இந்த விலக்ஷணஜகதுபகாரம் அவதரிக்கின்றது. அவரவர்கள் தங்கள் தங்கள் க்ருஹங்களிலே எதையோ சமைத்து உண்கின்றனர். அதில் உப்பு புளிப்பு கைப்பு காரம் கூறப் புறம்புள்ளார் முற்படுவதில்லை. நூற்றுக்கணக்காகவோ ஆயிரக்கணக்காகவோவுள்ள பெருமக்கள் உண்ணச் சமைத்தவற்றிலே சுவைக்கேடுகள் சொல்ல நேர்ந்தால் சொல்லித்தானாகவேண்டும். சொல்லுவது சமையற்காரர்களின் செயல் திருந்துவதற்காகவேயாகும். அதுபோல, பண்டிதர்களென்று பேர் சுமப்பவர்கள் எழுதும் வியாஸங்கள் அமையவேண்டிய அமைதியை அறிவிப்பது அவசியமேயாகும். *ஸர்வதா வ்யவஹர்த்தவ்யம் குதோ ஹி அவசநீயதா* என்று பவபூதி மஹாகவி சொல்லி வைத்தாரென்று கொண்டு அநதிகாரிகள் ப்ரவர்த்திக்கத் தகாதென்பதுதான் இந்த வியாஸத்தின் முழுநோக்கு. முன்னுரையாக இன்னமும் சில முக்கியமான வார்த்தைகளை விஜ்ஞாபிக்கின்றேன்.

5. தமிழ் நூல்களில் ஸம்ஸ்க்ருதபதங்களைச் சேர்த்து எழுதுகிற ஸரணியை



நமக்கு முதன்முதலாகத் திருக்குருகைப்பிரான்பிள்ளான் உபகரித்தருளினார். அவர்க்குப் பின்புள்ள நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை முதலான ஆசாரியர்கள் அந்தப் பத்ததியை வளரச் செய்தருளினார்கள். இந்த பத்ததி இறுதியாக மணவாளமாமுனிகள் பக்கலிலே அநந்யாத்ருசமான நறுமணம் பெற்றதாயிற்று. மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி விந்யாஸ ஸரணி எந்த க்ரந்தத்திலும் கண்டதுமில்லை, காணப்போகிறதுமில்லை. ப்ராஸங்கிகமானவிது நிற்க. பகவத்விஷய ரஹஸ்யாதிகளில் ஆசாரியர்கள் கைப்பற்றினநடைக்கு மணிப்ரவாள நடையென்று பெயர் என்பது உலகப்ரஸித்தம். அவர்கள் ஸம்ஸ்க்ருதபதங்களைத் தமிழோடு கலந்து எழுதியருளினபோது ஸம்ஸ்க்ருதபதங்களுக்கு க்ரந்தலிபியையே உபயோகப்படுத்தினார்களென்பதற்குத் தாளகோசங்களே சான்று பகரும். இந்த மணிப்ரவாள க்ரந்தங்களை அச்சேற்றப்புகுந்த பெரியார்கள் தமிழ்லிபியும் க்ரந்தலிபியுமுள்ள அச்சுக்கூடங்களைத் தேடிப் பிடித்து வெகு சிரமப்பட்டு அச்சிடுவித்தார்கள். சில பெரியார்கள் இந்த சங்கடம் வேண்டாமென்று தெலுங்குலிபியிலேயே முழுதும் அச்சிடுவித்தார்கள். ஸம்ஸ்க்ருதபதங்களை ஸுகமாக வாசிக்க ஸௌகரிய முள்ளதன்றோ விதில். அடியேனும் மணிப்ரவாள க்ரந்தங்கள் பலவற்றையும் இப்படியே தெலுங்குலிபியில் அச்சிடுவித்திருக்கிறேன். நாளடைவில் பல

ஸௌகரியங்களை யுத்தேசித்து முழுதும் தமிழ்லிபியிலேயே அச்சிடவேண்டியதாய் விட்டது. பெரும்பாலும் இந்த பத்ததியே க்ஷீணமாய்விட்டது. இப்போது விமர்சிக்க எடுத்துக்கொண்ட புத்தகமும் இத்தகைத்தே. இதில் ஸம்ஸ்க்ருத பதங்களையெழுதும் வைகரியானது இவர்களுக்கு ஸம்ஸ்க்ருதபாஷையின் நரம்பே தெரியாதென்று தெரிவிக்க வேண்டிய நிலைமையிலுள்ளது. இது ஸாமாந்யமான விஷயமாயிருந்தால் அடியேன் இதை உபேக்ஷித்து நிற்பேன். அத்யந்தம் சோசநீயமாயிருப்பதால் ப்ரஸ்துதவ்யாஸத்தையும், இதை யொட்டிச் சில வியாஸங்களையும் விமர்சிக்கும் வ்யாஜேந உலகுக்கு உயர்ந்த உபகாரம் செய்யவேணுமென்றே துணிந்து முன்வருகின்றேன். ... ... ✽

**முன்னுரை முற்றிற்று.**

6. ஸம்ஸ்க்ருத பதங்களைத் தமிழாக்கும் போதைக்கான நிபந்தனைகள் நன்னூலென்னுமிலக்கண நூலில் உள்ளன. "இணைந்தியல்காலை யரலக்கிகரமும்" என்பது முதலான சில சூத்திரங்கள் செய்யுள் நடைக்கேயொழிய வசனநடைக்கு அவசியமற்றவை. அந்த விதிகளை வசனநடைக்கும் கொள்ளுகிறோமென்றால் தடுப்பாரில்லை. இலக்கண நெறியைப் பின்பற்றி இங்கு அடியேன் ஏதும் எழுதுகின்றிலேனென்பதைப் பண்டிதர்கள் திடமாகக் கொள்ளவேணும். ப்ரக்ருதம் அடியேனுடைய உத்போதனத்திற்கு இலக்காயிருக்கின்ற பண்டிதர்கள் ஸம்ஸ்க்ருபதத்தின் உண்மை நிலையையே உணராது தவறாக எழுதிவருகின்றார்களென்பதை நிரூபித்துத் தெளிவு பெறுத்துவதே இங்கு விஷயம்.

7. இதிஹாஸ புராணங்களை ஆராய வியாஸரால் நியமிக்கப்பட்டிருந்த ரோமஹர்ஷணரின் அதீனத்தில் ஈடுபட்டிருந்தனராக முனிவர்களறுவரைக் குறிப்பிடுகின்ற 'சுகர் சுவைத்த வேதக்கனி' வியாஸகாரர் முதல்வரை திரய்யாருணியென்று எழுதுகின்றார். இங்கு ஸம்ஸ்க்ருதபத ஸ்வரூபமென்னவென்று பார்க்கவேணும். இது தத்திதாந்த பதமென்பதை சாப்திகர்கள் அறிவர்கள். காடகச்ருதியில் "**ப்லக்ஷோ தையாம்பாதி:**" என்றோதப்பட்டு வருகின்றது. த்யாம்பாதியின் புதல்வர் தையாம்பாதியென்பவர். அங்ஙனமே த்ர்யாருணியின் புதல்வர் **த்ரையாருணி**யென்பவர். வையாகரண: என்பதை வய்யாகரண: என்றும், வையாஸிகீ என்பதை வய்யாஸிகீ என்றும், நையாயிக: என்பதை நய்யாயிக: என்றும் (கிம்பஹுநா?) வைசம்பாயந: என்பதை வயிசம்பாயந: என்றும் எழுதுவார் பலருளரன்றோ? அன்னவர்களுக்குத் துணைவராயன்றோ இந்த பண்டிதர் த்ரய்யாருணியென்றெழுதுகிறார். இங்கு முதலெழுத்தில் அகாரம் கிடையாது, இரண்டாமெழுத்தில் யகாரத்வித்வம் கிடையாது—என்பதை இப்பண்டிதர் உணரவேணும். தாடீ பஞ்சகத்தில் "**த்ரய்யா** மாங்கள்ய ஸூத்ரம்" என்றிருக்கிறதேயென்று காட்டவருவரிவர். நிகமாந்தமஹாகுருவருளிய தசாவதார ஸ்தோத்ரத்தில் (த்ரிவிக்ரமாவதாரச்லோகே) "**த்ரையக்ஷம்** மகுடம் புநந்" என்றவிடத்தில் (த்ரய்யக்ஷம்) என்று சில மேதாவிகள் அச்சிட்டிருப்பதையும் காட்டவரலாம். மருளின் மேன்மைதான் விளங்கும். இதை நிறுத்திக்கொண்டு மற்றொரு சொல் வடிவத்திற் செல்வோம்.

8. எழுதுகிறாரிவர்—"உலகமனைத்தும் பிரமையின் தோற்றமென்று பேசும் மதம் எங்ஙனம் ஸ்ரீ பாகவதத்தில் இடம் பெறுமென்பதை ஒவ்வொருவரும் யோசித்துப்

பார்க்க வேண்டும்" என்று. பல வித்வான்கள் கூடி ஆலோசித்துப் பார்த்தார்கள். உலகமெல்லாம் ப்ரமையின் தோற்றமென்றுதான் ஸ்ரீ பாகவதத்தில் அக்ஷரந்தோறும் இடம் பெற்றிருப்பதாகவும், வேறு எந்த மதமும் அதில் இடம் பெறவில்லை யென்றும் ஸந்தேஹகந்தமற நிஷ்கர்ஷித்தார்கள். **[பிரமையின் தோற்றம்]** இங்கு ப்ரமை யென்பது தென்மொழியன்று, வடமொழியே யாகும். இதில் முதலெழுத்தை ப வர்க்கத்தின் முதலெழுத்தாக நினைத்துப் பிரயோகித்தாரா? நான்காமெழுத்தாக நினைத்துப் பிரயோகித் தாரா? என்று வினவினுல் இரண்டத்தொன்று சொல்லியாக வேண்டும். ப வர்க்க ப்ரதமா க்ஷரமாக நினைத்துப் பிரயோகித்தேனென்னில்; ப்ரமா என்னும் வடசொல் "ஆவீறுஜயும்" என்கிற நன்னூற்சூத்திர விதிப்படி ப்ரமை யென்று ஐகார வீற்றதாகப் பிரயோகிக்கப் பட்டதென்று தேறும். ப்ரமா என்னும் வடசொல்லுக்கு யதார்த்தஜ்ஞான மென்கிற பொருள் தவிர வேறொரு பொருள் கிடையாதென்பது ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களறிந்ததே. *யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்* என்கிற பகவத் பாஷ்யகாரருடைய நிரவத்ய ஹ்ருத்யமான கொள்கைதான் இதர ஸகல வைதிக க்ரந்தங்களிற்போல ஸ்ரீ பாகவத மஹாக்ரந்தத்திலும் இடம் பெற்றிருப்பதாக வைதிகவுலகம் முழுதும் நினைத்திருக்க, இந்தமதம் ஸ்ரீ பாகவதத்தில் எங்ஙனம் இடம் பெறுமென்று இப்பண்டிதர் எழுதியுள்ளதைப் பார்க் கையில் 'இவர்க்கு ஏதேனும் சித்த ப்ரமமோ?' என்றுதான் நினைக்க வேண்டி யிருக்கின்றது.

9. இதற்குமேல், ப்ரமையென்பதில் முதலெழுத்து பவர்க்கத்தில் ப்ரதமமன்று; சதுர்த்தம்—என்று விவக்ஷை யென்பர். அப்படியொரு சொல் வடமொழியிலுமில்லை, தென் மொழியிலுமில்லை. ப்ரம: என்கிற ஸம்ஸ்க்ருத பதமுள்ளது. அது ஐகார வீற்றதாக ப்ரயோகிக்கப் படுவதற்கு ஒருவிதமான உபபத்தியும் கிடையாது. ஸ்வாமியெம்பெரு மானார் வேதார்த்த ஸங்க்ர ஹோபக்ரமத்தில் ச்ருதிந்யாயபேதமாய் மோஹநதமோ ரூபமான மதாந்தரத்தின் கொள்கையை அநுவதிக்கின்ற ச்லோகரத்னத்தில் "பரம் ப்ரஹ்மைவாஜ்ஞம் ப்ரம பரிகதம் ஸம்ஸரதி தத்" என்றருளிச் செய்தாரேயல்லது 'ப்ரமாபரிகதம்' என்று ஸாதித்திருக்கவில்லை. பவர்க்க சதுர்த்தாதியான ப்ரமாசப்தம் ஸம்ஸ்க்ருத நூல்களிலும் ஸம்ஸ்க்ருதஜ்ஞ கோஷ்டியிலும் சசவிஷாணதுல்யமேயாகும். சதுர்த்த வர்ணஸ்தர்களில் சிலர் ப்ரமத்தை ப்ரமையென்று வழங்குவதுண்டு; அந்த வழக்கம் இந்தப் பண்டிதர்க்கு எங்ஙனே புகுந்ததோ அறியோம்.

10. இனி அடுத்த சொல்வடிவத்தில் புகுதும். இது மிகவும் அருவருக்கத்தக்கதும் அநியாயமுமானது. பலவாண்டுகட்கு முன் மறைந்த திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியருடைய மருள்களில் இவர்க்கும் பங்குண்டு போலும். வேதாந்திகளின் வாக்கில் ப்ரஹ்மசப்தம் ஒருநாளைக்குக் குறைந்தபக்ஷம் நூறுதடவையாவது வெளிவந்து தீரும். அச்சொல்வடிவத்தை உள்ளபடி க்ரஹிக்க ஆற்றலற்றவர்கள் வேதாந்திகளென்று பெயர் சுமக்கப் பாங்கில்லை. ச்ருதப்ரகாசிகையின் தொடக்கத்திலேயே ப்ரஹ்மசப்த நிஷ்பத்தி க்ரமம் காட்டப்படுகிறது. "**ப்ர்ஹ இதிதாதோ: மநிந்ப்ரத்யயாந்தத்வேந** நிஷ்பந்நஸ்ய ப்ரஹ்மசப்தஸ்ய" என்று. இதனுல் பவர்க்க த்ருதீயாக்ஷரத்தின் மேல் ரேபமும் அகாரமும் சேர்ந்து முதலெழுத்தாகிறது. அதன்பிறகு ஹகாரமகார அகாரங்கள்

சேர்ந்து இரண்டாமெழுத்துள்ளது. இதைத் தமிழில் எழுதினல் ப்ரஹ்ம என்றல்லது வேறுவிதமாக எழுதத்தகாது. பொருளுண்மைக்குச் சேர்ந்த சப்தஸ்வரூபத்தை யறியப் பெருதவர்கள்—அறிய பாக்கியமற்றவர்கள் எப்படியுமெழுதலாம். தத்வஜிஜ்ஞாஸுக்களுக்கு உபகரிக்க வந்த அடியேன் செய்யநினைத்த உபகாரத்தைச் செய்யாதிருக்க முடியுமோ? தாராளமாகச் செய்கிறேன்.

11. இப்பண்டிதர் ப்ரக்ருத வ்யாஸத்தில் ப்ரஹ்ம சப்தத்தை நாற்பத்துமூன்று தடவை இடுகிருர். ப்ரஹ்மம், ப்ரஹ்மபரம், ப்ரஹ்மபாகம், ப்ரஹ்மமீமாம்ஸை, ப்ரஹ்மஜ்ஞானி, ப்ரஹ்மஸூத்ரம், ப்ரஹ்மர்ஷி, பரப்ரஹ்மம், ப்ரஹ்மவாதி, நிர்க்குண ப்ரஹ்மம். என்னுமிந்த பதங்கள் அஸக்ருத் விபரீதமாகவே பிரயோகிக்கப்பட்டுள்ளன. அதையெல்லாம் கணக்கிட்டே **நாற்பத்துமூன்றுதடவை** யென்றெழுதினேன். அதிக மாயுமிருக்கும். இத்தனை பர்யாயங்களில் ஒரு பர்யாயமாவது—தவறிப்போயாவது **ப்ரஹ்ம** என்று விழுந்திருக்குமோவென்று பார்த்தேன். **பிரும்ஹ** என்றும் **ப்ரும்ஹ** என்றுமுள்ளதே தவிர **ப்ரஹ்ம** என்று தவறியும் விழுந்ததில்லை. வேதாத்யயநத்தில் நிரூடியில்லாதவர்கள் பாராயண கோஷ்டியிற்புகுந்து வாயில்வந்தபடி நிர்ப்பயமாய் கோஷிப்பதுண்டு; பெரும்பாலும் தவருகவே தத்தக பித்தக வென்று சொல்லிவரச் செய்தேயும் இடையிடையே அவர்களையுமறியாமல் ருஜுவாகவும் வாயில் வந்துவிடும். அந்த ரீதியில் ஓரிடத்திலாவது இவரையுமறியாமல் ப்ரஹ்ம என்று விழுந்திருக்குமோ வென்று ஆய்ந்து பார்த்தேன்; அந்தோ! அதுகாண அத்ருஷ்ட மில்லையாயிற்றடியேற்கு.

12. **ப்ரும்ஹ** என்றும் **பிரும்ஹ** என்றும் மாறிமாறி யெழுதிவருகிருரிவர். இதில் நான்கெழுத்துக்களுள்ளன. முதலெழுத்தொன்று தவிர மற்ற மூன்றெழுத்தும் அபத்தம் அவத்தம் அஸம்பத்தம். இங்கு (ரு) ஸர்வாத்மநா அப்ரஸக்தம். (ம்) ஸர்வப்ரகாரத்தாலும் அப்ரஸக்தம். (ஹ) ப்ரஸக்திலேசமுமற்றது. வடமொழியில் **உபப்ர்ஹணம்** என்றொரு சொல்வடிவமுண்டு. அதில் **ரு—ம்—ஹ** என்கிற மூன்றெழுத்தும் தாராளமாகவுண்டு. இவற்றுள் **ரு** என்பது உண்டா இல்லையா என்பது தனிப்பட்ட விசாரம். அதைப்பற்றி விவேகிகள் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டியதுண்டு. அதை மேலே விவரிப்பேன். **ரு** உண்டென்று வைத்துக்கொள்வது. ஆக **உபப்ர்(ரு)ம்ஹண**மென்கிற சொல்லில் **ரு—ம்—ஹ** என்னுமிவ்வெழுத்துக்களுண்டேயல்லது **ப்ரஹ்ம**பதத்தில் இவ்வெழுத்துக்கள் புக ப்ரஸக்திலேசமுமில்லை. ஏழேழ்பிறவி தவம்புரிந்தாலும் ப்ரஹ்மசப்தத்தில் இவ்வெழுத்துக்களைப் புகுவிக்க முடியாது முடியாது முடியாதே. ஸம்ஸ்க்ருத பரிசயமுள்ளவராகக் காணப்படுகிற இவரும் இவரைப் போன்றவர்களும் இப்படியே யெழுதிக்கொண்டு போவதற்கு என்ன காரணமென்றல், இவர்கள் ஸம்ஸ்க்ருதோச்சாரணத்திலுங்கூட **ப்ரும்மம் ப்ரும்மம்** என்றே சொல்லிவருகிற அஸப்யமான அபரிஹார்யமான பழக்கந்தான் காரணம். **அஇஉண்** என்கிற (மாஹேச்வர) ஸூத்ரத்திற்கு அடுத்த ஸூத்ரத்தின் முதலெழுத்து இன்னதென்பது சாப்திகர்களுக்குத் தெரியும். அதை இங்கு நாம் எழுதிக் காட்டமுடியவில்லை. ஏன்? அது தமிழில் இல்லாமையால். அது அச்செழுத்தேயொழிய ஹலெழுத்தன்று. ப்ரஹ்மம், பரப்ரஹமம் இத்யாதி சப்தங்களில் அந்த அச்செழுத்துத் தான் ஏறியிருப்பதாக இவருடையவும் இவருடைய ஜ்ஞாதிகளுடையவும் மருள். இல்லையாகில் இங்கே ரு எழுதுவதற்கு ஒருகாலும் கைவராது. **க்ரந்தம்** என்றெழுத

வேண்டும்போதும் (க்ருந்தம்) என்றே எழுதப் பயின்றவர்கள் இம்மஹாநுபாவர்கள். "வ்யாஸமஹர்ஷியும் வைஷ்ணவமும்" என்று மகுடமிட்டெழுதாநின்ற மற்றொரு பண்டிதரும் ப்ரஹ்மபதப்ரயோகம் செய்துவருகிறார். ஆனால் அவர் ஸம்சயாத்மாவாக நிற்கிறார். ஒருகால் (ப்ரஹ்ம) என்கிறார். மற்றொருகால் (ப்ரம்ஹ) என்கிறார். (பக்கம் 18ல்) "ப்ரமஹ சூத்ரபந்தைச்சைவ" என்கிறார். சூத்ரபதத்தில் அவர்க்கு மிக்க ஆவல் போலும். "ஸர்வஸ்ருஷ்டாரமீச்வரம்" என்கிறார். உத்திரம் உத்திராடம் உத்திரட்டாதி யென்று சில பாமரர்கள் வ்யவஹரிப்பதுபோல உத்திரமீமாம்ஸை என்கிறார். "எக்கக்க மெவ்வ சரிதே பணமி கிம் எக்க எக்கஸ்ஸ" என்கிற சாகுந்தலச்லோகமே நினைவுக்கு வருகிறது. (இவருடைய மருள்கள் மேலே விரிவாக விளங்கும்.)

13. இதெல்லாம் அச்சுப்பிழையேயொழிய அறிவில்பிழை அணுவளவும் கிடையாதென்று ஏகாந்தத்திலே சிலரோடு சொல்லிக் கொள்ளுவர்கள். 'அச்சுப்பிழைகளைப்பற்றிக் கொண்டு ஆரவாரம் செய்கிறார்' என்றும் சிலரோடு உசாவி க்ருதக்ருத்யராவர்கள். அச்சுப் பிழையோ ஹல்லுப்பிழையோ எல்லாம் விவேகிகளுக்கு விசதமாகும். இவர்க்குத் துணையான மற்றொருவர் "**தேசிகன் வளர்த்த உபயவேதாந்தம்**" என்றொரு வியாஸமெழுதியுள்ளார். அதில் விஷய விந்யாஸ க்ரமம் எத்தகைத் தென்றால்—*யஸ்யஜ்ஞான தயாஸிந்தோரகாதஸ்ய* என்றும் *அகாத பகவத்பக்தி ஸிந்தவே* என்றும் *தயாஸிந்தோ! பந்தோ!* என்றும் *பந்தூந் ஸகீந் குரூந்* என்றும் *குருணா தத்தம் ப்ரதிபத்யாதிகம்* என்றும் *அதிகஸ்யாதிகம் பலம்* என்றும் சொல்லுகிறபடியே பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹனராய், *நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா என்று பாஷ்யகாரர் உதாஹரித்த சதபத ப்ராம்மண சாகாஸஞ்சாரியான தாபநீயோபநிஷத்தும் சொல்லி வைத்தது. அதேபோல *ஸ்யாத் குளீர: கர்க்கடக:* என்னப்பெற்ற வஜ்ரதண்டம் த்ரிதண்டமென்கிற *பரிஹர மதுஸூதந ப்ரபந்நாநென்னும் பரமஸாத்விகர்களுக்கு எதிரில்லை யென்பது ப்ரஸித்தம். இது ரொம்பவும் ப்ரஸித்தமான விஷயம்"....... இப்படியே ஓயாமல் செல்லுகின்ற உபந்யாஸமோ வ்யாஸமோ உண்டே அது இதுதான் என்னத்தட்டில்லை. இவர்கள் சப்தங்களையும் ஸூக்திகளையும் ஸ்ரீ ஸூக்திகளையும் கொலைசெய்கிறவிதம் சொல்லத்தரமன்று. இவர் தம்முடைய வியாஸத்தின் முடிவில் "**தேசிகன் மாதிரி**" என்று தொடங்கிப் பத்தெட்டு வரிகள் எழுதியிருப்பது ரஸவத்தரம். ப்ரக்ருதம் எழுதவேண்டிய விஷயம் அது. அது வெகு அழகாக எழுதப்பட்டுள்ளது. எழுத நியமித்தவர்களின் மனோரதமும் பூர்த்திபெற்றது. அவ்வளவோடு நிற்பது அல்லது அதைப் பன்னியுரைத்து நிற்பது அழகியது. தலைகாலில்லாத மற்ற விஸ்தரங்கள்—காடு பாய்ந்த கந்தைப்புராணங்கள் ஏதுக்கு? நிகழும் ஸம்வத்ஸரத்தின் பொருளைப் பெறுவதற்குத் தானே. பெறுகபெறுக பேரின்பவெள்ளம் பெருகப் பெறுக.

14. இவர் உதாஹரிக்கிற திருவாக்குக்களெல்லாம் விபரீதம். வரிசையாகக் கேளுங்கள். ஸ்தோத்ர பாஷ்யத்தில் திருவாய்மொழியின் வைபவ பரமாக ஸ்வாமி ஸாதித்த ஸ்ரீ ஸூக்திகளை யெடுக்கிறார் "ஸர்வோபஜீவ்யை: உபப்ரஹ்மணை:" என்று முடிக்கிறார். ஸ்தோத்ரபாஷ்யம் எத்தனை பதிப்பேறியிருக்கிறது. ஒருபதிப்பிலாவது இந்த அபசப்தம் காணமுடியுமா? அபத்தப் பதிப்பு என்று கழிக்கப்படும் பதிப்புகள் சில

வுண்டே; அவற்றிலாவது காணமுடியுமா? முந்தின பண்டிதர் உபப்ர்ம்ஹண பதத்தில் மருள் கொண்டிலரென்று மகிழ்ந்திருந்தேன். அந்த மகிழ்ச்சியையும் தொலைக்கிறாரிவர். ப்ரஹ்ம சப்தத்தில் எந்த மூன்றெழுத்துக்கள் இருக்கவேண்டுமோ, எந்த மூன்றெழுத்துக் களை அந்த பண்டிதர் தள்ளினாரோ, எந்த மூன்றெழுத்துக்கள் இங்கே புகுவதற்கு ப்ரஸக்தியே யில்லையோ அந்த (ர ஹ். ம.) மூன்றெழுத்துக்களை இவர் இங்கே புக விடுகிறாரந்தோ! இப்படி தேசிகன் ஸாதித்ததாக அவர் திருமுடியிலேற்றி வைத்தார். உபநிஷத்தில் *ப்ர(ரு)தகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா* என்றொரு வாக்யத்தை யெடுக்கிறார். இதில் முதலெழுத்து ஸம்யுக்தாக்ஷரமன்று; [ப்ரத்யக்ஷம் ப்ரலாபம் இத்யாதிகளில் முதலெழுத்துப்போலன்று.] அதை ஸம்யுக்தாக்ஷரமாக ப்ரமித்து *ப்ரதகாத்மாநம்* என்றதோடு நில்லாமல் "ஸேவ்யத்வாதீந் தசார்த்தாந்" என்கிற தேசிக திவ்ய ஸூக்தியை அநவஸரமாக உதாஹரித்து, தான் மருண்ட ப்ரதக் பதத்தை அதிலும் புகுத்தினார். இதனிடையில் "சேர்ப்பாரைப் பக்ஷிக ளாக்கி என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீ ஸூக்தியிலும் இவ்வர்த்தம் காணலாம்" என்கிறார். இவர் தாம் கண்டவராயிருந்தால் இங்கு எங்ஙனே யெழுதியிருக்கவேணுமென்னில்; "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி இத்யாதி ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீ ஸூக்தியைத் திருவுள்ளத்திலே கொண்டு ஸ்வாமி தேசிகனும் *தேசிகாஸ் தத்ர தூதா:* என்றருளிச் செய்தார்" என்றெழுதியிருக்க வேண்டும். தேசிக திவ்ய ஸூக்தி யநுபவம் செய்து போருகிற ப்ரகரணத்திற்கு இப்படி யெழுதுவதன்றோ பொருந்தும். "பாஞ்சால தேசத்து ராஜாவின் பெண்ணை" என்று தொடங்கியும், "எம்பெருமான் விஷயத்தில் தமிழ்ப்பாஷையால் பாடுவது" என்று தொடங்கி யும் தேசிக திவ்ய ஸூக்தியின் பொருளாக இவரெழுதியிருப்பவற்றையும் "திருவாய்மொழி



யின் நம்பிள்ளை வியாக்கியானத்திலிருந்து தேசிகன் ஸங்க்ரஹித்தருளினார்" என்றெழுதி யிருக்கவேண்டும். அதுவன்றோவுண்மை. அத்தகைய ப்ராமாணிக பத்ததி எங்கிருந்து வரப்போகிறது? அது கிடக்க.

15. ஆழ்வார்களிடத்திலும் அருளிச் செயல்களிடத்திலும் ப்ராவண்யத்தை ஏறிட்டுக் கொள்ளத் தொடங்கின (அல்லது) அபிநயிக்கத் தொடங்கின நவீனர்கள் *செய்யதமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே யென்றல்லவா நம் தேசிகன் ஸாதித்திருப்பதென்று சொல்லி ஆனந்த பாஷ்பத்துக்கு அரைபலம் மிளகு கதையாய் பாஷ்பம் விடுவதுண்டு. "எந்த தமிழ்மாலைகளைக் கொண்டு எந்த தெளியாத மறைநிலங்களைத் தெளிந்தார் ஸ்வாமி" என்று இவர்களைக் கேட்டாலோ

வாய்திறக்க வழியில்லை. அது எப்படியாவது தொலையட்டும். இந்தப்பாட்டை நவீனர்கள் அதிகமாகக் கையாள்வது வழக்கம். அதுவும் அடியேனுடைய உபந்யாஸங்களில் கேட்டும் வியாஸங்களில் கண்டுமேயென்று சபதமிட்டுச் சொல்வேன். இந்தப் பண்டிதரும் இதைக் கேட்டிருக்கிறார். இதை ப்ரக்ருத வியாஸத்தில் உதாஹரிக்க ஆசைகொண்டார். செய்யதமிழ் மாலைகளென்பதை விட்டிட்டு *செய்யதமிழ் மறைகள் நாம் தெளியவோதி* என்று காட்டுகிறார். இப்படியொரு பாடமிருப்பதாக எங்கேனும் கண்டதுண்டோ? கேட்டதுண்டோ? கை போன போக்கெல்லாமெழுதி விட்டால் காண்பாரார்? கேட்பாரார்? ஏசுவாரார்? பேசுவாரார்? என்பதன்றோ இவர்களது எண்ணம். உண்மை என்ன தேறுகின்றதென்றால், இவர்கள் எதையும் குருமுகமாகக் கேளாமல் *பத்ரேக்ஷிதோ வா......யத்ருச்சாச்ருத ஏவ வா* என்னும்படியே யாத்ருச்சிகமாகக் காதில் விழுந்தவற்றையே தப்பும் தவறுமாகக் கொண்டு ப்ரவசனலேகனங்கள் பண்ணிப் போருகிறார்களென்பதொன்றே தேறிநிற்கும்.

16. அதென்? தமிழ்மாலைகளென்னுமதிற்காட்டிலும் தமிழ்மறைகளென்னுமது சிறந்த சொல்தானே; திவ்ய ப்ரபந்தங்களை வெறும் சொல் மாலையாகக் கொள்ளாமல் மறையாகக் கொள்வது விசேஷந்தானே; *தந்தஸம்வத்ஸரம் தந்தஸம்வத்ஸரமென்றும் தமிழ்ப்பாட்டென்றும் சொல்லிக் கொண்டிருந்தவர்களின் வாக்கில் தமிழ்மறையென்று வந்தால் இதைச் சீரும் சிறப்புமாகக் கொள்ளவேண்டியிருக்கப் பழிப்பானேன்? என்று கேட்கக் கூடும். நன்னூலாசிரியர் "முன்னோர் மொழிபொருளேயன்றி அவர் மொழியும் பொன்னே போல் போற்றுவம்" என்று கூறியிருப்பதை நினைப்பது. *ப்ரணமம் லக்ஷ்மணமுநி:* என்றதைவிட்டு *ப்ரணமாந் லக்ஷ்மணமுநி: ப்ரதிக்ர்ஹ்ணது மாமகாந்* என்பதும், ஹயக்ரீவஸ்தோத்ரத்தில் *ஸமேதிஷீரந் தவபாதபத்மே ஸங்கல்பசிந்தாமணய: ப்ரணமா:* என்ற பஹுத்வத்தை யெடுத்துக் காட்டுவது முண்டோ? *கமப்யாத்யம்* என்பது நன்றாயில்லை, *விஷ்ணுமாத்யம் குரும் வந்தே* என்று திருத்தவேணும்—என்பாருண்டோ? இது கிடக்கட்டும்.

17. பெரிய விஷயமொன்று கேளீர். ஸ்ரீ பாஷ்யாதிகாரிகள் [வேதாந்திகள்] அதிகமாகக் கையாளுகிற உபநிஷத்வாக்யம் எதுவென்றால் *ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்* என்பதே. ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி அதிகமாக உதாஹரிக்கிற வேதாந்த வாக்யங்களுக்கு அடியேன் கணக்கெடுத்து, ***ஸர்வம் கல்விதம்*ஸத்யம் ஜ்ஞானம்*தத்த்வமஸி*ஸதேவ ஸோம்ய*** இந்த நான்கு வாக்யங்களே அடிக்கடி உதாஹரிக்கப் படுமவை யென்றும், இவற்றினுள் ***ஸதேவ ஸோம்ய*** என்பதுதான் மிக அதிகமாக உதாஹரிக்கப் படுமதென்றும் ஸுவ்யக்தமாக எடுத்துக் காட்டியுள்ளேன் அடியேனுடைய ஸ்ரீ பாஷ்யப் பதிப்பில். உண்மையில் இந்த வாக்யம் வேதாந்த விசாரத்தில் தலையானதென்பதை வேதாந்திகள் அறிவர்கள். இந்த வாக்யத்தின் உண்மையானவடிவத்தை குருகுல க்லிஷ்டர்கள் மட்டுமே தெரிந்து கொண்டிருப்பர்கள். லோகத்தில் 'ஸோம்ய' என்கிற பதம் அப்ரஸித்தமாய் 'ஸௌம்ய' என்பதே ஸுப்ரஸித்தமாயிருப்பதால் 'ஸதேவ ஸௌம்ய' என்றே பண்டித பாமரவிபாகமற வேதாந்த பண்டிதம் மந்யர்கள் சொல்லி வருவது. அழகான அப்பா! என்று வியாக்கியானமும் பண்ணுவர்கள். இது ஸுப்ர ஸித்த

மான விஷயம். இந்த பண்டிதர்க்கு அந்த பரம்பரையேயாயிற்று. ஸக்ருத்தானால் அச்சுப் பிழையாயிருக்கலாமென்று விட்டிடுவேன். இவர்களின் அபத்தங்களெல்லாம் ஸக்ருத் தன்று, அஸக்ருத். இந்த (ஸௌ) அபத்தத்தை பக்கம் 67லும் 69லும் காணலாம். அந்யத்ராபி காணலாம். ஸோம்ய! என்பது *ஸதேவச்ருதியில் மட்டுமன்று; மற்றும் பலவற்றிலும் சேர்ந்து வருவது. எங்கும் இவர்களுக்கு மருளே.

18. இஃது எழுதிக்கொண்டு போம்போது அடியேனுக்கு நினைவுக்குவந்த தொன்றையும் மறைத்திடாமல் எழுதுகிறேன். பெரிய திருமொழியில் திருநறையூர்ப் பாசுரமொன்றில் (6-7-4.) *மென்மலர்மேல் களியாவண்டு கள்ளுண்ணக் காமர்தென்றல் அலர்தூற்ற, நளிர்வாய்முல்லை முறுவலிக்கும் நறையூர்நின்ற நம்பியே* என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை நுட்பமாக வருளிச்செய்ததொரு சுவைப்பொருளை அடியே னுடைய திவ்யார்த்ததீபிகையில் விவரித் தெழுதியிருக்கின்றேன். மூலத்தில் 'கள்ளுண்ண-அலர்தூற்ற-முறுவலிக்கும்' என்றவற்றில் என்ன இருக்கிறதென்று போய்விடாமல் ஆழ்ந்து பார்க்கவேணும். திருநறையூரின் சோலைவளம் சொல்லுகிறதிங்கு. ஒரு பக்கத்தில் வண்டுகள் களித்து மதுபானம் பண்ணுவதும், மற்றொரு பக்கத்தில் தென்றல் காற்று வீசி மலர்களை யுதிர்த்துத் தூற்றுவதும், இன்னொரு பக்கத்தில் முல்லைப்பூக்கள் மலரத் தொடங்குவதுமாயிருக்கின்ற தென்று சோலையின் நிலைமை சொல்லியிருக்கின்றதத்தனை. இங்கே சொற்சேர்க்கை அமைந்த அழகு அற்புதம். **[கள்ளுண்ண—அலர்தூற்ற—முறுவலிக்கும்.]** வண்டு கள்ளுண்டதாம். தென்றல் அலர்தூற்றிற்றாம். முல்லை முறுவலித்ததாம். இதிலிருந்து ஸ்புரிக்கு மதுகேளீர். **வண்டு** என்று ஒரு ஸ்ரீ வைஷ்ண வனைச் சொன்னபடியாய் அவன் ஏதோ விதிவசாத் மதுபானம் பண்ணிவிட்டான். அதைக் கண்ட (தென்றலென்கிற) ஒருவன் 'இன்னான் மதுபானம் பண்ணினான்' என்று நாட்டிலே அலர்தூற்றப் புறப்பட்டான். இவ்விரண்டையுங்கண்ட (முல்லை யென்கிற) ஒரு ஸாத்விகன் 'ஏதோ விதிவசத்தால் ஒருவன் மதுபானம் பண்ணிவிட்டால் அதைப் பற்றி இப்படியும் ஒருவன் அலர்தூற்ற வேணுமோ? இவ்விருள் தருமாஞாலத்தில் இது ஸஹஜந்தானே யென்று வாளாவிருக்கலாகாதோ வென்று தனக்குள்ளே சிரிக்கிறானாம். எப்படிப் பட்டவனுக்கும் தவறுசெய்ய நேர்ந்துவிடுவது இயல்பென்றும், அதைப்பற்றிப் பழிதூற்ற நேருவதும் இயல்பென்றும், இதுவொரு ப்ரமாதமா? இதை ப்ரகடனம் செய்ய வேணுமாவென்று சில மஹான்கள் நினைப்பது முண்டென்றும் உலகரீதியை யுணர்த்தின படியாகின்றதென்று பெரியவாச்சான்பிள்ளை ஸூசிப்பித்த விநோதார்த்தம்.

19. இவ்வடைவிலே, சில குருகுல விமுகர்கள் தப்பும் தவறுமாக எழுதி விட்டால் அதற்கு இவ்வளவு ப்ரக்க்யாபனம் அவசியமோ வென்று சிலர் கருதலாம். அவர்கள் இந்த வியாஸத்தின் மகுடத்தை மறவாமல் மதியிற்கொள்ளவேணும். இங்ஙனே அந்தபரம்பரையில் தொடர்ந்து வருகிற அவத்தங்களை அகற்றுவதில்தான் முக்கிய நோக் கென்று கொள்ளவேணும். இவ்வகையில் ஆயிரக்கணக்கான உபகாரங்களை உலக மடைந்திருக்கின்றதடியேனால். கீழே யெடுத்துக் காட்ட நேர்ந்த சேட்லூர் நரஸிம்ஹா சாரியரென்பவர் தமது ஷஷ்டி பூர்த்திவரையில் நரஸிஹ்மாசாரியரென்றே எழுதிவந்தார்; 'கவிதார்க்கிக ஸிஹ்மாய' என்றெழுதியே காலங்கழித்து வந்தார். அவருடைய நூற்றுக்

கணக்கான அஸம்பத்தங்களை யெடுத்துக்காட்ட நேர்ந்தபோது இதையுமெடுத்துக் காட்டினேன். க்ஷாமணபத்ரிகையோடு உய்ந்து போனார். *உலகில் திருந்தாதார் தம்மைத் திருத்திய மாறன் போலே உலகைத் திருத்தவந்தாயோ நீ? என்பார்க்கு ஆம் என்றே விடையளிப்பேன். ஆஸ்தாமேதத் ப்ராஸங்கிகம்.

20. ச்ருதீதிஹாஸ புராணங்களிலோ தேசிகாத்யாசார்ய ஸூக்திகளிலோ முறையே பரிசயம் பண்ணாமலும், முக்கியமாக தேசிக திவ்யஸூக்திகளை உள்ளபடி யுணராமலும் அவற்றை அங்கபங்கம்செய்து விஷயப்ரதானம்செய்ய முன்வருகிறார்களே, அதுவன்றோ ஆச்சரியம்! அடியேனிடத்தில் பரமகருணைகொண்ட வேதாந்தவாசிரியர் இவரையும் இவரைப் போன்றவர்களையுங்கொண்டு இப்படியெல்லாம் எழுதுவிக்கிறா ரென்பது உண்மை. பொன்னேபோல் போற்றத்தக்க முன்னோர் மொழிகளை உதாஹரிக்க வேண்டுமிடத்து பயபக்திகள் வேண்டாவா? ஜாகரூகதை வேண்டாவா? எதுவும் ஆசார்ய முகேந க்ருஹீதமாகவில்லையென்பதும் கண்டபாடத்தில் இல்லையென்பதும் தெரிந்திருக் கின்றது. இங்குமங்கும் கேள்வியில் காதில்விழுந்த வசனங்களை, பலர் காண நேரும் வியாஸங்களில் உதாஹரிக்க நினைக்கும்போது மூலநூலைக் கண்ணால்கண்டும் கையில் வைத்துக்கொண்டுமன்றோ எழுதவேண்டும். ஒரு மஹான் பெருமாள் திருமொழி உபந்யஸிக்கிறார்; *அன்னனைய பொற்குவடா மருந்தவத்தனாவேனே* என்றவிடத்து விசேஷமாக ஸாதிக்கிறார். அதை அரைகுறையுறக்கத்தோடு கேட்டுக்கொண்டிருந்த வொருவர் "அன்னனைய பொற்குவடாம் **அனந்தபத்மநாபனே**" என்று ப்ரஸங்கம் செய்யத் தொடங்கி, குலசேகராழ்வார் அனந்தபத்மநாபனைப் பாடவில்லையென்று யார் சொன்னது, இப்படியன்றோ பாடியிருக்கிறார்—என்று அட்டஹாஸம் செய்கிறார். அதே கதையல்லவா இதெல்லாம். இது நிற்க.

21. இந்த பண்டிதருடைய இந்த வியாஸத்தினால் ஒரு விவாதம் தீர்ந்தொழிந்தது. அதாவதென்னென்னில்; தேசிகன் திருவாய்மொழிக்கு வியாக்கியானமாக நிகமபரிமள மென்று அத்புதமான க்ரந்தமொன்று ஸாதித்திருந்தாரென்றும், அதில் எல்லா வியாக்கி யானங்களும் கண்டிக்கப்பட்டொழிந்தனவென்றும், ஆனால் அது லுப்தமாய்ப் போயிற் றென்றும் ஒரு வகுப்பினர் சொல்லியும் எழுதியும் வருவதுண்டே, அதைக் கண்டித் தொழித்தாரிவர். எங்ஙனேயென்னில்; (பக்கம் 69ல்)

"தேசிகன் நிகமபரிமலமென்று மிக விரிவான வியாக்யானம் அருளிச்செய்தாரென்றும் அது லுப்தமாய்விட்டதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். தேசிகனிடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் சென்று எல்லா க்ரந்தங்களுக்கும் அத்யத்புதங்களான வியாக் யானங்களை இயற்றுகின்ற தேவரீர் திவ்யப்ரபந்தங்களுக்கும் ஒரு அத்யத்புதமான வியாக்யானம் இயற்றவேணுமென்று பிரார்த்தித்ததாகவும், அதற்கு தேசிகன் சோழியன் யாவற்றையும் சுவைத்துவிட்டான், நமக்கு சக்கையே காணுமுள்ளது

என்றருளிச்செய்ததாகவும் சிலர் சொல்லுகிறுர்கள். இங்கு சோழியனென்பதால் பெரியவாச்சான்பிள்ளையைக் குறிப்பிட்டாரென்று கொள்க. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர திவ்யப்ரபந்தத்திற்கும் வெகு அழகான மதுரமான கம்பீரமான வியாக்கியானத்தை அருளிச்செய்திருக்கிறபடியினலே நாம் அதற்கு உரை இயற்றவேண்டிய அவசியமில்லை என்று சாதித்தார் என்பதே அவ்வாக்யத்தின் கருத்து.''

என்றெழுதியுள்ளாரிவர். 'அப்படி சிலர் சொல்லுவர், இப்படி சிலர் சொல்லுவர்' என்றெழுதினேனேயொழிய எனது முடிவாக ஒன்றுமெழுதிற்றிலேனேயென்பர். அப்பயதீக்ஷிதரை ஸ்ரீ ராமாயண வியாக்கியானமெழுதும்படி வேண்டிக்கொண்ட சிலர்க்கு அவர் இறுத்த விடையை இவர் இங்கேகொண்டு கூட்டினதே போதுமானது.

22. இவருடைய வியாஸத்தின் முடிவில் ஒரு விநோதம் கேண்மின். ''ப்ரபந்த சாரமென்கிற அத்புதமான ப்ரபந்தரத்னத்தில் *ஆழ்வார்களவதரித்த நாள் ஊர் திங்கள் அடைவு திருநாமங்கள் அவர்தாம் செய்தவாழ்வான திருமொழிகள் அவற்றுள் பாட்டின் வகையான தொகை இலக்கம் முதலியவைகளை மிக ஸ்பஷ்டமாக நிரூபித்து........ வ்யவஸ்தை செய்தது பரமோபகாரமாகும்'' என்றெழுதியுள்ளார். ஆயிரத்துத் தொள்ளாயிரத்தறுபத்தாறுமாண்டிலுமா இப்படியெழுதும் மேதாவி மஹான் இருக்கிறு ரென்று மிக வியக்கிறோம். ஸர்வார்த்தஸித்தியில் *மரீசிகாம்பஸி ஸ்நாத: கபுஷ்பக்ருத சேகர:, ஏஷ வந்த்யாஸுதோ யாதி சசச்ருங்க தநுர்த்தர:* என்றொரு ச்லோகம் காட்டி யுள்ளார் ஸ்வாமி. இது ஸ்வாமியின் ஸ்வகீயகாரிகையோ? அல்லது உதாஹ்ருதவசனமோ? அறியேன். எப்படியாலுலென்ன? ச்லோகம் பரமாத்புதம். அந்த வந்த்யாஸுதன் கங்கை யமுனை காவிரி தாமிரபரணி முதலான ஸகல புண்ய தீர்த்தங்களிலும் ஸ்னானம் பண்ணினவனும். ஆனல் மரீசிகாம்பஸ்ஸில் மட்டும் நீராடப் பெற்றதில்லையென்று குறையுற்றிருந்து அந்த தீர்த்தத்தை நாற்றிசையிலும் தேடித்திரிந்து பெற்றுக் குடைந்தாடினனும். அன்றியும் 'எல்லாப் புஷ்பங்களையும் சூடியிருக்கிறேன். கபுஷ்ப மொன்றுதான் இதுகாறும் கிடைக்கவில்லை, அதுவும் இன்று கிடைத்துவிட்டது' என்று அதையும் பெற்றுச் சூடினனும். சசவிஷாணதநுஸ்ஸையும் ஸம்பாதித்துவிட்டேனென்று சொல்லி அதையும் கையிலே தாங்கிக்கொண்டு பிரபந்தசாரம் பாடிக்கொண்டே போகிறுனும். லௌகிகர்கள் சொல்லுவர்கள் ''ஸுப்ரீம் கோர்ட்டிலும் சென்று அலம்பிக் கவிழ்த்தான வ்யவஹாரத்தை இன்னமும் கிளப்புவதுண்டோ?'' என்று. கிளப்புவதும் ஒருவகையில் உபகாரமே. மஹோபகாரமே. ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யத்தோடு நிற்கவில்லையே; தீபஸாரங்களுமன்றோ அருளிச்செய்தார். ஸம்க்ஷேப ருசியுடையார்க்கு ஸாரமாகவெடுத்துக்காட்டித் தெளிவிக்கவேணுமென்று குதூஹலம்போலுமிவர்க்கு. அப்படியே செய்வோம். ஸ்ரீ பாஷ்யத்தில் ஸப்தவிதாநுபபத்தி கெட்டமென்று ஒன்றுண்டு. அதை ஒருபுடை யொத்திருக்கவல்ல ஏழு விஷயங்களை இங்கு உபஹரிக்கின்றேன்.

# ப்ரபந்தஸார ஸப்தவிதாநுபபத்திகள்

23. (A) ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளை அருளிச்செயலென்றும் திவ்யப்பிரபந்தமென்றும் வழங்காமல் பிரபந்தமென்று வழங்குவது திவ்யப்ரபந்தத்வேஷிகளானார் திரளிலே தோன்றியது. அது பிறகு ஸாமானியர்களான வைஷ்ணவர்களின் வாக்கிலும் புகுந்தது. பூருவாசாரியர்கள், விசிஷ்ய நிகமாந்த மஹாகுரு பிரபந்தமென்று ஒருவர் சொல்லக் காதால் கேட்டாலும் மாய்ந்து போவரே. இக்காலத்திலொருவர் தம்முடைய திவ்யப்ரபந்தத்வேஷத்திற்கும், பூர்வாசார்ய வித்வேஷத்திற்கும் சாச்வதஜயத்வஜமாக ப்ரபந்தரக்ஷையென்று பெயரிட்டு எழுதி வரும்படியான அவத்யம் தேசிகனிடத்தில் ஏறுமா; எங்ஙனே யேறும்? ஒருகாலும் ஏறாது.

24. (B) ஸ்வாமி வரைந்தருளின குருபரம்பராஸாரத்தில் ஆளவந்தார் முதலான ஆசார்யர்களின் ப்ரஸ்தாவத்தில் "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள்" என்று அஸக்ருத் ஸாதிக்கிறார். எம்பெருமானார் ப்ரஸ்தாவத்தில் "திருவாய்மொழி யோதினார்" "திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்" என்றே ஸாதித்திருப்பதைக் காணலாம். இப்படிப் பட்ட மஹாசார்யர் **ப்ரபந்தஸார** மென்று பெயரிட்டு ஒரு ப்ரபந்தம் பண்ணினாரென்கை அநுவதிக்கவும் தகாததே. இது வெளிவ்யவஹாரங்களோடு நின்றாலும் பாதகமில்லை. "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்" என்று நூலினுள்ளும் நுழைந்திருப்பது மிகவும் அருவருக்கத் தக்கதன்றோ. இச்சிறு விஷயத்தை யாராயவல்ல விவேகிகளில்லையா ?

25. (C) எந்த ப்ரபந்தத்தின் எந்த விதமான ஸாரம் இதில் எந்த பாட்டில் பொறித்திருப்பதென்று கேட்டாலோ வர்ஷசத மானாலும் விடையிறுக்க முடியாது. ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரமென்றும், ஸாரஸார மென்றும், த்ரமிடோப நிஷத்ஸார மென்றும் சில ஸாரநூல்கள் ஸாதித் திருக்கிறாரே. இவற்றில் ஏதேனும் கேள்வி பிறப்பதுண்டோ? ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப் பொருள்களைக் கொண்டது ரஹஸ்யத்ரயஸாரம்; அந்த ஸார க்ரந்தத்தின் ஸாரம் கொண்டது ஸாரஸாரம். த்ரமிடோப நிஷத்தான திருவாய் மொழியின் ஸாரங்கொண்டது த்ரமிடோப நிஷத்ஸாரம். மற்றும் அருளாளப் பெருமாளெம் பெருமானார் நடாதூரம்மாள் முதலானாருடைய ஞானஸாரம் ப்ரமேய ஸாரம் தத்வஸாரம் முதலிய க்ரந்தங்களின் திருநாமங்களிலும் விசாரம் தோன்ற ப்ரஸக்தியே கிடையாது. திவ்யப்ரபந்தார்த்த விசாரலேசமுமற்ற சுவடிக்கு ப்ரபந்தசார மென்று ஒருகாலும் ஸ்வாமி பெயரிட மாட்டாரென்றால் இதை மறுக்க நினைப்பவர்களா தேசிக பக்தர்கள் ? ஹாஹா ! என்ன காலக்கொடுமை !

26. (D) சிலர் "ப்ரபந்தங்களின் ஸாரமான வகை தொகைகளை வெளியிடும் நூலாகையாலேப்ரபந்த சாரமெனப் பெயரிட்டிருக்கலாம்" என்று சோதிடம் சொல்லுவதுண்டு. சாரீரகமீமாம்ஸையில் இத்தனை அத்யாயங்கள் இத்தனை பாதங்கள் இத்தனை ஸூத்ரங்கள் இத்தனை யதிகரணங்கள், இதை இன்னாரியற்றினார்—என்று இவ்வளவே விவரித்து ஒருவர் ஒரு நூலெழுதினால் அதற்கு **சாரீரகஸார** மென்று பெயரிடலாம் போலும்.

27. (E) இந்நூலில் முதற்பாட்டைப் பாருங்கள்; "ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள்" என்பது தொடக்கம். அதை ப்ரக்ருதபண்டிதரும் உதாஹரிக்கிறார். *[நாள் ஊர் திங்கள்]* நாளென்பது நக்ஷத்திரம்; ஊரென்பது தெரிந்ததே; திங்களென்பது மாஸம். ஊரை முன்னேயோ பின்னேயோ எங்கும் வைக்கலாம். மாஸ நக்ஷத்ரங்களை மாற்றவே தகாது. இன்ன மாஸத்தில் இன்ன நக்ஷத்ரத்தில் என்பது தானே அடைவு; "ஆழ்வார்களவதரித்த ஊர் திங்கள் நாள்" என்றோ "திங்கள் நாளூர்" என்றோ சொல்லுவதில் யாப்புச் சிதைவு எள்ளளவும் நேராது. 'நாளூர் திங்கள்' என்பதும் இரு தேமாச்சீர்களே. ஊர் திங்கள் நாள் என்பதும் இரு

தேமாச்சீர்களே. திங்கள் நாளூர் என்பதும் இரு தேமாச்சீர்களே. "ப்ரபவாதி ஷஷ்டிஸம் வத்ஸர மத்யே! உத்தராயணே கந்யாமாஸே பராபவ நாம ஸம்வத்ஸரே, தசம்யாம் திதௌ சுக்லபக்ஷே" என்று சொல்லுவது எங்கேனும் கண்டதுண்டோ? இந் நேர்த்திக்குச் செய்யுள் கூடா விட்டாலும் சிரமப்பட்டுக் கூட்டுவர்கள் சிறிய ஞானத்தரும். எளிதாகவே கூடுவதாயிருக்க, விபரீதமாகப் பாடிஞரென்னுமவத்யத்தை ஸ்வாமி திருமுடி மேலா ஏற்றுவது? இப்படியும் ஒரு வீண்பிடிவாதமா?

28. (F) இந்நூலில் *வையகமெண்* என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டது. ஒருவர் செய்து முடித்த பிறகு மற்றொருவர் செய்து நுழைத்த தென்பதில் ஐயுறவேண்டா. இப்பாட்டில் (17ல்) ஆழ்வார்கள் பன்னிருவரையும் பேசி முடித்தபின் "எதிராசர் தம்மோடு ஆறிருவர் ஒரொருவர் அவர் தாம் செய்த—நாலாயிரமும்" என்றுள்ளது. இதனுல் இராமானுச நூற்றந்தாதியை இராமானுசர் தாமே செய்தருளியதாக நிஸ்ஸந்தேஹமாய்க்கூறப்பட்டதாயிற்று. இதற்கு இப்படி பொருளல்லவென்றும், இராமானுசர் செய்வித்த நூலென்று பொருள் கொள்ளலாமென்றும் வேறு விதமாகவுங் கொள்ளலாமென்றும் நவீன வுரைகாரர்கள் சிரமப் படுகிருர்கள். 'இராமானுசர் இயற்றினபடியாலே இராமானுச நூற்றந்தாதி யெனப் பெயர் வந்தது' என்று மருண்ட வொருவர் செய்த செய்யுளிது, 'பர்த்ருஹரி; பட்டிகாவ்யம், பாரவி, முராரி' இத்யாதியாக வழங்கும் க்ரந்த நாமங்கள் ப்ரம ஹேதுவாயின. தேசிகப்ரபந்த மென்ருல் தேசிகரியற்றிய ப்ரபந்த மென்று தானே பொருள். அப்படியே கொண்டார்களிங்கும். இந்தப் பெரிய மருளை நாமெடுத்துக் காட்டவேணுமோ! வீண் பிடிவாதம் விவேகசக்தியை யொழிக்கின்றது.

29. (G) சில கீழ்ச்சாதியர் பூணூலணிந்து பன்னிரு நாமஞ்சாத்திப் பஞ்சகச்ச வேஷ்டியு முடுத்து ஆங்காங்கு ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணர்களோடு கலந்து பரிமாறுகிருர்கள். மஹோத் ஸவங்களில் ததீயாராதன கோஷ்டிகளிலும் ஸமபங்க்தியில் அந்வயித்து புஜிக்கிருர்கள். இப்படி காலந் தள்ளுகிறது. ஸமயவிசேஷங்களில், இவ்வநீதியை எம்பெருமான் தானும் ஸஹித்திருக்க மாட்டாமல் பிடியுண்ணச் செய்கிருனிவர்களை யென்பது எங்கும் ப்ரஸித்தம். அப்போது "நான் இத்தனைநாளாய்க் கலந்து பரிமாறினேனே"என்று வாதிக்க எழுவாருண்டோ? உண்மை வெளிவந்துவிட்டதென்று ஓடிப்போவது தவிர வேறு செய்வார்களோ? வாதிக்கப் புகுவது இன்னமும் பரிபவஹேது வாமென்று தெரிந்துகொள்ளாதாருளரோ?

30. ப்ரக்ருதபண்டிதர் இந்த விசாரவிரிவுகளில் புகவேண்டா; தாம் தமது வியாஸத்தின் முடிவில் பிரபந்த சாரத்தை அத்புத ப்ரபந்தரத்னமாக வெழுதி அதினின்று 'ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள் அடைவு" என்றெடுத்துக் காட்டி சக்பந்தி செய்து விட்டதாக எழுதுகிருரே; அது என்ன அடைவு? என்ன சக்பந்தி? என்பதை இவர் பிறர்க்கு நிருபித்துக்காட்ட வேண்டா. தம்மனத்தினுள் சிந்தித்துப்பார்த்து த்ருப்தியடைந்தால் போதுமே. முன்னம் நாளைச் சொல்லி இடையில் ஊரைச் சொல்லிப் பிறகு திங்களைச் சொல்லுவது எங்கேனும் கண்டதுண்டா? - ஆடியில்பூரத்திலவதாரமென்பதா? பூரத்திலாடியிலவதாரமென்பதா? பூரத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆடியில் ஆண்டாளவதார மென்பது மிகநன்று. கண்ணபிரான் அட்டுக்குவி சோற்றுப்பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறு மடங்கப் பொட்டத் துற்றிவந்த போது யசோதைப்பிராட்டி "கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா!" என்ருளாம். கேட்டறியாதனவும் கண்டறியாதனவும் இனியும் கேட்கவும் காணவும் முடியாதனவுமான விசித்திர விடமங்களன்றே இவை. நீதிமன்றங்களில் வக்கீல்களென்கிற வாவதூகர்கள் ஒருவ்யவஹாரத்தில் பத்தெட்டு ஸாதகங்கள் காட்டிவாதிப்பார்கள். ஆனுல் அவற்றில் சில வாதங்கள் மட்டும் ஸாதகங்களாய் சில வாதங்கள் பல்பஜங்களாயிருக்கும். ப்ரக்ருத

விஷயத்தில் நாம் காட்டிய ஸப்தவிதாநுபபத்திகளில் ஒன்று கூட கண்ணழிக்க முடியாதது. நாளுர் திங்க ளென்ற அக்ரமம் மிகத் தலைமைபெற்றது. தேசிகன் காலத்தில் இல்லாததும், அப்பயதீக்ஷிதர் காலத்திற்குப் பிறகு (தும்பைவனத்திற்கு) கொச்சைச் சொல்லாக ஏற்பட்டது மான தூப்பலென்னுஞ்சொல் வேறு தேசிகப்ரபந்தங்கள் எதிலும் புகாமல் இந்த ப்ரபந்த சாரமொன்றில் மட்டுமே "சந்தமிகு தமிழ்மறையோன் தூப்பல்தோன்றும் வேதாந்தகுரு மொழிந்த" என்று புகுந்திருப்பதானது யாம் உபபாதிக்கும் பல பல வுண்மைகளை நிலைநாட்டித் தருகின்றது. இவர்களின் கோஷ்டியில் பெருமையாகச் சொல்லிக் கொள்வதென்னவென்றல் "ஆழ்வார்களின் பிரபந்தங்களும் இருபத்துநான்கு; நம் தேசிகவள்ளல் அருளிய தேசிகப்பிர பந்தங்களும் இருபத்துநான்கு"—என்று. தேசிகப்பிரபந்தங்களினுண்மையை நாம் பல கால் பல நூல்களில் விளக்கியிருக்கிறேமாதலால் இங்கு அதை விவரிக்கப்புகவில்லை. தேசிக ப்பிரபந்தங்கள் இருபத்து நான்கு என்பதை அப்படியே இசைந்து கொள்ளுவோம். அவற்றுள் ப்ரக்ருத விவாதாஸ்பதமான ப்ரபந்தஸார மொன்றில் தவிர மற்ற இருபத்துமூன்றில் தூப்ப லென்கிற பேச்சு உண்டா? அத்திகிரிமாகாத்மியத்தின் முடிவில் சாற்றுக்கவியாகப் பின்புள்ளார் இயற்றிய வெண்பா வொன்றில் "சீராருந்தூப்பல் திருவேங்கட முடையான்" என்றிருப்பதைத் தான் இவர்கள் காட்ட முடியும். அதற்கு முந்தின பாட்டில் ஸ்வாமி தம்முடைய திரு நாமத்தையிட்டுப் பிரபந்தத்தை நிகமித்தாயிற்று. ஆழ்வார்கள் திருவாக்கில் விளங்கின திருநாமம் தண்கா என்பது; அதைத்தான் தேசிகன் சரணுகதி தீபிகையென்கிற தீபப்ரகாச ஸ்தோத்திரத்தில் (8ல்) ஹிமோபவன மென்றும் (18ல்)சிசிரோபவன மென்றும் மொழிபெயர்த் தருளியுள்ளார். அவர் திருவாக்கில் வராததும், இருநூறுவருடங்களுக்கு முற்பட்ட க்ரந்த மொன்றிலும் தலைகாட்டாததுமான தூப்பல் சொல் இதில் புகுந்திருப்பதொன்றே இவர்களது விடமச் செயல்களைக் குன்றிவிட்ட விளக்காக்கப் போதுமானது. இவ்வளவோடு இவரை விட்டிடுவோம்.

31. "வ்யாஸமஹர்ஷியும் வைஷ்ணவமும்" என்ற வியாஸகாரருடைய ப்ரஸ்தாவ ப்ரஸக்தி மேலே நேர்ந்து விட்டபடியால் இவருடைய அநந்விதபாஷணங்களை உலகுக்குச்சிறிது காட்டி மஹோபகாரம் செய்ய வேண்டியது அவச்யமாகிறது. இவர் எழுதத்தொடங்கும்போதே "ஆஸ்திக்யமென்பது உலகிலெங்கும் பரவியேயுள்ளது." என்கிறுர். இது ஸர்வாத்மநா ப்ரத்யக்ஷவிருத்தம்; அல்லது ப்ரத்யக்ஷாபலாபம். நாஸ்திக மதத்திற்கே லோகாயதமதமென்று பெயர் பரவியுள்ளது. லோகே ஆயதம்—லோகாயதம். 'உலகமெல்லாம் பரவியது' என்பதே இதன்பொருள். *யாவஜ்ஜீவம் ஸுகம் ஜீவேத் நாஸ்தி ம்ருத்யோ ரகோசர:, பஸ்மீபூதஸ்ய தேஹஸ்ய புநராகமனம் குத:? என்று உபதேசிக்கிறமதமே லோகாயதம். தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் (2—6) இதைத் திருவுள்ளம் பற்றியே "ஸர்வத: கரவீராதீந் ஸூதே ஸாகரமேகலா, ம்ருதஸஞ்ஜீவிநீ யத்ர ம்ருக்யமாணதசாம் கதா * என்கிற ச்லோகரத்னமருளிச் செய்தார். அதற்குமூலம் *பூயாநஹோ பரிகர: ப்ரதிகூலபக்ஷே* என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தி. அஸ்து. ஆஸ்திக்யமே உலகமெங்கும் பரவியுள்ளதென்பதை பொலிக பொலிக கணக்கிலே கொள்வோம். "நாஸ்திகன் இவனென்று ஒருவனை முழு நாஸ்திகனுகக் கூறமுடியவில்லை." என்கிற அடுத்த வாக்கியம் வெகுஅழகு. எப்படியிருந்தால் கால் நாஸ்திகன்? எப்படியிருந்தால் அரை நாஸ்திகன்? எப்படியிருந்தால் முக்கால் நாஸ்திகன்? எப்படியிருந்தால் முழு நாஸ்திகன்? என்பதை முன்னம் நிர்ணயித்துவிட்டால் பிறகு இந்த காலரை முக்கால் முழு நாஸ்திகர்கள் எவ்வெவ்விடங்களிலே எத்தனைவர் தேறுகிறுர் களென்பதை எளிதாக நிர்ணயித்துவிடலாம். ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே எம்பெருமானுர் தரிசனத்திலே ஜனித்து திவ்யப்ரபந்த மென்றுதே ப்ரபந்தமென்பவனைக் கால் நாஸ்திகனுக வைக்கலாம். வாயினுற் சொல்லுவதோடு நில்லாமல் ப்ரபந்தரக்ஷையென்று பெயரிட்டு

அஸம்பத்தரக்ஷை பண்ணுமவற்கு அரை நாஸ்திகனென்று பெயரிடலாம். தானுமுணராமல் ஒருவரையு முணர்த்தமாட்டாமல் "பெயரெச்சமாக வந்த வினையெச்சத்திற்கு ல்யப்போடே ஸாமாநாதிகரண்யம் நிர்வஹிப்பதில் ச்ரமமிருக்கிறபடியாலே வினைமுற்றுக்களை கர்மதாரய மாக்குவதுதான் கருத்து" என்றிப்படியெழுதிக் கொண்டு போகிற வேலையற்ற வம்பனை முக்கால் நாஸ்திகனென்னலாம். பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளைகளை வாய்க்குவாய் தூஷிப்பதும் அபார்த்தங்களெழுதுவதுமே போதுபோக்காயிருப்பவனை முழு நாஸ்திகனென்னலாம் இப்படி யொருவனிருக்கும்போது "ஒருவனை முழு நாஸ்திகனாகக் கூறமுடியவில்லை" யென்பது எங்ஙனேயோ? ஸ்வவ்யதிரிக்த: அந்ய: கச்சிதஸ்தீதி கூறமுடியவில்லையென்று விவக்ஷித மென்னில் ததாஸ்து.

32. இதெல்லாம் எப்படியாவது தொலையட்டும். மேலேபாருங்கள்—"விஷ்ணுநாராயணாதி சப்தங்களில் ஒரு பெயரையும் ஸூத்ரத்தில் குறிக்கவில்லையே, அப்படியிருக்க விஷ்ணுவையே பரதேவதையாக ஸூத்ரம் கருதுமென்ன முடியுமோ?" என்றொரு சங்கையைக் கிளப்பிக் கொண்டு **[இதற்கு விடை]** என்று கம்பீரமாகத் தொடங்கி வழவழ கொழகொழ பண்ணி முடித்திருக்கிறார். பிரமன் சிவன் முதலானோருடைய பெயரைக்கூட குறிப்பிடவில்லை என்றொரு ஸமாதானமாம். பரதத்வமே கிடையாதென்று கருத்தானால் ப்ரஹ்மஸூத்ரமே வேண்டாமே யென்று ஒரு ஸமாதானமாம். ஏதோவொன்றை அவர் பரதத்துவமாகக் கூறியிருக்கின்றார். என்றொரு ஸமாதானமாம். அதை இன்னதென்று நேர் சொல்லாலே சொல்லவில்லையென்று ஒரு முடிவு. நேர் சொல்லாலே ஏன் சொல்லவில்லையென்று கேட்டுக் கொண்டு சொல்லாமலே விளங்குமென்று ஸூத்ரகாரருடைய அபிப்ராயமென்று ஸமாதானம். இதற்குமேல் ஸூத்ரகாரர் கையாண்ட உபநிஷத்வாக்கியங்களிலே அவர் நிர்ணயம் செய்த பொருள்களைக் கொண்டு பார்க்கவேணுமென்கிறார். பண்டிதர்களே! ப்ரஹ்ம ஸூத்ரத்தில் (ஒரு ஸூத்திரத்திலாவது) ஒரு உபநிஷத்வாக்யத்தையாவது கையாண்டிருப்பதுண்டா. (அம்சாதிகரணத்தில்) **'தாசகிதவாதித்வமதீயத ஏகே'** என்றாற்போலே சில ஸூத்ரங்களில உபநிஷத் பதங்களுக்கு ஸூசனையிருப்பதாகக் கொள்ளுவோம். உபநிஷத் வாக்கியத்தைக் கையாண்டவிடம் காட்டவே முடியாது. தேசிகன் சததூஷணியில் அத்வைதிகளின் ப்ரஹ்மம் சாரீரகமீமாம்ஸையின் பஞ்சமாத்யாயத்திலிருப்பதாக ஸாதிக்கிறார். அந்த அத்யாயத்தில் உபநிஷத்வாக்கியங்களை அவர் கையாண்டிருப்பர் போலும்.

33. இதனிடையில் ஒரு சித்ரவதம்; வியாஸர் உபநிஷத்துக்கள் பலவற்றை விசாரிக்கின்றவர் புருஷஸூக்தம் யாரைச் சொல்லுகிறதென்பதை விசாரிக்கவேயில்லை; அது மட்டுமல்ல; ஜ்யோதிரதிகரணத்தில் ஒரு வாக்கியத்தை விசாரிக்கும்போது இங்கே பகவானுடைய நான்கு பாதங்களைச் சொல்லும் புருஷஸூக்த மந்த்ரம் இருப்பதாலே இங்கே ப்ரஹ்மமே சொல்லப்படவேண்டுமென்றார்.........புருஷஸூக்த மந்த்ரத்தையும் எடுத்துக் காட்டினாராகையாலே ஸம்சயத்திற்கு இடமேயில்லை என்கிறார். ஒரு சாஸ்த்ரஜ்ஞன் எழுதுகிற பங்க்தியா இது? ஜ்யோதிரதிகரணத்திலோ மற்று எந்த அதிகரணத்திலோ ஔபநிஷதப்ரமாணங்களுக்கு ஸூசனையுண்டு—ப்ரத்யபிஜ்ஞாபனமுண்டு என்று சொல்ல இயலுமேயல்லது 'உபநிஷத் வாக்யங்களைக் கையாளுகிறார்–கையாண்டார்' என்பது பண்டிதர் எழுதத்தக்கதன்று. இதற்குமேலெழுதுகிறார்–'மேலும் மஹர்ஷிகளைப்போலே நாமும் நமக்குக் கிடைத்த உபநிஷத்துக்களைக் கொண்டே தத்வநிர்ணயம் செய்ய முற்படவேண்டும்" என்று. செய்யட்டுமே தாராளமாக. யார் வேண்டாமென்று தடுப்பார்? இதற்கு ஸூத்ரகாரரைப் பிடித்திழுத்து அவர் தம்முடைய மீமாம்ஸையில் தேவதா விசேஷ நிஷ்கர்ஷம் பண்ணினவரல்லர் என்று பண்டித பாமரவிபாகமற அனைவரும் நிர்ணயிக்கும்படியாகவா ஒரு பண்டிதர் எழுதுவது?

34. இந்த ப்ரகரணத்தில் எழுதுகிறார் "ஸாங்க்யாதி மதங்களிற் சொன்ன ப்ரக்ருதியோ ஜீவனோ ஜகத்காரணமில்லை யென்று தேறும்" என்று. இங்கே நிரூபகர்கள் நுட்பமாகப் பார்க்க வேண்டாம்; ஸ்தூலமாகப் பார்த்தாலே போதும். இல்லை என்பதை எங்கே ப்ரயோகிப்பது? அல்ல என்பதை எங்கே ப்ரயோகிப்பது என்கிற சிறு விஷயங்கூட அறியாமலன்றோ இவர் சில விஷமங்கள் செய்து போருகிறார். அந்யோந்யாபாவத்திற்கும் மற்றையபாவத்திற்கும் வாசிகாணமாட்டாதவிவர் தருக்கக்கடலாம். 'பூதலே கடோ நாஸ்தி' என்னலாம். 'கட: படோ நாஸ்தி' என்னக்கூடாதென்பதை இனித்தான் இவர் கற்கத் தொடங்க வேணும் "ப்ரக்ருதிர் வா ஜீவோ வா ஜகத்காரணம் ந பவதி" என்ன வேண்டுமிடத்தில் "ப்ரக்ருதிர் வா ஜீவோ வா ஜகத்காரணம் நாஸ்தி என்று சொல்லலாகாது. தேவதத்தன் யோக்ய னல்லன் என்ன வேணும், தேவதத்தன் யோக்யனில்லை யென்னக் கூடாது. தேவதத்தனுக்கு யோக்யதையில்லை என்னலாம். இத்தகைய சாஸ்திர மர்யாதைகளை இனியாவது தெரிந்து கொள்க. இதேயிதித்டல் "மிரண்டுவிடக் கூடாது" என்கிறார். பள்ளிப் பிச்சான் வழங்கி வரும் சொற்களைக்கூட அகராதிகளில் எழுதிவைப்பதுண்டு. அதைக்கண்டு மருண்டுவிடக் கூடாது. பெரியாழ்வார் "மருண்டு மான் கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்த புல்லும்" என்றருளிச் செய்கிறார். இங்கே "மிரண்டு மான் கணங்கள்" என்றிருந்தால் மோனையின்ப த்திற்கு மிகமிகச் சேரும். இவர் அப்படியும் திருந்திவிடுவர். வழிப்போக்கர்கள் மெறண்டு என்றுதான் சொல்லுவது. லேகினியைக்கையால் தொடவும் அதிகாரமற்றவர்கள் எத்தனை பேல்காகிதங்களைக் கறுப்பாக்கி வருகிறார்களந்தோ!

35. எழுதுகிறார் 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸா என்ற ஸமாஸத்தில் நான்முகனைக் கொள்ளலாம் ........' இத்யாதி. அப்படி கொண்டாலும் "ப்ரஹ்மணோ ஜிஜ்ஞாஸா" என்றுதானே விக்ரஹிக்கவேணும். அது பும்லிங்கமேயொழிய க்லீபமன்று' என்று ஒருவர் சொன்னால் சொன்னதுதானே. இங்கு விஷய மென்ன வென்றால் 'ப்ரஹ்ம சப்தார்த்தமாக நான்முகனைக் கொள்ளலாம்' என்றெழுதுவதே பொருந்தும். 'ஸமாஸத்தில்' என்பது பண்டித பாஷிதமாகாது; ஸமாஸம் இங்கு வ்யாவர்த்தகமன்றே. வ்யஸ்தமாகச் சொல்லியிருந்தாலும் நான்முகப் பொருள் போய்விடாதே. ப்ரஹ்மா என்று பும்லிங்கமாக வுள்ளவிடங்களிலுங்கூட திசை முகனுரைத் தள்ளித் திசைமுகனுர் தங்களப்பனைப்பொருளாகப் பகரவில்லையா? * ஸ ஹ யஜ்ஞை: ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: * என்ற கீதையில் ப்ரஜாபதி சப்தத்திற்கு சதுர்முகபரமான பாஷ்யம் சங்கரருடையது. தஜ்ஜநக பரமான பாஷ்யம் எம்பெருமானா ருடையது. *ஜந்மாத்யஸ்ய யத: * என்கிற ஸூத்ரம் மூன்று பதந்தானென்பதை யிசைந்து கொண்டு 'ஜந்ம-ஆத்யஸ்ய-யத:" என்று இங்ஙனே மூன்றுபதமாகப் பிரித்து, ஆத்யனை ப்ரமபுருஷனுக்கு எந்த தசரத வஸுதேவாதிகளிடமிருந்து உத்பத்தியோ, அந்த தசரத வஸுதேவாதிகளே பரப்ரஹ்மம் என்று ஸூத்ரார்த்தமாகச் சிலர் பாஷ்யம் செய்திருக்கிறார்களே. அதைக் காணவில்லையோ? காட்டவில்லையே? நினைவுக்கு வருவதையெல்லாம் எழுதிக் கொண்டே போக வேண்டாவா?

36. ஸ்ரீராமாயணத்தில் 'ஆத்மவாந் க:' என்றவிடத்து வியாக்கியானங்களில் "ஆத்மா ஜீவே த்ருதௌ தேஹே ஸ்வபாவே பரமாத்மநி" "ஆத்மா ஸ்வபாவே தேஹே ச ஜீவாத்ம பரமாத்மநோ:" என்கிற கோசங்களை உதாஹரித்திருக்கையாலே சாரீரகமீமாம்ஸையில் வாக்யாந்வயாதிகரணத்திற்கு உத்திதியே யில்லையென்றும், ஆச்மரத்தய ஔடுலோமி காசக்ருத் ஸ்நர்களின் பேச்சுக்கு ப்ரமேயமேயில்லை யென்றும் கிளப்பிவிட்டு விடைகூறினால் அது லோகோபகாரகமாகும். சக்திக்ரஹத்தில் கோசம் ப்ரபலப்ரமாணமே யாதலால் ஆத்மா என்கிற

சொல் ஜீவாத்மாவைப்போலே பரமாத்மாவையும் சொல்லக்கடவ தாகையால் "ஆத்மநஸ் து காமாய...ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:' என்னுமிடங்களில் பரமாத்மாவைக் கொள்ளுவதுதான் பொருத்தம்—என்று ஒரேபேச்சில் முடிக்கவேண்டியதை விட்டு, ஆச்மரத்யர் அப்படி சொல்லுகிறார், ஔடுலோமி இப்படி சொல்லுகிறார், காசக்ருத்ஸ்நர் அங்ஙனே சொல்லுகிறார்—என்பதும், காசக்ருத்ஸ்நருடைய முடிவை ஸித்தாந்தமாக இருமதத்தினருங் கொண்டும் விவாதத்தையே அநுவர்த்திக்கச் செய்வது எதற்காகவென்றுகேட்டுக் கொண்டு விடை கூறினால் எவ்வளவோ உபகாரமாகுமே. அவசியமற்ற சோத்யங்களைக் கிளப்பி ருஜுவானவிடைகூறமாட்டாதே குழப்பிவைக்கும் வியாஸங்களை இதில் வெளியிடுவதனால் என்ன ஜகதுபகாரமோ அறிகின்றிலோம் ஸூத்ரகாரர் விஷ்ணுநாராயணாதி நாமங்களை ஏன் தொடவில்லையென்றுகேட்டுக்கொண்டு இவர் காடுபாய்ந்தாப்போலே, ப்ரஹ்மசப்தார்த்த மருளிச்செய்கிற



*விச்வாவஸு மீன விசாக கோஷ்டி*

நம் பாஷ்யகாரர் "ப்ரஹ்ம சப்தேந புருஷோத்தமோபிதீயதே" என்றும் "ஸ ச ஸர்வேச்வர ஏவ" என்றும் ஸாதித்தாரேயொழிய "விஷ்ணுரபிதீயதே" "நாரயண ஏவ" என்று ஏன் அருளிச்செய்யவில்லை யென்று கேட்டுக் கொண்டும் ஒரு பெருங்காட்டில் பாய்ந்திருக்கலாமே. க்ராந்திக ஸரணியறியாமே வ்ருதா ச்ரம; கிமர்த்தம்? இவ்வளவோடு இதனை விட்டிடுவோம்.

## நீசனேன்நிறையொன்றுமிலேன் கைகூப்பிச் செய்யும் விண்ணப்பம்

37. விலக்ஷண ஜகதுபகாரமென்னுமிந்தச் சிறுநூல் உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமதுபயவே. ஆத்ரேய வேங்கடாசார்யஸ்வாமிக்கு விச்வாவஸு மீன புநர்வஸு நன்னாளில் நடைபெற்ற மஹோத்ஸவ விசேஷத்தையொட்டி வெளியிடப்பட்ட நினைவுமலரில் கண்ட சில பண்டிதர்களின் வியாஸங்களைப் பரீக்ஷிக்கும் முகத்தால் அரியபெரிய சில தத்துவங்களையுணர்த்தி உலகுக்கு உபகரிக்க வேண்டுமென்றே யெழுதத் தொடங்கப்பட்டதென்பதை நூன் முகத்திலேயே விஜ்ஞாபித்துள்ளேன். அந்த ஸ்வாமியின் ஞானப்பெருமைக்கோ கீர்த்திப் பெருமைக்கோ குறைவுவிளைக்கவேணுமென்கிற எண்ணத்தினால் இஃது எழுதப்படுவதாகச் சிலர் மாறாக நினைக்கத் தகுதியில்லை. ஏறக்குறைய நாற்பது வருஷகாலமாக அந்த ஸ்வாமியின் அந்தரங்க ப்ரீதிக்கு இலக்கானவனடியேன்; அடியேனுடைய அந்தரங்க விச்வாஸத்திற்கு இலக்கானவர் அந்தஸ்வாமி. ஏதோ சிலஸமயவிசேஷங்களில் சில அர்த்தவிசேஷங்களில் அபிப்ராய பேதங் காரணமாக க்ரந்த சர்ச்சைகள் விளைந்திருந்தாலும் அவற்றை ஸ்மரிக்கவும் ப் ஸக்தியில்லாதபடி காலம் கடந்துவிட்டது. அடியேனுடைய நிஷ்கல்மஷஹ்ருதயத்தை உலகமறியக் காட்டவேண்டி, ஸ்வாமிக்கு நடந்த மஹோத்ஸவத்திற்கு ஸங்க்ருஷ்டமான

காலத்திலே ஸ்வாமியின் ஞானப்பெருமை முதலானவற்றைப்பற்றி அடியேனுடைய ஸொந்த பத்திரிகைகளிலும் இதர பத்திரிகையிலும் மூன்று பாஷைகளில் விரிவான வியாஸங்களெழுதி வெளியிட்டதுமன்றியில் **உபய வேதாந்த வித்யாநிதி** யென்கிற விருதையுமளித்திருக்கிறே னென்பதை உலக முழுதுமுணரும். *மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத்* என்கிற கணக்கிலும்*ஒடுமனஞ் செய்கையுரையொன்றி நில்லதார்* என்று மணவாளமாமுனிகளருளிச் செய்த படியிலுமன்றிக்கே த்ரிகரணசுத்தியுடன் அடியேன் அந்த ப்ரசம்ஸாவ்யாஸங்களைப் பிரசுரம் செய்திருக்கிறேனென்பதை அவற்றை வாசித்தவர்கள் நன்கறிவார்கள்.

38. ப்ரஸங்காத் சில விஷயங்களை நம்ஸம்பிரதாயத்திலுள்ள பெரியார்களுக்கு உணர்த்த வேண்டியது அவசியமென்று கருதி இங்கு விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுக்கு (பூர்வாச்ரம மாதாமஹரும்) ஜ்ஞாநசார்யருமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத்பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி காலக்ஷேப ஸந்தர்ப்பங்களில் வாய்மோட்டு வரதாசாரியர் ஸ்வாமி யென்றும், சிங்கப்பெருமாள்ஸ்வாமி யென்றும் அடிக்கடி ஸாதிப்பதுண்டு. வாய்மோட்டு ஸ்வாமி யென்பவர் (ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த) திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி யின் பிதாமஹர். அந்தஸ்வாமி மஹாஜ்ஞாதா வென்று ப்ரஸித்தராம். அந்தஸ்வாமி திருநாடலங்கரித்துப் பலவருடங்கள் கடந்துவிட்டபடியால் அவரையறியேன். சிங்கப்பெருமாள் ஸ்வாமியை மட்டுமேயறிய பாக்கியம் பெற்றிருந்தேன். திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி யோடு அதிகபரிசய மேற்பட்டிருந்த காலத்தில் அவர்தாமும் சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் ஞானப்பெருமைகளை அடிக்கடி அநவதிகமாக ஸாதிக்கக் கேட்டிருந்தேனாகையாலே*அறியாக் காலத்துள்ளேயென்ற கட்டளையிலே மிக்க இளமையிலேயே சிங்கப்பெருமாள் ஸ்வாமி பக்கலிலே மிக்க ப்ராவண்யம் கொண்டிருந்தேன். அந்தஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே. இரண்டு பர்யாயம் அவருடைய ஸ்ரீக்ராமத்திற்கு விடை கொண்டவனடியேன். அந்தஸ்வாமி கோயிலில் எழுந்தருளியிருந்தபோது அடிக்கடி தெண்டன்ஸமர்ப்பிக்க ப்ராப்தமாயிருந்தது அந்தஸ்வாமியை அடியேன் உபகாரகாசார்யர்களில் ஒருவராகவும் அநுஸந்தித்து வருவதுண்டு.

39. அந்தஸ்வாமியின் உபய வேதாந்த ப்ரவசனம் கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் நடைபெற்றுவந்தபோது திருமந்த்ரார்த்த க்ரந்தம் சாத்துமுறை செய்யப்பட்டது; அச்சமயம் அடியேன் அங்கிருந்தேன். அப்போது அடியேனுக்கு **ஆசுகவி** யென்றும் **சித்ரகவி** யென்றும் ப்ரஸித்தியிருந்தது. ஸ்ரீரங்நாராயண ஜீயர் ஸ்வாமியாயிருந்த அயோத்யா ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி அந்த சாத்துமுறைஸமயத்தில் அடியேனுக்கு நியமித்தார். 'சிங்கப் பெருமாள்ஸ்வாமி விஷயமாக ஒரு ஸ்துதிமாலிகை விண்ணப்பம் செய். ஸம்ஸக்ருதத்தில் அந்தாதித்தொடை விசேஷமாக இல்லாமற் போனாலும். இந்த ச்லோகங்களை அந்தாதித்தொடை யாகவே விண்ணப்பஞ்செய்; அன்றியும் ச்லோகாரம்பத்தில் எந்த எழுத்து கொள்ளப்படுகிறதோ அதுவே மற்ற மூன்று பாதங்களினாரம்பத்திலுமிருக்கவேண்டும் — என்று கட்டளையிட்டார். உடனே விண்ணப்பம் செய்துகொண்டே போனேன் ஒருபண்டிதரை யெழுதிக்கொண்டே போம்படி சொல்லி.

1. ஆத்ரேய சிங்கராசார்யம் ஆதித்யமவநீதலே,
   ஆவிர்ப்பூதமிவ த்யேயம் ஆசார்யமணிமாச்ரயே.
2. ஆச்ரிதாந் ப்ரத்யசேஷார்த்தாந் ஆதரேணோபதிச்ய யः,
   ஆநந்ததுந்திலஸ்வாந்தாந் ஆதத்தே தமஹம் பஜே.
3. பஜேய ஆத்ரேயஸிம்ஹார்யம் பக்திவைராக்யபூஷணம்
   பகவத்விஷயஜ்ஞாநபரிதம் பஜதாம் நிதிம்.

4. நிதிம் ஸர்வார்த்தவர்க்காணும் நித்யம் ப்ரவசகே ரதம்
நிஸ்துலஜ்ஞாநஸிம்ஹார்யம் நிததே ஹ்ருதி ஸந்ததம்.

5. ஸந்ததம் ஸர்வசாஸ்த்ரார்த்த ஸம்வர்ஷணஸமுத்ஸுகம்,
ஸம்ஸாரேபி ஸமம் நித்யை: ஸம்ச்ரயே ஸிம்ஹதேசிகம்.

6. தேசிகேந்த்ர ந்ருஸிம்ஹார்ய! தேவதா ஸார்வபௌமவத்
தேஹிபிஸ் ஸததம் ஸேவ்ய! தேஹி மே கருணாம் ஸதா.

7. ஸதா முதா ஸதாம் கோஷ்ட்யாம் ஸதாசார்யோக்திவைபவம்,
ஸமுத்போதயதாநேந ஸநாதோ குருணாஸ்ம்யஹம்.

8. அஹங்காரவிதூரஸ்தம் அநந்த குணசேவதிம்,
அத்புதப்ரஜ்ஞமீடேஹம் அநிசம் ஸிம்ஹஸத்குரும்.

9. குருப்யோபி கரீயாம்ஸம் குருவர்யம் மஹாமதிம்
குணாம்புராசிம் ஸிம்ஹார்யம் குருத்தம்ஸம் ஸதா நவை.

10. ந வைஷ்ணவாநாம் த்வத்தோந்யோ நந்தவ்யோஸ்தி மஹாகுரோ!
நமந்தி ஸந்தஸ் த்வாமேவ நக்தந்திவமசேஷத.

11. சேஷாம்ச வரயோகீந்த்ரசேஷதைகநிரூபிதம்.
சேமுஷீஸாகரம வித்யாசேவதிம் த்வாமுபாஸ்மஹே.

12. உபாஸ்யாநாமுபாஸ்யம் த்வாம் உபாயோபேய பாவத:
உபாஸ்ய ஸததம் சிஷ்யா உபாயாந்து நிஜம் நிதிம்.

13 நிதிமிவ ஜந்மதரித்ரோ நிஷேவ்ய பவதீயதிவ்யஸூக்திஸுதாம்,
நித்யமிஹ பாக்யவந்தோ நிரவதிமாநந்தமஹஹ! விந்தந்தி.

14. தந்திகிரிசிகரசேகரதயாலு பக்வத் பதாம்புஜப்ரமர:
தயநீயதாஸ ஏவம் தத்வச பத்யாநி தந்யதந்யோபூத்.

**40.** இந்தச்லோகங்களை அடியேன் விஜ்ஞாபித்துக்கொண்டே வந்தேன். ஒருஸ்வாமி எழுதிக்கொண்டே வந்தார். அப்போது சிங்கப்பெருமாள்ஸ்வாமி ஸாதிக்கிறார்; "அண்ணா! அமுதனார் நூற்றந்தாதியினால் எம்பெருமானாரையுருக்கியது போல இந்தஸ்துதியினால் என்னை யுருக்கிவிட்டீரே நீர்" அன்று. அந்த கோஷ்டி "முநயோ மூடாம் பூவு:" என்று பட்டர்ஸாதித்த கட்டளையிலேதானிருந்தது. இதையறிந்தவர்களில் ஒருவரேயுள்ளாரிப்போது கோயிலில்.

**41.** சென்றப்லவங்க வருஷம் முதலாக ஸ்வாசார்ய நியமனத்தால் அடியேன் நடத்திக் கொண்டிருந்த மஞ்ஜுபாஷிணி யென்னும் ஸம்ஸ்க்ருத பத்திரிகையில் ஸௌம்ய வருஷத்தில் ஐப்பசி மாதத்தில் வெளிவந்த வொருஸஞ்சிகையில் இந்தச்லோகமாலிகை பிரசுரம் செய்யப் பட்டுள்ளது. இதைத் தொடர்ந்து தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் பலவுண்டு. விரிவுக்கஞ்சி விடுத்தேன். சிங்கப்பெருமாள்ஸ்வாமி பக்கலிலும் அவரைத் தெய்வமாகக் கொண்டவர்கள் பக்கலிலும் அடியேன் ஸஹஜ ஸௌஹார்த்தஸம்பன்னனென்பதை வெளியிடுவதுதான் இங்கு ஸாரமான விஷயம். அர்த்தங்களில் விளையும் சர்ச்சைகளினால் ஸௌஹார்த்த பங்கமுண்டாவது மணவாளமாமுனிகளினடியார்க்கு உற்றதன்று. இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிற மனக் குற்றங்கள் மலிந்திருப்பதுகாரணமாக அர்த்தங்களை விபரீதமாகச் சொல்லுவதும் எழுதுவதும் பிறர்க்குப்போல் எனக்கும், எனக்குப்போல் பிறர்க்கும் ஸஹஜமென்று கொள்ளுங்கள். அதனால் நட்புக்குக் குலைதல் விளையாது. இதை நடுநிலையாளர்கள் நெஞ்சிற்கொள்க. இனி ப்ரக்ருத மநுஸராம: பாயஸம் ஸம்பிபாம :.

**ஒன்று முதல் 20 பக்கம் வரையிலுள்ள விஷயங்களுக்கு ஸாரமான சுலோக மாலிகை.**

श्रीमते रामानुजाय नमः । श्रीमद्वरवरमुनये नमः

जगदाचार्यसिंहासनाधीश - श्री काञ्ची प्रतिवादिभयङ्कर - अण्णङ्गराचार्य कृतिषु

# मधुरार्थमहानिधिः ॥

जगदुपकारसमाख्य-द्राविडवाङ्मयकृतौ मदीयायाम् ।
संस्कृतविदेकभोग्यान् लिखितान् विषयान् लिखामि देवगिरा ॥ १ ॥

बिभ्रति विद्वद्भिरुदं ये तावत्तैः पदानि साधुतया । लेख्यानि नान्यथेति प्रोद्बोधनमत्र मुख्यमुद्दिष्टम् ॥ २ ॥

त्र्यारुणिपुत्रो नाम्ना त्रैयारुणिरेव सुप्रसिद्ध इह । त्र्य्यारुणिरिति विलिखन् विद्वानुद्बुद्धधीः प्रहर्षमियात् ॥ ३ ॥

त्रैयक्षमित्यादिदशावतारस्तोत्रादिसूक्तीर्हृदि धारयन् सन् ।
त्र्यन्तमित्यादि च विसृजन् सन् प्रसन्नचेता भविता मनीषी ॥ ४ ॥

भ्रमार्थकं भ्रमापदं प्रमापदं च नास्ति भोः तथा जडा जना वदन्ति मा स्म भूत्तदादरः ।
अदन्तमेव तत्पदं नचान्यथेति निर्णयात् भ्रमापदप्रयोगकृत्पुनश्च नो भविष्यसि ॥ ५ ॥

अहो ब्रह्मशब्दे मनिन्प्रत्ययान्ते बहूनां हि नैवास्ति मर्मावबोधः ।
अतो बृंहबृंहेति भूयिष्ठलेखोऽभवच्छोचनीयं तदेतन्महात्मन् ॥ ६ ॥

ब्रह्मपदतत्त्ववेदनविधुरो विबुधः कथं नु वेदान्ती ? । भवितुं प्रभवति भगवन्निति तावद्भवति मनसि विचिकित्सा ॥

उपबृंहणमितिशब्दस्योपब्रह्मणविकारसंजननम् । केषुचन शोचनीयं, तदिदं पदमर्मबोधदारिद्र्यात् ॥ ८ ॥

स्पष्टपदस्पृष्टपदयोर्वैषम्यज्ञानविरहितः कश्चित् । यद्वा तद्वा विलिखति पश्चात्तद्वाग्विशोधनं करवै ॥ ९ ॥

पृथक्पदे प्रथक्पदत्वमोहभागसौ बुधः पुनः पुनः प्रथक्पदप्रयोगकृद्विराजते ।
त्रयीशिरोगुरोर्गिरं विपर्ययेण दर्शयन् गुरूपदेशपात्रभावदूरगः प्रकाशते ॥ १० ॥

सदेव सोम्येति वचो विशुद्धं न वेद, सौम्येति लिखत्यजस्रम् ।
विनीतिपूर्वं विनिवेदयेऽहं गुरोः कुले वासमुपार्जयेथाः ॥ ११ ॥

इह निगमपरिमलाख्यग्रन्थैतिह्यस्य विदलनं स्थाने । यत्तु प्रबन्धसारप्रशंसनं तत् खपुष्पसौरभवाक् ॥ १२ ॥

नैव प्रबन्धसारो देशिककृतिरिति विनिर्णये सप्त । सुदृढानि साधनानि ब्रूमः कल्पेऽपि नाशरहितानि ॥ १३ ॥

पूर्वार्यसूक्तितत्यां प्रबन्धशब्दोक्तिरहह ! नास्त्येव । दिव्यप्रबन्धवाचं विहाय हेयं प्रबन्धवाक्कलनम् ॥ १४ ॥

सारावबोधनकथादरिद्रकृत्यां न सारवागुचिता । कर्तृकृतिदिवसविवरणकरणं न हि सारकथनरूपं स्यात् ॥ १५ ॥

नक्षत्रनगरमासान् वक्ष्यामीति क्रमोऽयमतिहास्यः । अमृतकविरचितकृत्यां यतिपतिरचितत्वकथनमपहास्यम् ॥ १६ ॥

तूप्पल्पदस्य नव्यस्यात्र न्यसनं तु नव्यतां स्फुटयेत् । तदिदं प्राधान्येनावधेयमतिमात्रमिह तटस्थानाम् ॥ १७ ॥

अप्पयदीक्षितनिर्मितदेशविशेषस्य नामविकृतिमयम् । तूप्पल्पदं दधानः प्रबन्धसारः कथं पुराणस्स्यात् ? ॥ १८ ॥

हिमवनशिशिरोपवनाद्यभिधाभिर्देशिकेन्द्रविनुतस्य । दिव्यक्षेत्रस्याहो तूप्पल्संज्ञा कथं नु न विगेया ? ॥ १९ ॥

व्यासमुनिर्वैष्णवत्वे अधिकृत्यालेखि यत्तु तत्कृत्स्नम् । शास्त्रज्ञभोग्यताया दविष्ठमिति सुष्ठु सुविशदं व्यलिखम् ॥

एकपादद्विपादत्रि-पादकृत्स्नविशेषितः । नास्तिको विवृतस्सम्यक् तादृशो न हि दुर्लभः ॥ २१ ॥

विष्णुनारायणाद्युक्त्यभावात्कथं सूत्रतत्यां भवेद्विष्णुतात्पर्यधीः ? ।
इत्युपक्षिप्य शास्त्रार्थवैयाकुलीं संजनय्यास्तिकान् क्षोभयामासिथ ॥ २२ ॥

सूत्रेषूपनिषत्प्रमाणवचसामुद्घोषणं केवलं दृष्टं, नैव तु कुत्रचापि तदुपादानं समीक्षामहे ।
स्वस्पिष्ठैः पदगुम्भनैरुपनिषद्वाक्यस्मृतिं सूत्रकृत् प्रासूतेति विविञ्चतां कृतधियो भाष्याधिकारोज्ज्वलाः ॥ २३ ॥

अस्माभिश्च विवेकिभिर्महितधीमूम्ना प्रमाणोक्तितत्त्यामर्शेन विनिर्णये प्रयतनं कर्तव्यमित्युल्लिखन् ।
कामं पण्डित एष तत्कलयतात् को वा निरोद्धा सुधीः ? सूत्राकर्षणपूर्वकं बतबत ! क्षोभः कुतः कल्प्यते ॥२४॥

ब्रह्मशब्दं विवृण्वन् यतीन्द्रो महान् भाष्यकृद्विष्णुनारायणाद्युक्तिभिः ।
केन वा हेतुना नो विवव्रे वदेत्याक्षिपन्तो बुधा हर्षिताश्चेदलम् ॥ २५ ॥

पूर्वाचार्यजदिव्यसूक्तिविततौ विद्वेषभूम्ना वृथा तत्तापार्थविलेखनैः गुरुवरश्रीसूक्त्युपालम्भनैः ।
कालं यापयतः प्रतीपधिषणाराशे स्समीचीनवाग्विन्यासाध्वपराङ्मुखस्य वचनैर्हा हन्त भूमिर्हता ॥ २६ ॥

निगमान्तमहागुरुदिव्यवचस्ततयो विमला विमलार्थभराः ।
सततं वदनाख्यमहासदनं मम हन्त ! पुनन्तु मुदे जगताम् ॥

---

## दिवं गतानां विपश्चिदपश्चिमानां श्रीमदुभयवे
## कारप्पङ्काडु शिङ्गप्पेरुमाळ्स्वामिनां स्तुतिपद्यमालिका ॥ अन्तादिरूपा ॥

आत्रेयशिङ्गराचार्यम् आदित्यमवनीतले । आविर्भूतमिव ध्येयम् आचार्यमणिमाश्रये ॥ १ ॥
आश्रितान्प्रत्यशेषार्थान् आदरेणोपदिश्य यः । आनन्दतुन्दिलस्वान्तान् आधत्ते तमहं भजे ॥ २ ॥
भजेयात्रेयसिंहार्यं भक्तिवैराग्यभूषणम् । भगवद्विषयज्ञानभरितं भजतां निधिम् ॥ ३ ॥
निधिं सर्वार्थवर्गाणां नित्यं प्रवचने रतम् । निस्तुलज्ञानसिंहार्यं निदधे हृदि सन्ततम् ॥ ४ ॥
सन्ततं सर्वशास्त्रार्थसंवर्षणसमुत्सुकम् । संसारेऽपि समं नित्यैः संश्रये सिंहदेशिकम् ॥ ५ ॥
देशिकेन्द्र ! नृसिंहार्य ! देवतासार्वभौमवत् । देहिभिस्सततं सेव्य ! देहि मे करुणां सदा ॥ ६ ॥
सदा मुदा सतां गोष्ठ्यां सदाचार्योक्तिवैभवम् । समुद्घोषयताऽनेन सनाथो गुरुणाऽस्म्यहम् ॥ ७ ॥
अहङ्कारविदूरस्थम् अनन्तगुणशेवधिम् । अद्भुतप्रज्ञमीडेऽहम् अनिशं सिंहसद्गुरुम् ॥ ८ ॥
गुरुभ्योऽपि गरीयांसं गुरुवर्यं महामतिम् । गुणाम्बुराशिं सिंहार्यं गुरूत्तंसं सदा नवै ॥ ९ ॥
न वैष्णवानां त्वत्तोऽन्यो नन्तव्योऽस्ति महागुरो । नमन्ति सन्तस्त्वामेव नक्तंदिवमशेषतः ॥ १० ॥
शेषांशवरयोगीन्द्रशेषत्वैकनिरूपितम् । शेमुषीसागरं विद्याशेवधिं त्वामुपास्महे ॥ ११ ॥
उपास्यानामुपास्यं त्वाम् उपायोपेयभावतः । उपास्य सततं शिष्या उपायान्ति निजं निधिम् ॥ १२ ॥

निधिमिव जन्मदरिद्रो निषेव्य भवदीयदिव्यसूक्तिसुधाम् ।
नित्यमिह भाग्यवन्तो निरवधिमानन्दमहह ! विन्दन्ति ॥ १३ ॥

दन्तिगिरिशिखरशेखरदयालुभगवत्पदाम्बुजभ्रमरः । दयनीयदास एवं दत्त्वा पद्यानि धन्यधन्योऽभूत् ॥ १४ ॥

इति श्रीकाञ्ची–प्रतिवादिभयङ्कर श्रीवैष्णवदासः ॥

42. ஆசார்ய பக்தி தலையெடுத்தவர்கள் அந்த பக்தி விசேஷத்தினால் ஆசார்யவைபவத்தை நாடு நகரமும் நன்கறிய வசனங்களாலும் ச்லோகங்களாலும் செய்யுட்களாலும் நீடுழி விளங்குமாறு வெளியிடக் கடமைப்பட்டவர்கள். ஞானோபதேசம் செய்து தீமனங்கெடுத்து மருவித் தொழும் மனமேதந்து மஹோபகாரம் செய்யும் ஆசார்ய வள்ளல்களைப்பற்றிப் பூருவர்கள் பணிக்கும்போது "இரும்பைப் பொன்னாக்குமா போலே" என்கிறார்கள். அப்படியாக்கியருள் பவரன்றோ நம் ஆசிரியர். அப்படிப்பட்டவருடைய பெருமையை ப்ரகடனஞ் செய்ய எத்தனை புத்தகங்கள் வெளிவந்தாலும் போதாதே. யசோதைப்பிராட்டி கண்ணனை நோக்கி ஆயிரம் பேச்சுக்கள் பேசினள். அவற்றுள் ஒரு பேச்சு*பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத் துக்குள கேட்டேன் என்பது. அப்போது கண்ணனைப்பற்றி ஒரு புஸ்தகமும் தோன்றின தில்லை. அவள் வாயில் "புத்தகத்துக்குள கேட்டேன்" என்று வந்தபடியாலே கண்ணனைப் பற்றி எத்தனையோ புத்தகங்கள் அவதரித்துவிட்டன. அவதரித்துக்கொண்டுமிருக்கின்றன. அவற்றிற்கு மேற்படவும் ஆசாரியரைப்பற்றி ப்ரசம்ஸா புஸ்தகங்கள் ப்ராதுர்ப்பவித்தால் "இன்னுஞ் சொல்லாய் சீமானே! இன்னும் பேசாய் பெருமானே" என்று ஆதரங் காட்டிக் கேட்கவன்றோ கடவது. வைஷ்ணவ ஸார்வபௌமராய், தத்ராபி மணவாளமா முனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளைப் போற்றுமவராய் விளங்குகின்ற ஸ்வாமி யின் பெருமையைப்பற்றி ப்ரசம்ஸா புஸ்தகம் வெளிவந்தால் அதில் அழுக்காறு கொள்பவன் அந்தணனாக மாட்டான், வைணவனாகமாட்டான்.

43. திருவாய்மொழியில் நம்மாழ்வார்விடும் தூதுகளிலே மூன்றாந்தூது*பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ!'' என்று தொடங்குவது. அங்கு*புள்ளினங்காள்! வினையாட்டியேன் நானிரந்தேன்* என்றுள்ளது. இது எவ்வளவு ஆச்சரியமான ஸ்ரீ ஸூக்தி தெரியுமோ? *நானிரந்தேனென்கிற இரப்பு [யாசனை] தூது போகைக்கன்று, பொன்னுலகையும் புவனி முழுவதையும் ஆள்வதற்கு. ஆசார்யனுக்கு உபய விபூதியையுங் கொடுத்தாலும் பர்யாப்த மாகாது என்கிற அர்த்தத்தையன்றோ இங்கு ஆசார்யர்கள் காட்டியருள்வது. இத்தகைத்தான ஆசார்ய ப்ரபாவத்தை வெளியிட வேணுமானால் கசடறக்கற்ற கல்விச்செல்வர்களன்றோ முன் வர வேண்டும். *கலையறக்கற்ற மாந்தர்* என்று தொண்டரடிப்பொடிகளும் *கலையில கங்கு மொழியாளர்* என்று திருமங்கை மன்னனும் பணித்தபடி ஞானக்கலைகளெல்லாம் நாவினுள் நின்று மலரநின்ற மாஞானிகளன்றோ எழுத முற்பட வேண்டும்.

44. அடியேனுடைய எழுபத்தைந்து பிராயப் பூர்த்திக்கு நினைவுமலராக அடியேனே யெழுதி வெளியிட்டுக்கொண்ட மலர்கள் ஐந்து; அவை உலகம் பரவியவை அவற்றுள் முதலதான ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணம் ஸ்ரீராமாநுஜன் வெளியீடாகவே "விச்வாவஸு பங்குனி விசாக விசேஷ மலர்" என்னும் பெயர் புனைந்து 5—3—66-ல் வெளிவந்துள்ளது. தொண்ணூறு பக்கங்களும் எழுபத்தைந்து உபந்யாஸங்களுங்கொண்ட அம்மலரில் எழுபத்து மூன்றாவது உபந்யாஸத்தை ப்ரக்ருதஸ்வாமியின் வைபவமாகவே அமைத்திருக்கின்றேன். மறந்தவர்களுக்கு நினைப்பூட்டவேண்டி அந்த உபந்யாஸத்தை இங்கும் வெளியிடுகிறேன்.

"சென்னைமாநகரில் ப்ரஸித்த ப்ரவக்தாவாக விளங்கிவரும் ஸ்ரீமதுபயவே, காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியை யறியாத ஸ்ரீ வைஷ்ணவர்களில்லை. ஏறக்குறைய இருபத்தைந்து ஸம்வத் ஸரமாக ஸ்வாமியின் ப்ரவசனங்கள் சென்னைமாநகரில் பல பேட்டைகளில் நடைபெற்றுவருகின்றன. சென்னையில் மட்டுமன்று; பாம்பே, கோவை, சேலம், சித்தூர் முதலான பல வெளிநகரங்களிலும் கோயில் ஸ்ரீ வில்லிபுத்தூர் மதுரை வானமாமலை திருநாராயணபுரம் முதலான அனேக திவ்ய தேசங்களிலும்

ஸ்வாமியை யெழுந்தருள்வித்து ப்ரவசனங்கள் கேட்டு க்ருதார்த்தரானவர்கள் எண்ணிறந்தவர்கள், பரம ஸாத்விகமான முறையில் பிரவசனம் செய்யவல்லவர் ஸ்வாமியொருவரேயாவர். வீண் வம்புப் பேச்சுக்களையும் ஹாஸ்யக்கதைகளையும் புகவிடாமல் பூருவாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்தி ரேகையை அணுமாத்ரமும் கடவாமல் "நாமூலமுச்யதே கிஞ்சித் நாநபேக்ஷிதமுச்யதே" என்னும்படியாக உபந்யஸிக்கவல்ல ஸ்வாமியின் ப்ரவசனங்களுக்குத் தனிச்சிறப்புண்டு.

ஸ்வாமியின் மாதாமஹரும் பித்ருஸ்தாநீயருமான கீர்த்திமூர்த்தி சிங்கப்பெருமாள் ஸ்வாமியோடு அடியேனுக்கு நெருங்கிய பழக்கமிருந்தது. அந்த ஸ்வாமியினுடைய ப்ரபாவம் அத்விதீயமானது. திலீப சக்கரவர்த்திக்குப் பிறகு ரகுமஹாராஜன் அரசுபுரியும்படியைச் சொல்லுகின்ற காளிதாஸ மஹாகவி "திநாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:" என்று வைதிகமான த்ருஷ்டாந்தத்தை எடுத்துக் காட்டினார். ஸூரியன் அஸ்தமித்த பிறகு அவனுடைய ஒளியைப் பெற்று அக்நிபகவான் ஜ்வலிக்குமா போலே யென்றார். அதே ரீதியில் சிங்கப்பெருமாள் ஸ்வாமியின்தேஜஸ்ஸைத் தம்மிடம் கொண்டுள்ள ஸ்வாமி மிகமிக விளங்கிவருவது வியப்பன்று. இக்காலத்திற்குரிய உபந்யாஸாநுக்ரஹத்தோடு நில்லாமல் ப்ராசீந பத்ததியையும்விடாமல் உபய வேதாந்த க்ரந்தங்களைக் காலக்ஷேபமாகவும் நடத்திவரும் ஸ்வாமிக்கு உலகமெல்லாம் பல்லாண்டு பாடக் கடமைப் பட்டுள்ளது.

நிகழும் பங்குனித் திங்களில் புநர்வசு நக்ஷத்ரத்தில் ஸ்வாமிக்கு ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாகின்றது. இதுபற்றி உலகமெல்லாம் உகக்க வேண்டுமேயாயினும் "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற நம்மாழ்வாருடைய ஆசாஸனத்திற்கு முக்கிய லக்ஷ்யமான எம்பெருமானாரைப் போலே யெழுந்தருளியிருக்க வேண்டிய ஸ்வாமிக்குப் பிராயத்தில் பாதிபாகம் கழிந்ததாகிறதே யென்கிற மனக்கேதம் அடியேன்போல்வார்க்குள்ளது. எம்பெருமானாரைப் போலவே ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயோடு நெடுங்கால மெழுந்தருளியிருந்து ஆழ்வாரெம்பெருமானார் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்தி திவ்யார்த்த ப்ரவசன துரந்தரராய் நீடூழி விளங்கவேணுமென்று பெருந்தேவி மணவாளனை பேரருளாளன் திருவடிகளிலே பிரார்த்திக்கிறேன். இந்த ஸமய விசேஷத்தில் உபய வேதாந்த வித்யாநிதி யென்னும் விருதை ஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன்."

45. நம் ஸ்வாமியிடத்தில் அந்தரங்கப்ரீதியுள்ளார். எத்தனைவர் எழுதினாலும் மேலே யெடுத்துக் காட்டிய எனது வியாஸத்திற்கு ஏகதேசமும் இணையாகாதென்று அப்போது பல பெரியார்கள் எழுதிய கடிதங்களைப் பெற்றிருக்கின்றேன். மணிவிழா மலரென்று வெளிவந்திருக்கும் புத்தகத்தில் ஸ்வாமியின் வைபவ பரமான வியாஸங்கள் அதிஸ்வல்பமாகவும், பிறருடைய உபந்யாஸங்களே மிகுதியாகவும் காண்கின்றன. இத்தகைய புத்தகங்கள் உண்மையில் எப்படி அமைய வேண்டுமென்றால், மஹோத்ஸவம் கொண்டாடப் பெறுகிற மஹானுடைய வைபவங்களையும் அவர் போற்றும் ஆசாரியர்களின் வைபவங்களையுமே கொண்டிருக்க வேண்டும். அல்லது ஸ்வாமியினுடைய அருமை பெருமை வாய்ந்த அறுபது உபந்யாஸ வியாஸங்களைக் கொண்டிருக்க வேண்டும். கீழே பலபல பக்கங்களால் நாம் விவரிக்க வேண்டும்படி அபத்தங்களையும் அம்ஸபத்தங்களையுங் கொண்ட அஸமஞ்ஜஸவியாஸங்களையிட்டு விலையுயர்ந்த காகிதங்களை வீணாக்கினது எதற்காகவோ! லௌகிகப் பெரியார்கள் சிலர் எழுதியுள்ள வியாஸங்கள் நிற்க. பண்டிதரெனப்படுவோர் எழுதியுள்ள வியாசங்களில் "எம்பெருமானார் தர்சனம். "ஆழ்வார்கள் வளர்த்த வைஷ்ணவம். பராசரர்கண்ட விஷ்ணுதத்வம்" என்னுமிந்த மூன்று வியாஸங்கள் விவேகிகளால் உகக்கத்தக்கவையாகும். மற்றவை மற்றவையே.

46. நமக்கு ஜீவாதுவான உபயவேதாந்த ரஹஸ்யக்ரந்தங்களில் அச்சேறப் பெறுதனவும், அச்சேறியும் அருமைப்பட்டிருப்பனவுமான ஸ்ரீகோசங்கள் பல இல்லையா? அவற்றுள் ஒன்றை ஸுபரிஷ்க்ருதமாக வெளியிடும் பணி இந்த ஸமய விசேஷத்தில் வாய்த்திருந்தால் பொற்றாமரை மலர் நறுமணம் பூத்ததாகுமன்றோ. நடவாதது பற்றி நாம் சிந்தனை செய்வதைவிட்டிடுவோம்.

மணிவிழா மலரில் மிக முக்கியமாக அமைய வேண்டிய விஷயம்—ஸ்வாமியினுடைய வைபவ விசேஷங்களைப் பரமஸாத்விக ஸரணியில் எழுதுவித்துப் பிரசுரஞ் செய்வித்தலேயாகும். வெண்பாவாகவும் சுலோக புஷ்பாஞ்ஜலியாகவும் வசனமாகவும் வெளிவந்திருக்கின்றவை ஸ்ரீ ஸ்வாமியினுடைய பெருமைக்கு இறையும் தகாதவை. ஸ்ரீ பார்த்தஸாரதி பக்தஸமாஜ ஸபையார் ஸமர்ப்பித்ததாக வெளிவந்திருப்பதான 16 சுலோகங்கள்கொண்ட பத்ய புஷ்பாஞ்ஜலியைப்பற்றி ஆகாசத்தை நோக்கியழுவது தவிர வேறு என்ன சொல்லுவது? ஒவ்வொரு சுலோகமும் "வேங்கடார்ய குருவர்ய ஸுதீந் நமாம;" என்னும் முடிவு கொண்டது. ஒன்றிரண்டு மாறியிருப்பதிருக்கட்டும். ஸம்ஸ்க்ருதத்தில் எத்தனையோ அபப்ரம்சங்கள் நேருவதுண்டு; "நப்ரமாத்யதி கோ புவி" என்பர்கள். ஸுதீந் என்கிற வொரு ஸம்ஸ்க்ருத பதம் உலகில் நடையாடுவதாகக் கண்டாருமில்லை, கேட்டாருமில்லை. எழுதுவதில் ஏதோ அவத்யங்கள் நேருவதுண்டு; இப்படியொரு அஸம்பத்தம் ஒரு விசைக்குப் பதினறு விசை புகுவது அஸஹ்யம் அத்யந்த மஸஹ்யம். ஹரீங் கபீங்போலே ஸுதீந் என்று நினைத்துவிட்டார். எழுதுகிறவர்கள் ஏதோ மருண்டு எழுதிவிட்டாலும் ஆயிரக்கணக்கான பணத்தைச் செலவழித்து வெகு சிறந்த தாளிலும் மிகவுயர்ந்த லிபியிலும் அச்சேற்றுமவர்களும், இவற்றைக் கண்டு உள்ளம் பூரிக்கின்றவர்களும் இதையெல்லாம் ஸஹித்திருக்கிறார்களென்றால் என்னென்பது? அந்தபுஷ்பாஞ்ஜலியில் "ஸ்வகீயை: க்ருதிபி:" "உபந்யஸந்தி"...என்று இவைபோன்றுள்ளவை ஸுதீந் முன்னிலையில் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளாகவன்றோ கருதப்பட வேண்டியவை.

47. ஸாஹித்யவ்யாகரண வேதாந்த சிரோமணி, ஸம்ஸ்க்ருத ப்ரொபஸர் என்றொருவர் கத்யமாலை ஒன்று அழகாக எழுதியுள்ளார். உண்மையில் அழகானதே. இரண்டொரு பக்கம் எழுதினும் தவறுகள்வந்து புகவேண்டியது தலைவிதியாகிறதே. எழுதுகிறவர் "ஸர்வஸ்யாபி ஜகதஸ் ஸமுஜ்ஜிஜீவிஷயைவ க்ருதாவதாரௌ (ராமக்ருஷ்ணனௌ)" என்றார். ஸமுஜ்ஜிஜீவிஷா என்றொரு கம்பீரமான பத முண்டென்று தெரிந்து கொண்டாரிவர் என்பதற்கு ஸந்தோஷமே. அதன் ஸ்வருபத்தைத்தான் தெரிந்து கொண்டிலர்; உஜ்ஜிஜீவிஷை யென்பது ஜகந்நிஷ்டமேயொழிய ராமக்ருஷ்ண நிஷ்டமாகாது. ராமக்ருஷ்ண நிஷ்டமாக விவக்ஷித்து இங்கு ப்ரயோகம். ஸமுஜ்ஜிஜீவயிஷயா என்றிருக்க வேணும். உஜ்ஜீவிதுமிச்சா-உஜ்ஜிஜீவிஷா. உஜ்ஜீவயிதுமிச்சா—உஜ்ஜிஜீவயிஷா. இதற்கு வியாகரண சாஸ்த்ர ஞானம் அதிகமாகத் தேவையில்லை. ணிச்சு அந்தர்ப்பாவிதமென்று வாதம் எழும். வாதப்ரஸங்கம் இங்கு இடம் பெறவேண்டா. நாம் உணர்த்துவது விவேகிகளின் தெளிவுக்காகவத்தனை.

48. வெண்பாமாலை யென்று ஒன்று. பத்திப்பாமாலை யென்று பிரசுரம் செய்திருக்கலாகாதா? சில தமிழ்ப் புலவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் கட்டளைக் கலித்துறையும் வெண்பாவுமியற்றுவது அரிது; குறள் இயற்றுவது மிகவுமரிது. என்று;வார்த்தை நடந்ததாம். அதைக் கேட்டுக்கொண்டிருந்த வொருவர் 'குறளியற்றுவதில் என்ன அருமை? நாற்சீர் கொண்ட ஓரடியும் முச்சீர் கொண்ட மற்றோரடியுமிருந்தால் குறள்தானே' என்று சொல்லி, "சிறப்புடன் பூனைகள் இறப்பிலே யிருந்தக்கால், புறப்பட முடியாதா மெலிகளால்" என்று உடனே குறள் இயற்றிவிட்டார். இத்தகைய வெண்பாக்கள் மிக வியக்கத்தக்கவை. இதெல்லாம் இயற்றுகிறவர்கள்மீது குறைகூறுகிறபடியன்று. "செய்வன திருந்தச் செய்" என்பதறியாதே, திருந்தச்செய்ய ஆற்றலற்றவர்கள் இப்பணியில்முன்னிற்கும்படி செய்ததொன்றே சோசநீயம்.

49. இதற்கு முன்னே 'காரப்பங்காட்டுக் கருணை முகில்' என்றொரு சிறு புத்தகம் (மார்ச்சில்) வெளிவந்தது. அதில் சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸரென்பவரிடம் கட்டுரை யொன்று எழுதி வாங்கி, அதில் "காரப்பங்காடு ஸ்வாமி சொன்ன விஷயத்தையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பர்; இப்படி ஒன்றையே திரும்பத் திரும்பச் சொன்னால்தான் விஷயம்

அழுத்தமாக நெஞ்சிற்படும் " என்றெழுதச் செய்திருக்கிறார்கள்; அதைப்பார்த்த பெரியார்கள் பலரும் " இது சுவாமியிடத்தில் உண்மையன்புள்ளவர்கள் தலையிட்டுச் செய்த காரியமாகத் தோன்றவில்லையே " என்றே சொல்லிக்கொண்டிருந்தனர். 'ஸ்வாமி ஒரு தரம் சொன்ன விஷயத்தை மறுமுறை சொல்லாமல் க்ஷணந்தோறும் அபூர்வமாகவே ஸாதித்து வருகிறார்' என்றன்றோ எழுதியிருக்க வேண்டும். உண்மையன்புடையார் அப்படியன்றோ எழுதுவார் கள். ' உறவு போலேயிருந்து குளவிபோலே கொட்டுவர்கள்' என்கிற பழமொழிக்கிலக்கான நபர் செய்யும் செயல் ஸ்வாமிக்குத்தான் அவத்யாவஹம் என்பதை இனியாவதறிய வேணும். இதைப்பற்றி முக்கியமாகச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். " அபசப்தபயம் நாஸ்தி அப்பளாசார்ய ஸந்நிதௌ. குத்ஸிதோக்திபயம் நாஸ்தி கும்ரவாடி குலோத்பவே." என்றொரு ஸூபாஷிதம் உபந்யாஸகர்களின் கோஷ்டியில் ஸுப்ரஸித்தமாகவுண்டு. இதில் உத்தரார்த்தத்திற்கு இலக் கான வ்யக்தி "இருள்தருமா ஞாலத்து தெருள்தருமா தேசிகன் " என்று மகுடமிட்டெழுதிய வியாஸம் அபசப்தமயமும் குத்ஸிதோக்தி புஞ்ஜமுமானது, "தம்பிடி நாஸ்தி, தடபுடல் ஜாஸ்தி" என்னும்படியான நபர்கள் பலருண்டே. அடியேனிடம் ஒரு ஸ்வாமி அடிக்கடி வந்து "ஸவ்யாக்க்யானத்தோடு ஒரு ஸ்ரீமத் ராமாயணம் ஸாதிக்கவேணும்" என்பர். 'வியாக் கியானத்தோடு வேணுமா ? ஸவ்யாக்க்யானத்தோடு வேணுமா ? என்று கேட்பேன். 'வியாக் கியானத்தோடு அடியேனிடமிருக்கிறது, ஸவ்யாக்க்யானத்தோடு இருந்தால்தான் நல்லதென்று அப்பா அடிக்கடி ஸாதிக்கும்படியாயிருக்கும்' என்பர். ஸகுடும்ப ஸமேதராய் வரவேணு மென்பதை ஸஹகுடும்ப ஸமேதராய் என்று திருத்திக்கொடுக்கும் சிரோமணிகளுமுண்டே. இவ்வண்ணமாகவே இந்த சுனச்சேபர் "நம்ஸ்வாமி ஸஹஸ்ரநாம பாஷ்யத்தை பட்டர்பாஷ்யத் தோடு பலகால் ப்ரவசனம் செய்தருளியிருக்கிறார்" என்றெழுதுகிறார். ச்ருதப்ரகாசிகையோடு கூட ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனம்—தாத்பர்ய சந்த்ரிகையோடுகூட கீதாபாஷ்ய ப்ரவசனம்-என்னுமா போலே இப்படித்தானெழுத வேண்டுமென்று கொண்டாரிவர். பட்டர்பாஷ்யத்தோடுகூட ப்ரவசனம் செய்யப்பட்ட ஸஹஸ்ரநாமபாஷ்யம் சங்கரபாஷ்யமோ மத்வபாஷ்யமோவென்று கேட்டுணர வேண்டும். இவர் ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேப கோஷ்டியில் தானும் அந்வயித்திருப்ப தாக வெழுதுகிறார். அம்மாளுடைய கோஷ்டியில் ஸ்ரீ ஸுதர்சனபட்டர் போல் திகழ் கின்றார் போலும்.

**50.** திருவாய் மொழியில் (9—3—11) ஓராயிரமாய்ப் பதிகத்திற்குப் பலச்ருதி பாசுரத்தில் " இவைபத்தினின்பாலர் வைகுந்தமேறுதல் பான்மையே " என்றவிடத்தில் இவைபத்தினின் பாலர்-இப்பதிகத்தோடே ஏதேனுமொருவழியாலே அந்வய முடையவர்கள் என்றுள்ள வியாக் கியானங்களை யநுஸரித்து அடியேன் திவ்யார்த்த தீபிகையில் எழுதியிருக்கிறேன்—" இப்பாசுரங் களைக்கண்ட பாடமாக்கிச் சொல்லுவதோ, அர்த்தாநுஸந்தானம் பண்ணுவதோ, பிறர் அநுஸந் திக்கக் கேட்டிருப்பதோ, திருவாய்மொழி ஸேவிக்குமிடத்தில் இருந்து உறங்குவதோ இப்படிப்பட்டவற்றில் ஏதேனுமொன்றைச் செய்பவர்களும்..." என்று.—டில்லியில் உயர்ந்த பதவியில்வாழ்ந்த மஹாமேதாவியான ஸர் K.S. கிருஷ்ணன்ஸ்வாமி இதைக்கடாக்ஷித்து அடியே னுக்கு (எழுதினார்) —" நான் காஞ்சீபுரத்தில் மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம் ஸேவிக்க ஆசையோடுவந்து ஒருவாரம் தங்கியிருந்தபோது அங்கு ஆச்சர்யமாக நடக்கிற திருவாய்மொழி ஸேவையை யனுபவிக்க வேணுமென்றே கோஷ்டியில் தவறாது அந்வயித்து வந்தேன்; ஆனால் அடியேன் பாபப்ராசுர்யத்தாலே கோஷ்டியில் இருந்தபடியே நித்ரைதான் செய்ய நேர்ந்தது; ஆனாலும் வைகுண்ட ப்ராப்திக்கு ஒருவிதமான கைம்முதலுமில்லாதிருக்கும் அடியேனுக்கு ஒரு கைம்முதல் கிடைத்துவிட்டதென்று இன்று உள்ளம் பூரிக்கிறேன் " என்றெழுதினார். இதன் பொருளை அடியேன் விரைவில் க்ரஹிக்க முடியாமலிருந்தது. திவ்யார்த்த தீபிகையில்

இவை பத்தினின்பாலர்* என்றவிடத்து அடியேனெழுதியிருப்பது அப்போது நினைவுக்கு வராமலிருந்ததனுல். பிறகு அவர்க்கே யெழுதித் தெளியவேண்டியதாயிற்று. திருவாய்மொழிக்குச் சொன்ன பலன் ஸ்ரீபாஷ்யத்திற்கு முண்டென்னக் குறையில்லையே. ஆகவே இவர்க்குப் பெரியதொரு முக்திமூலம் கிடைக்கிறதென்பதுபற்றி யுகக்க வேண்டியதே.

51. ஸ்ரீஸ்வாமியின் வைபவஅர்ணவத்தில் ஒரு திவலையும் அறியகில்லாத விந்த நபர் ஸ்வாமிக்குப் பெருமை விளைக்க வேணுமென்பது வெளிக்காட்டாய், சிறுமையை விளக்க வேணுமென்பதே உட்கருத்தாய்ச் செய்திருக்கின்ற சில்விடமங்கள் உலகுக்குத் தெரியவேண்டி, சிறிதெடுத்துக் காட்டித் தத்துவமுணர்த்த வேணுமென்றே இங்குச் சில பக்கங்களெழுதுகிறேன். ஏற்கெனவே ஸ்ரீ ஸ்வாமி வைபவபரமாக **காரப்பங்காட்டுக் கருணைமுகில்** என்றொரு சிறு புத்தகம் ஒருவரால் வெளியிடப்பட்டிருப்பதைப் பலருமறிவர். நானும் கீழே ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அதில் ஒரு சிறுவர் பெயரால் 'அமைதியின் திருவுருவம்' என்றொரு கட்டுரை வெளியிடப்பட்டது. அதில் அநவஸரமாக த்ரௌபதீ விஷயகவிவாதத்தைப் பிரஸங்கித்து "வேங்கடார்ய சதகமென்றொரு தூஷணக்ரந்தத்தை ஒரு ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமியே வெளியிடவும் ஸ்வாமி அதைப் பொருள்படுத்தாமல் மிக்க பொறுமையோடு தம்கருத்தை ஸ்தாபனம் பண்ணினதை இவ்வளவு குறுகிய காலத்திற்குள்ளாக எந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமியும் மறந்துவிட்டிருக்க முடியாது" என்றெழுதியிருந்ததைக் கண்ட அடியேன் தத்துவத்தை உலகுக்கு நினைப்பூட்டாமலிருக்க முடியாமல் (கீழேப்ரஸ்தாவித்த) ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணத்தில் (பக்கம் 85–ல்) எழுபத்து நான்காவதான உபந்யாஸத்தில் எழுதியிருப்பதாவது :—

> "இதில் பிரஸ்தாவிக்கப்பட்டுள்ள ஸ்ரீ வேங்கடார்யசதகம் அடியேனுடையதே. 116 சுலோகங்கள் கொண்ட இந்நூல் தமிழுரையுடனும் விரிவான முன்னுரையுடனும் 27—8—1959-ல் அடியேனுடைய வைதிக மனோஹராவென்னும் ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையின் அனுபந்தமாக (7 வருடங்களுக்கு முன்பு) வெளியிடப்பட்டது. இதை ஒருவரும் மறந்திருக்க முடியாதென்றது ஸத்தியமே. கா. வே. ஸ்வாமியோடு சேர்ந்த பல விவாதங்களுக்கு முற்றுப்புள்ளியிட்டது இந்த நூல்தான். விவாதம் விளைந்த விஷயங்களில் த்ரௌபதீ விஷயம் ஒன்றேயன்று (1) நப்பின்னைப் பிராட்டி. (2) கப்யாஸ ச்ருதி. (3) தயிரரவப்பாடம். (4) லக்ஷ்மணன் அஸத்யவாதி. (5) மந்தோதரியின் புலம்பல். (6) கட்டில்–கட்டிலில். (7) வாத்ஸல்யம். (8) யௌவனம். வந்து தலைகாட்டினவாறே......என்று இனைய பல விஷயங்களில் விவாதம் விளைந்து இவை எல்லாவற்றுக்கும் அசைக்கவொண்ணுத நிருபணங்களினுல் நிகமனம் செய்திருப்பது இந்த சதகக்ரந்தம். கீழே அடியேன் விஜ்ஞாபித்த விவாத விஷயங்களெல்லாம் இந்நூலிலுள்ள நூற்றுப்பதினறு சுலோகங்களில் அலசியலசி ஸித்தாந்தார்த்தம் நிலைநாட்டப்பட்டுள்ளவாற்றை இன்றைக்கும் என்றைக்கும் தடஸ்த வித்வான்கள் காணலாம். இந்நூலின் பிரதிகள் இற்றைக்கும் நூறுக்கு மேலுள்ளன. அபேக்ஷகர்கள் அரை ரூபாய் ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம்."

என்பது அங்குள்ள அறிக்கைச்சுருக்கம். இங்ஙனே உலகுக்கு உண்மைகள் தெரிவதற்காகவேயன்றோ ஒவ்வொருவரும் உறவினர்போல் பரிவுகாட்டி யெழுதுவது. ப்ரஸ்துதரான சுநச்சேபர் நெடுநாளாய் மறைந்தும் பலர்க்கு மறந்தும்போன பல தத்துவங்களை உலகம் தெரிந்துகொள்வதற்காகவே தனது கட்டுரையை வீணே வளர்த்திருக்கின்றுர். இவ்வுலகம் இருள்தருமா ஞாலமென்பதையும், இதில் தெருள்தருமாதேசிகனுய் நம் ஸ்வாமி திருவவதரித்துள்ளாரென்பதையும் யாரே மறுக்கவல்லார்?*பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்றுப்போலே பிறந்து வளர்ந்த வீறுகளை ஸாத்விகமான முறையில் எத்தனை பக்கங்களும் எத்தனையோ புத்தகங்களுமெழுதலாமே. இடையில் "*சிங்கப்பெருமாள் திருவுள்ள வெறறி*" என மகுடமிட்டு ரஜஸ்தமோ குண வைபவம் விளங்க எழுதியுள்ள சில வரிகளைக் கேளீர் :—"சிங்கப்பெருமாள் காலத்திலேயே செவ்வாயைச் சனியென்று வாதிப்போர் தொகை மலிந்திருந்தது. பூர்வாசார்ய

க்ரந்தங்களுக்குப் பொலிவூட்டுவதற்குப் பதிலாக அவற்றைப் பூசிமெழுகித் திரையிட்டு வைத்து நவீன வுரைகள் வெளிவரத் தலைப்பட்டன. ஸம்பிரதாயத்தில் சண்டைச் சுவடிகள் மலிந்து, தெளிந்த தீர்த்ததடாகமாய்த் திகழ்ந்த நம் தரிசனத்தில் மதயானைகள் புகுந்து சேறும் சக்தியுமாய்க் குழப்பின; நிந்தைக் கந்தைகள் நிதமும் வெளியாகும் அந்நாளில்......" என்று எழுதிக்கொண்டு போகிறார். இவ்விடத்து விவக்ஷிதங்களை அடைவே கேளுங்கள். "சிங்கப் பெருமாள் திருவுள்ள வெற்றி" என்னுஞ் சொற்றொடரைக் காணும்போதே உலகத்தெல்லாம் சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி யென்னும் நமது நூல்கள் அத்தனையும் நினைவுக்கு வந்தே தீரும். இப்போது நடப்பது ஸ்ரீ ராமாநுஜன் 214. நூற்றுப்பதினான்கு லக்கமுள்ள ஸஞ்சிகையிலிருந்தே சிங்கப்பெருமான் திருவாக்கு வெற்றி மலர்கள் நறுமணம் வீசத் தொடங்கியிருக்கின்றன. வெற்றியின் முதல் மலர், இரண்டாவது மலர், மூன்றாவது மலர், நான்காவது மலர், ஐந்தாவது மலர், ஆறாவது மலர்...என்றிப்படி ஸரம்ஸரமாக மலர்களும் மாலைகளும் வெளிவந்து, "நாற்றிசையுங் கொண்டாடும்" "நற்றவர்கள் கொண்டாடும்" "நல்லவர்கள் கொண்டாடும்" "நான் மறையோர் கொண்டாடும்" என்று உபதேசரத்தின மாலையில் அருளிச்செய்த கணக்கிலே நல்லவரும் நற்றவரும் நான்மறையோர்களும் நாற்றிசை யோர்களும் கொண்டாட நிற்கின்றன.

52. மஹான்களின் திருவுள்ளமும் வெற்றிபெறும்; திருவாக்கும் வெற்றிபெறும். எதுவும் பழுதுபடாது. நெடுநாளைக்கு முன்னர் மறைந்துபோனவர்களின் திருவாக்கை நாம் கண்டறிய இயலுமேயல்லது திருவுள்ளத்தைக் கண்டறிய இயலாது. ஆனால், பல்லாயிரமாண்டுகட்கு முன்பு மறைந்தவர்களின் திருவுள்ளத்தையும் மஹாமேதாவிகளான நம் ஆசார்ய ஸார்வபௌமர்கள் கண்டறிந்து எழுதிவைத்திருப்பதானது அவர்களின் திருவாக்கைக் கொண்டேயாம். திருவாக்கு இல்லையென்றால் திருவுள்ளங் கண்டறியய ப்ரஸக்தியே கிடையாதன்றோ. ஆகவே சிங்கப்பெருமாள் திருவாக்கு என்று பலவாண்டுகளாக



தேவப் பெருமாள் தையில் மகத் திருநாள் திருவீதி கோஷ்டி

உலவிவருமது எத்தகைத் தென்று தெரிந்து கொள்ளவேண்டும். தானேயெழுதிய தன் சரிதை யென்னும் எனது சரித நூல் அச்சாகி வெளிவந்து பத்து வருடங்களாயின. அது ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவே நான்கு பகுதிகளாக வெளிவந்து உலகம் பரவியுள்ளது. அது ஸ்ரீ வைஷ்ணவர்களின் திருமாளிகை தோறும் விளங்கி வருவதால் அதைப்பற்றி இங்கு நாம் அதிகமாக வெழுதத் தேவையில்லை. க்வாளியர் மாநகரில் வாழும் ஸ்ரீ உ. வே. S. ஸத்யமூர்த்தி ஸ்வாமிகள் அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததும் உலகம் பரவியுள்ளது. (தமிழில் பக்கம் 140-ல் சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் திருவுருவப் படத்துடன் அவருடைய திருவாக்கு விளங்குகின்றது. அதன் சுருக்கம் வருமாறு:—

சிங்கப்பெருமாள் ஸ்வாமி உபய வேதாந்த ரஹஸ்ய ப்ரவசநுர்த்தமாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்ந்தருளுங்காலத்திலே அங்கு வானமாமலை மடத்தில் வாஸமாக வெழுந்தருளியிருந்தார். அப்போது அடியேன் அவ்விடம் விடைகொண்டு அந்த மடத்திலேயே சிலநாள் தங்கியிருந்தேன். என்னுடைய நோட்புத்தகமொன்றில் என்னுடைய ஜாதகம் குறிக்கப்பட்டிருந்ததை அடியேன் வெளியே போயிருந்தபோது இந்த ஸ்வாமி தாமே கடாக்ஷித்தருளி, அடியேன் வந்த பிறகு ஜாதக பலன்களை விவரித்துக்கூறத் தொடங்கினர். அப்போது அந்த ஸ்வாமி அழுத்தம் திருத்தமாக ஸாதித்ததாவது—"ப்ரதிவாதி பயங்கர ரென்கிற குடிப்பெயர் உமக்கு அந்வர்த்தமாகவேயிருக்கும். உலகத்திலுள்ள வித்வான்கள் யாவரும் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில் மாட்டிக்கொள்வார்கள். இதை நீர் பரீக்ஷையாகப் பார்க்கலாம். வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்கிற வாசியில்லாமல் பெரும்பாலும் எல்லாருமே வந்து உம்மிடம் சிக்கிக்கொள்வார்கள். சிக்கிக்கொள்வதோடு நிற்கமாட்டார்கள்; திக்குமுக்கலாடி நிற்பார்கள். சனிக்கிழமையை செவ்வாய்க்கிழமையாக நீர் சொல்லிவிட்டாலும் அது செவ்வாய்க்கிழமையே ஆய்விடும். இத்தால் நீர் விதண்டாவாதம் செய்வீரென்றதாகாது. எத்தனை வித்வான்கள் திரண்டு போராடினாலும் உம்முடைய வாதந்தான் ஸித்தாந்தமாக நிற்கும்—என்று சொல்லி இதற்குப் பல சுலோகங்களும் பாட்டுக்களும் ஸாதித்தார்...இந்தத் திருவாக்கு அன்றைக்கே அவ்விடத்திலேயே பலிக்க ஆரம்பித்தது—இத்யாதிகள் விரிவாக எழுதப்பட்டிருப்பதைக் காணுதாரில்லை.

இது ஏகாந்த மன்றிக்கே லோகாந்தமாகப் பலரறிந்ததேயாதலால் இது கல்பிதமான திருவாக்கென்று சொல்லவோ எழுதவோ இதுகாறும் யாரும் முன்வரவில்லை. சனிக்கிழமை விஷயத்தை இப்போது ப்ரஸங்கிக்கின்ற சுனச்சேபர் சிங்கப்பெருமாள் திருவாக்கையே எடுத்துக் காட்டினுராகிருர். அதுவும் ஸமீபகாலத்தில் பலித்தபடியை சென்னைப் பிரபல அட்வகேட் உ. வே. பிள்ளைபாக்கம் பஹுகுடும்பி அனந்தாசாரியர் ஸ்வாமியின் திருவாக்கு உலகமறியச் செய்திருக்கின்றது. ஆகவே "செவ்வாயைச் சனி யென்று வாதிப்போர்" என்ற சுனச்சேபருடைய பரிஹாஸ மொழி சிங்கப்பெருமாள் ஸ்வாமியையே சார்ந்ததாயிற்று.

53. "பூர்வாசார்ய க்ரந்தங்களுக்குப் பொலிவூட்டுவதற்குப் பதிலாக அவற்றைப் பூசி மெழுகித் திரையிட்டு வைத்து 'நவீனவுரைகள் வெளிவரத் தலைப்பட்டன" என்றதற்குக் கேண்மின். இப்போது உபய வேதாந்தங்களிலும் ரஹஸ்யங்களிலும் காலக்ஷேபக்ரந்தங்களாக எந்தெந்த பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திரத்னங்கள் விளங்கி வருகின்றனவோ அவையெல்லாம் அடியேனுடைய பதிப்பாகவே உலகம் பரவியுள்ளன. நம்முடைய காரியாலயத்திற்கு "க்ரந்தமாலா" என்றே பெயரிட்டிருப்பதற்குச் சேர முப்பதாண்டுகட்கு மேலாகப் பூர்வாசார்ய க்ரந்தமாலா ப்ரகாசனங்கள் அபரிமிதமாக நடந்துவந்து கொண்டிருக்கின்றன. கீழ்ப்ரஸ்தாவித்த தன் சரிதையில் (பக்கம் 425-ல்) "அடியேன் பரிஷ்கரித்து வெளியிட்ட புராதன க்ரந்தங்கள்" என்னும் மகுடத்தின்கீழ் நாற்பத்தைந்து புராதன க்ரந்தங்கள் அடியேன் பரிஷ்கரித்துப் பதிப்பித்தவை உலகுக்குக் காட்டப்பட்டுள்ளன. அந்த லக்கம் 1955-ஆம் வருடம் வரைக்குமே. பூர்வாசார்யக்ரந்த ப்ரகாசனமென்கிற கைங்கரியம் இடையருமல் தொடர்ந்தே நடைபெற்று வருகின்றதென்பதை கூபகூர்மங்கள் அறிய ப்ரஸக்தியேது.

54. இனி "நவீன வுரைகள் வெளிவரத் தலைப்பட்டன" என்றதைப் பற்றிச் சிறிது விரிவாகவே தெரிவிக்கிறேன். இந்த சுனச்சேபர் மேலேயெழுதியுள்ளதாவது—திவ்யப்ரபந்தமனைத்துக்கும் உரையெழுதின பெரிய வாச்சான் பிள்ளை யருளிய பெரியாழ்வார் திருமொழி வியாக்யானம் கரையானுக்கிரையாக அதற்கு மட்டும் மாமுனிகள் உரையருளினதாகவும்,

அதன் மாதுர்யத்தைக்கண்ட பலரும் நாலாயிரம் முழுமைக்கும் ஸ்வாமியே உரையெழுத லாகாதோவென்று விஜ்ஞாபிக்க அடியேனெழுதுவது முறையன்று என சிஷ்யர்களை சிக்ஷித்தார் மாமுனிகள்—என்றும். இங்கே உலகுக்கு உணர்த்துகிறேன். பெரியாழ்வார் திருமொழி முழுமைக்கும் திருவாய்மொழிப் பிள்ளையின் வியாக்கியானம் மாமுனிகளின் வியாக்கியானத்தின் தலைமேல் அச்சிடப்பட்டுமுள்ளது அஃதிருக்க, மாமுனிகள் ஏன் தாமொரு வியாக்கியானமிட்டருளினார்? உரைதந்தருள வேணுமென்று கோரினவர்களுக்கு பிள்ளையின் வியாக்கியானமிருக்க நானென்று எழுதுவது அபசாரமல்லவா? அதையே கொள்ளுங்கள்' என்று நியமிக்க வேண்டியிருக்க, அது செய்யாததேன்? உபதேசரத்தின மாலையில் பெரிய வாச்சான் பிள்ளையின் ப்ரசம்ஸையைத் தலைக்கட்டினபின் "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்குமில்லையே—தஞ்சீரால் வையகுருவின் தம்பி மன்னுமணவாள முனி, செய்யுமவைதாமுஞ்சில" என்னும் பாசுரத்தினால் நஞ்சீயரையும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரையும் வாதிகேஸரி முனிகளையும் சிற்சில திவ்யப்ரபந்தங்களுக்கு வ்யாக்யாதாக்களாகக் குறிப்பிட்டருளின மாமுனிகள் நானூற்றுநாற்பது பாசுரங்களுக்கு வியாக்கியானமிட்டருளின ஸ்வாசார்யரைத் தொடாது விட்டதென்னோ? இது மிகுந்த அபசாரமன்றோ? என்று கேட்டால் என்னவிடை யிறுப்பரிவர்? அது திருவாய் மொழிப் பிள்ளையின் வியாக்கியானமன்று என்கிற நமது முடிவை யாதரிப்பதாகச் சொல்லவருவர். அடுத்த கேள்விவரும்; ஸ்ரீவசன பூஷணத்திற்கும் ஆசார்யஹ்ருதயத்திற்கும் ஆய்ப்படி யென்கிற ஜகந்யாசார்ய வியாக்கியானம் லுப்தமாகாமலிருக்கச் செய்தேயும் அவற்றுக்கு மாமுனிகள் ஏன் வியாக்கியானமிட்டருளினர்? என்று கேட்டால் வாய் திறக்க வழியுண்டோ? திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரமிருக்கவும் இருபத்து நாலாயிரம், அஃதிருக்கவும் முப்பத்தாறாயிரம், அஃதிருக்கவும் பன்னீராயிரம் அவதரித்தன. இயற்பாவுக்குப் பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியானமிருக்கவும் அப்பிள்ளையுரை தோன்றிற்று. இங்ஙனே எத்தனை காட்டலாம். ஒரோ வைசத்யத்தைக் கருதியே பின்னையவுரைகளும் தோன்றுகின்றன வென்றும், அவற்றினால் உலகுக்கு உபகாராதிசயமே யென்றும் நன்கறியலாம். தத்வத்ரய வியாக்கியான அவதாரிகையில் இது காண்க.

55. பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் அவத்யங் கூறி விச்வாமித்ரஸ்ருஷ்டிபோல உரையெழுதும் அல்பச்ருதர்களே உபாலம்பத்திற்கு உரியவராவர்கள். பூர்வாசார்ய திவ்ய ஸ்ரீ ஸூக்திகளுக்குக் கவசம்போல தோன்றியுள்ள அடியேனுடைய உரைகள் யாவும் நூற்றுக்கணக்கான வித்வான்களால் புகழப்பட்டவையே யொழிய, இவற்றில் குறைகூறிப்பிழைத்த வித்வான் ஒருவருமிலர். அங்ஙனம் புகழ்ந்தவர்களில் தலைவர் நமது காரப்பங்காட்டுக் கருணைமுகில் ஸ்வாமியே யாவர். உலகமறிந்தவதனை இந்த சுனச்சேபர்க்கு மட்டும் உணர்த்துகிறேனிங்கு "ஜகதாசார்யர்" என மகுடமிட்டு ஸ்ரீ ஸ்வாமி யெழுதிய கட்டுரையிது :

"பெரியவாச்சான்பிள்ளை அநுக்ரஹித்த ஸகல அருளிச் செயல்களின் வ்யாக்யாநங்களையும், ஸ்ரீ ராமாயணத்தில் பலபல ச்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வ்யாக்யானங்களையும் ஸ்தோத்ரரத்நாதி வ்யாக்யாநங்களையும் அனுபவிக்குங்கால் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்கு இம்மஹான் செய்த மஹோபகாரங்கள் அதிப்ரஸித்தங்களென்று உபபாதித்துச் சொல்ல வேண்டுமோ? மணவாள மாமுனிகள் 'வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை' என்று அருளிச் செய்திருக்கிறார். ஸமகாலத்திலவர்களை யொழிய, பின்புள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஈடுமுப்பத்தாறாயிரம் என்னும் க்ரந்தத்தை உபகரித்த ஔதார்யத்தையே புகழ்ந்து வள்ளல் என்றும், ஆழ்வார் ஊருநாடு முலகமுந் தம்மைப் போலிருக்கும்படி திருவாய்மொழிபாடினாற் போல் இவர் நாடறிய ஈடுநன்குரைத்தது என்றும் கொண்டாடுகிறார். இவ்வாறு தாமும், தமக்கு நயநத்வயமான சிஷ்யர்கள் முகமாகவும் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்குப் பரமோபகாரத்தைச் செய்தருளிய ஜகதாசார்யரான நம் பிள்ளையின் திருவவதாரமே ஜகதாசார்ய

ரான நம்பிள்ளையின் திருவவதாரமே ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதியா யெழுந்தருளியிருக்கிற காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி என்னும் விஷயம் உலகறிந்ததேயாம். நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே கற்றறிந்து அந்தப் பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயலுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தாரென்பது ப்ரஸித்தம். பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகிய இம்மஹான்களின் அருளிச் செயல் வ்யாக்யாநங்களிலும் ஸகல சாஸ்திரங்களையும் நாமனுபவிக்கிறோம். நம் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி உபந்யாஸங்களிலும், பெரியவாச்சான்பிள்ளையைப்போலவே உபகரித்த திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் அருளிச்செயல் வ்யாக்யானங்களிலும் பஞ்சஸ்தவம் முதலான ஸ்தோத்ர வ்யாக்யானங்களிலும் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கும்படி பாக்யம் பெற்றுள்ள நமக்கு ஸ்ரீ ஸ்வாமியின் அவதாரத் தன்மை ப்ரத்யக்ஷஸித்தம். ஸ்ரீஸ்வாமி இவ்வுலகில் எண்ணிறந்த ஷஷ்டி அப்தபூர்த்தி மஹோத்ஸவங்களைக் கண்டருளி ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை ப்ரவசன முகங்களாலும் க்ரந்த முகங்களாலும் ஓங்கித் தழைக்கச்செய்து எழுந்தருளியிருக்க ஸ்ரீ பார்த்தசாரதி அருள்க.

**வெங்கடாசாரி**, காரப்பங்காடு.

56. அன்பர்களே! அடியேனுடைய தமிழுரைகள் நிற்க. தமிழிற்போலவே ஸம்ஸ்க்ருத ஆந்திர பாஷைகளிலும் அடியேனுடைய விரிவான வியாக்கியானங்கள் இற்றைக்கும் வெளி வந்து கொண்டேயிருக்கின்றன. இவ்வெளியீடு தொடங்கின காலத்தில் திருப்பாவைக்கு வெகு வெகு விரிவாக எழுதி வெளியிட்ட ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் தினமணியின் விமர்சனத்திற்குச் சென்றது; அப்பத்திரிகையின் ஆசிரியர் நம் வேங்கடவர்க்கு அதையனுப்பி விமர்சன மெழுதியனுப்ப வேண்டினார்கள். அப்போது நம்ஸ்வாமி அவ்வுரையைப் பூர்த்தியாக அநுபவித்து எழுதியனுப்பிய மதிப்புரை 14—2—54உ தினமணிச் சுடரில் வெளிவந்துள்ளது. அதையும் உலகம் அநுபவித்தேயுள்ளது. காணுதார் இங்குக் காண்க

## "திருப்பாவையின் ஸம்ஸ்கிருத வியாக்யானம்" மதிப்புரை.

*[இயற்றியவர்—ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி]*

இந்த ஸம்ஸ்கிருத வியாக்யானம் முன்னோர் உரைகளை முற்றுந்தழுவி மிக அழகான ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதி வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீப்ரதிவாதி பயங்கர ஸ்வாமி உபய வேதாந்தங்களில் மஹாப்ராஜ்ஞர் என்பது உலகறிந்ததேயாம். ஸிம்ஹியின் வயிற்றிற் பிறந்த ஸிம்ஹக்குட்டிபோன்று ஸ்ரீ ஸ்வாமியிடம் பிறந்த இவ்வியாக்யானமும் வீறுபெற்று விளங்குகின்றது என்னில் இது கேவலம் ஸ்துதியாகாது. ஒவ்வொரு பாட்டிலும் ஸ்வாபதேசார்த்தம் மிக அழகாக நிருபிக்கப்பட்டுள்ளது இவ்வியாக்யானத்திற்குத் தனிச் சிறப்பாகும் மேலும் பெரியவாச்சான்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் அருளிச்செய்த வியாக்யானங்களில் காணக்கிடைக்காத சில கற்பனைகளும் ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் ஸம்ஸ்[illegible] வியாக்யானத்தில் உள்ளன. •புள்ளின்வாய் கீண்டானை• என்பது பதின்மூன்றும் பா[illegible] இப்பாட்டுக்கு பெரியவாச்சான்பிள்ளையும் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரு[illegible] முறையே பின்வருமாறு அவதாரிகை அருளிச்செய்திருக்கிறார்கள். "நம் கண்ணனுண்டாகி[illegible] தானே வருகிறானென்று கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறாள்"; —"மனத்துக்கினியானை பாடவும் என்று இவன் சொன்ன பாசுரத்தை அசல் மாளிகையிலே கிடப்பாளொரு பெண் பிள்ளை கேட்டு, நம் அபராதம் தீர இவர்களுக்கு வார்த்தை சொல்லுவோமென்று இங் ராமவிருந்தாந்தம் சொன்னாருண்டோ? என்ன, "ராமவிருத்தாந்தமும் சொன்னோம்; க்ருஷ்[illegible]

விருத்தாந்தமும் சொன்னோம்" என்கிறார்கள். ஜநந்யாசாரியரும் இக்கருத்தையே தமது வியாக்யானத்தில் இங்கு வெளியிட்டிருக்கிறார். இங்கு அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் வியாக்யானம் வெகு ரஸமாயும் விரிவாயும் அமைந்துள்ளது. அதன் சுருக்கம்: 'கனைத்திளங் கற்றெருமை' என்பது கீழ்ப்பாசுரம். அங்கு ஸ்ரீகிருஷ்ணன் பாடப்படாமல் ஸ்ரீராமன் மட்டும் 'மனத்துக்கினியான்' என்று போற்றப்பட்டுள்ளான். இதனால் கோகுலத்தில் கோபிகைகளுக்குள் பெரிய கலகம் நேர்ந்தது; கிருஷ்ணனையே நாயகனாகப் பெற்றுள்ள நம்முள் ராமனைப் பாடினார் யார்? அயோத்யையில் கிருஷ்ணனைப் பாடினால் அங்குள்ளார் அதைப் பொறுப்பரோ? கிருஷ்ணனைவிட ராமன் மனத்துக் கினியானோ? நம் தேவதையைவிட்டு மற்றொரு தேவதையைப் பாடினால் குற்றமாகாதோ? என்று. இச்சமயத்தில் ஸ்ரீராமன் கிருஷ்ணன் இவ்விருவருடையவும் உண்மையை உணர்ந்த ஒரு கோபிகை 'ராமன் யார்? கிருஷ்ணன் யார்? இருவரும் ஒருவர் தானே?' என்று ஆதாரங் காட்டிச்சொல்ல கோபிகைகளும் கலக்கந்தீர்ந்து அதற்கிசைந்தவர்களாய் இரு வகுப்பினராய்ப் பிரிந்து கிருஷ்ண சரிதத்தையும் ராம சரிதத்தையும் இப்பாசுரத்தில் சேர்த்துப் பாடுகிறார்கள். இவ்விஷயம் ரஸிகர்களுக்கு வெகு ரஸமானது என்பது கூறாமலேயே விளங்கும். ஸம்ஸ்க்ருதபாஷா பரிசயம் பெற்றுள்ளவர்களுக்கு இந்த வியாக்யானம் மிகவும் பயன்படும்.

*காரப்பங்காடு—**வேங்கடாசாரியார்**.*

57. ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளே! இதே ரீதியில் உண்மையான உகப்புடன் பலபல பத்ரிகைகளில் பரவசர்களாகஎழுதிவெளியிட்டுள்ளவர்கள் தென்கலையார் வடகலையார் ஸ்மார்த்தர்கள் மாத்வர்கள்வைதிகர்கள்லௌகிகர்கள் என்னும் வாசியற நூற்றுக்கணக்கில் தேறுவார்கள். இதை அடியேன் அபூர்வமாக உணர்த்த வேண்டிய அவசியமில்லை. இவற்றால் அடியேன் பெருமை பெற்றுவிட்டதாக நினைப்பதுமில்லை. நன்னூலில் "தன்னுடையாற்றலுணராரிடையினும், தன்னை மறுதலை பழித்த காலையும்" என்று விசேடித்துக் கூறிய கட்டளையிலே இவை தெரிவிக்க ப்ராப்தமாயிற்று. இந்த ஸந்தர்ப்பத்தில் முடிவாக வுணர்த்த வேண்டிய தொன்றே

## பல உபந்யாஸகர்களின் ருஜுவான கடிதங்கள்

அடியேனுடைய புத்தகங்களைக் கடைகளில்வாங்கி உபயோகங்கொள்ளு முபந்யாஸகர்கள் மிகச்சிலரே. பலர் ஆர்ஜவத்துடன் நேரில் ஸாதிப்பதும் ஸ்ரீமுகங்களால் தெரிவிப்பதும் கீழ்க் கண்டவாறு;

"தேவரீருடைய ஸ்ரீகோசங்கள் சிலவற்றைக் காண நேர்ந்தது; அடியேனுடைய ப்ரவசனங்களுக்கு அவை செய்யுமுபகாரம் அளவிலடங்காது. வாயைத் திறக்க சக்தியற்றவர்களும் துணிந்து உபந்யாஸங்கள் ஆரம்பிப்பதற்கு தேவரீருடைய நூல்களே ஹேதுவாகின்றன வென்றால் இதை யாரும் ஆக்ஷேபிக்க முடியாது; ஆக்ஷேபிக்கவும் மாட்டார்கள். தேவரீருடைய எல்லா நூல்களையும் அடியேனுக்கு க்ருபயா உபகரிக்கவேணும். யதாசக்தி மூல்யமும் ஸமர்ப்பிக்க ஸித்தனாயிருக்கிறேன். எல்லாத்துறைகளிலும் தோன்றியுள்ள தேவரீருடைய எல்லா நூல்களும் அடியேன்போல்வாரிடத்திலிருந்தால்தான் ஸார்த்தகமாகும். தேவரீருடைய நூல்களைக்கொண்டே ஜீவிக்கின்ற சிலர் க்ருதக்னர்களாய எதிரம்பு கோப்பதுமுண்டே; அன்னார் வகுப்பில் எங்களைச் சேர்த்துக்கொள்ளலாகாது." என்று

இப்படியெழுதியுள்ளவர்கள் இன்னின்னாரென்பது ஏற்கெனவே வெளிவந்து உலகங்கண்ட விஷயமாதலால் இங்கு விவரிக்கத் தேவையில்லையென்று விடுக்கப்பட்டது. "உபந்யாஸ ஸௌபாக்யம்" என மகுடமிட்டே அடியேன் பல வுபந்யாஸ நூல்களை வெளியிட்டு வருவதால் அவற்றை உபஜீவிப்பார்திறத்தில் அடியேன் உகப்புக்கொள்பனேயன்றி அழுக்காறே

அருவருப்போ கொள்பவனல்லேன். இக்காலத்து உபந்யாஸகர்களில் உள்ளவாசிகளை ஸ்ரீரங்கத்தில் ப்ரவசநாசிரதராய் வாழும் ஸ்ரீஉ. வே. வித்வான் தி. அ. சடாபிஷேகாசார்யஸ்வாமி ரஸகனமாகச் சொல்லக்கேட்டிருக்கிறேன். அதாவது, சிலர் அடியேனுடைய திவ்யார்த்ததீபிகை போன்ற உரைப்புத்தகங்களையும் அபூர்வராமாயணுதி உபந்யாஸ நூல்களையும் கையில் வைத்துக்கொண்டே ப்ரவசனம் செய்து போருவதுண்டு. சிலர் அப்புத்தகங்களை மறைவாக மட்டும் சிந்தனைசெய்து அவற்றிலுள்ள விஷயங்களையே யெடுத்துரைத்து, இடையிடையில் ஒன்றிரண்டு விஷயங்களை யெடுத்துக்கொண்டு 'இன்னார் இப்படி எழுதுகிறார், அது தவறு' என்று கண்டித்துப் பேசும் முகத்தால் தம்முடைய உபந்யாஸ விஷயங்களுக்கு அடியேனுடைய உபந்யாஸ நூல்களும் உரைநூல்களும் ஆதாரமல்லாதது போலவே வெகு சாதுரியமாகக் காட்டிக்கொள்வதுண்டு என்று. இத்தகைய விசித்திர வைகரிகளையெல்லாம் அபிஷேகம் ஸ்வாமி தவிர மற்றும் பல மஹான்கள் ஸ்ரீமுகத்வாரா தெரிவித்துக் கொண்டுமிருக்கிறார்கள்.

58. மணவாள மாமுனிகளின் காலத்தில் ஆங்காங்கு திவ்யப்ரபந்தோபந்யாஸங்கள் நடந்து கொண்டிருந்தனவாம், அதைப்பற்றி உபதேசரத்தினமாலையில் ஒரு பாசுரமருளிச்செய்துள்ளார். அதாவது, "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந்தெரிய, வியாக்கியைகள் செய்வார்—அரியவருளிச்செயல் பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச்செயலாய்த்தறிந்து.". என்பது. நாலாயிரத்திற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான மருளிச்செய்திருக்கவே 'நான் திருமாலை சொல்லுகிறேன், நான் திருமடல் சொல்லுகிறேன்' என்று அவரவர்கள் காலக்ஷேபம் ஸாதிக்க ஸௌகரிய முண்டாயிற்று—என்பது இப்பாசுரத்தின் கருத்து. இது வாஸ்தவமான விஷயம். அக்காலத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களைக் குருமுகமாகவதிகரித்து அவற்றைக்கொண்டு ப்ரவசனங்கள் நடத்திக்கொண்டு போந்தார்கள், இக்காலத்தவர்கள் அந்த பத்ததியை அறவேவிட்டிட்டார்கள். இந்த நூற்றாண்டில் நாலாயிர வியாக்கியானங்களை வரியடைவே ஸேவித்துக் காலக்ஷேபம் செய்வார் எங்குமிலர். 'வக்தா ச்ரோதா' சதுர்லப:' ஏதோ ஈடுகாலக்ஷேபமொன்று மட்டும் ஒருவாறு நடந்துவருகிறதென்னலாம். 'நான் திருநெடுந்தாண்டகம் சொல்லுகிறேன்; நான் திருவிருத்தம் சொல்லுகிறேன்' என்று மூலைக்கு ஒருவராய் ஆங்காங்கு அவரவர்கள் ப்ரவசனம் செய்துவருவது எகனுலென்பது பற்றி ராமநாதபுரம் ஸம்ஸ்தான வித்வான் (Late) ரா. ராகவையங்கார்ஸ்வாமி மதுரை ஸத்ஸம்பிரதாய ஸபையில் தாம் ஒரு வெண்பா இயற்றி வர்சித்து விவரணம் செய்தருளினார் அந்த வெண்பா வருமாறு :—

" அண்ணங்க ராசிரியர் அற்புதமாம் நூல்கள்தமைப்
பண்ணித் தருகையினல் பாமரரும்—மண்ணுலகில்
நான்சொல்லு கேனதனை நன்குரைக்கேன் நானென்று
தாஞ்சொல்ல முன்வருவர் தாம்."

என்பது. இந்த வெண்பா 1[illegible] வருடங்களுக்கு முன்பு ஜகதாசார்ய ஸந்நிதியில் அச்சேறியுமுள்ளது.

59. இந்நூலின் முகப்பில் அநுஷ்டுப்பில் "ஷஷ்டிஸங்க்யாகவார்த்தாமாலாம் ஸமர்ப்பயே" என்று ப்ரதிஜ்ஞை செய்தபடி ஸமர்ப்பிக்கப்பட்டுவரும் அறுபது வார்த்தாமாலையில் 58 முடிந்துவிட்டன. சேஷித்துள்ள இரண்டில் பல அருமையான விஷயங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். அடியேன் வாதவிவாத நூல்களை விசேஷமாக எழுதியுள்ளதாய் சூசுசேபனுடைய ஒரு உபாலம்பம். இதைப்பற்றி (வைகுண்டவாஸியான) ஸ்ரீமத் பரமஹம்ஸ. தென்பரையாண்டவன் ஏற்கெனவே உலகுக்குப் பெருவெளிச்சம் காட்டியுள்ளார் தமது ஸம்ஸ்

க்ருத ஸ்ரீமுக மொன்றினுல். இருகலையிலுமுள்ள மற்றும் பல பெரியார்களும் இதைப்பற்றி வெளியிட்டுள்ளார்கள். அடியேனுடைய தன் சரிதை 424 பக்கங்கொண்டது. 272 பக்கத் தளவில் சரிதையை ஒருவாறு முடித்திட்டு மேல் முழுவதும் ஸ்வகீயக்ரந்த ரசனைகளைப்பற்றி வெகு விரிவாக எழுதியுள்ளவற்றை உலகம் கண்டிருக்கின்றது. அந்த சரிதை நூலில் பக்கம் 281-ல், 'அடியேனுடைய நூல்கள் பன்னிரண்டு துறைகளில் தோன்றியுள்ளன' என்று தெரிவித்து,

1. பூர்வாசார்யர் பெருமையுரைத்தல்
2. இதிஹாஸபுராண சரித்திரங்களுரைத்தல்
3. உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸங்கள் வரைதல்
4. வேதாந்த விளக்க நூல்களிடுதல்
5. திவ்யப்ரபந்தங்களுக்கு உரையிடுதல்
6. ஆசாரியர்களின் தமிழ் நூல்களுக்கு உரையிடுதல்
7. ரஹஸ்யார்த்த விளக்க நூல்களிடுதல்
8. ஸ்தோத்ரநூல்களுக்கு உரையிடுதல்
9. வேதலக்ஷணவிசார நூல்களிடுதல்
10. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்களிடுதல்
11. லோகாபிராம நூல்களை யெழுதுதல்
12. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்களிடுதல்.

என்று அப்பன்னிரண்டு துறைகளையும் விவரித்திருக்கிறேன். ஒவ்வொரு துறையிலும் ஒன்றிரண்டு நூல்களல்ல; ஒவ்வொன்றிலும் எவ்வளவு எழுத வேணுமோ அவ்வளவும் எழுதியாயிற்று. ஆயிற்றென்று முற்றுப்புள்ளியிடவில்லை. ஆய்க்கொண்டேயிருக்கின்றதென்பதை அடியேனுடைய வெளியீடுகளையெல்லாம் ஒன்று விடாமல் வாங்கி வாசிப்பவர்கள் அறிவார்கள். ஆனல் அடியேன் நான்கு பாஷைகளிலும் வெளியிட்டு வருவதால் இந் நான்கு பாஷைகளிலும் ப்ரவேசமுள்ளவர்களைத் தேடிப்பிடிக்கவேவேண்டும். மேலே விவரித்த பன்னிரண்டு துறைகளையும் மாச்சரியமற்றவர்கள் மனனம் பண்ணிப் பார்க்க வேண்டும். எட்டாவதும் ஒன்பதாவதுமான இரு துறைகளில் தோன்றியுள்ள நூல்கள் மட்டும் அடியேனுக்கே வியப்பை விளைப்பன, ஸ்தோத்ரரத்னம், கத்யத்ரயம், பஞ்சஸ்தவம், ஸ்ரீரங்கராஜஸ் தவம், ஸ்ரீகுணரத்ன கோசம், ஸுதர்சந்சதகம்...இத்யாதி ஸ்தோத்ரங்களின் உண்மைப் பொருளையுணர வேணுமானல் அடியேனுடைய உரைகள் தவிர வேறு புகலுண்டோ? திவ்யார்த்த தீபிகையுரை நாலாயிரம் பாசுரங்களுக்கு; ஸ்தோத்ரவுரைகள் இரண்டாயிரம் சுலோகங்களுக்கு. இவ்வுரைகள் இது வரை எத்தனை பதிப்பேறின ? தெரியுமோ ? எதற்கும் ஸம்க்ஷேபமானவுரை யென்பது கிடையாது; விரிவுரையே யெழுதியுள்ளேன். சிலவற்றை மறுபதிப்புச் செய்ய நேர்ந்தபோது காகிதப் பஞ்சம் முதலிய தாத்காலிக அஸௌகர்யங்களினுல் சிறிது சுருக்கிப் பதிப்பிக்க நேர்ந்தது அந்த ஸம்க்ஷேபத்தில் அத்ருப்திகொண்ட பல மஹான்கள் தங்கள் பொறுப்பில் நமது விரிவுரைகளையே மறுபதிப்புச் செய்து வருகிறுர்கள். ஒன்பதாவது துறையான வேதலக்ஷண விசார நூல்களைப்பற்றி* ஆருக்கென் சொல்லுகேனன்னைமீர்காள் ! என்று நிற்கிறேன். வேதகந்தமே யறியாதவர்களுக்கு அதைப்பற்றி விவரித்தென்பயன் ?

60. இஃது அறுபதாவது வார்த்தை. தன் சரிதையெழுதி முடித்துப் பத்து வருடங்களுக்குமேல் ஆய்விட்டபடியால் அக்காலத்தில் மேலேகுறித்த பன்னிரண்டு துறைகளிலும் நானூற்றெழுபது நூல்களே இயற்றி வெளியிடப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் அகராதி வரிசையில் தொகுத்து ஒவ்வொன்றின் பிரமேயத்தையும் விரிவுக்கு அஞ்சாமல் விளக்கியிருக்கிறேன். அதில் பக்கம் 281 முதல் 412 வரையில் சென்னை வாஸியான ஸ்ரீமத். ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி போன்ற மஹான்களுக்குக் கண்டபாடமாயிருக்கும். கடாக்ஷியாத மஹான்கள் பெரும்பாலுமிலர். அதில் ஆரம்பத்தில் (பக்கம் 281-ல்) எழுதியுள்ள சில வரிகளை மட்டும் இங்கு அநுவதிக்கிறேன் :—

"ஆக இப்பன்னிரண்டு துறைகளிலும் அமைந்திருக்கின்ற நமது நூல்கள் நாற்றிசையிலும் பரவியுள்ளன. இவற்றுள் பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்களை மட்டுமே நம் தேசத்தவர்கள் பெரும்பாலும் வாங்கிப் பார்ப்பது வழக்கம். மற்ற பதினொரு துறைகளில் அமைந்துள்ள நூல்களில் நம் நாட்டினருடைய கடாக்ஷபாதம் அவ்வளவாக விழுவதில்லை. வாத விவாத நூல்களை மட்டும் பார்த்துவிட்டு 'இவ்வளவு விவாத நூல்களை எதற்காக எழுத வேண்டும்?' என்று சொல்லுபவர்களுமுள்ளார்கள். ஒவ்வொரு விவாத நூலும் தோன்ற வேண்டிய காரணத்தை மேலே க்ரமேண விவரிக்கப் போகிறபடியால் அதனால் விவேகிகளுக்குப் பரமத்ருப்தி விளைந்தே தீரும். இராமனைப்பற்றி யருளிச்செய்கிற நம்மாழ்வார் திருவாய் மொழியில் *வல்லரக்கர்புக்கழுந்தத் தயரதன்பெற்ற மரதகமணித்தடம்*என்றார். கண்ண பிரானைப்பற்றி யருளிச்செய்கிற பெரியாழ்வார்*தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்க வுழக்கி*என்றார். இவற்றைக்கொண்டு ஸ்ரீராமனையும் ஸ்ரீக்ருஷ்ணனை யும் வீண்வம்புச் சண்டைக்காரர்களென்று யாரும் சொல்லுவதில்லை. சிசுபாலனும் சொன் னதில்லை. தார்மிகர் நிருமித்த தடாகத்திலே கழுத்தில் கல்லைக்கட்டிக் கொண்டு விழுந்து மடிவாரைப்போலே தாமாகவே மடிந்துபோக வந்துசேருகிற விரோதி வர்க்கங்களைக் களைந் தொழிக்க வேண்டுவது கடமையாகிறதன்றோ."

இத்யாதி. எவ்வளவென்று அநுவதிப்பேன்? ஒவ்வொருவரும் பேணிவைத்துக் கொண்டிருக் கிற எனது தன் சரிதைப் புத்தகத்தைச் சோம்பாது பார்ப்பது.

ஆசார்யஹ்ருதயத்தில் "பகலோலக்கமிருந்து கறுப்புடுத்துச் சோதித்துக் காரியம் மந்த்ரித்து வேட்டையாடி ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி" இத்யாதியான ஆச்சரியமான சூர்ணையில் அரசர்களின் ரீதியையும் எம்பெருமானுடைய ரீதியையும் ஒப்பிட்டு உபபாதித்தருளுகிறார். அந்த ராஜநீதி [அரசனுடைய ப்ரகாரம்] எம்பெருமானுக்குப்போலே ஆசார்யர்களுக்குமுண்டு. அரசன் துஷ்ட ஸத்வ நிரஸநார்த்தமாக வேட்டையாடுவதுபோலே எம்பெருமானும்*காட்டை நாடித் தேனுகனும் களிறும் புள்ளுமுடன்மடிய வேட்டையாடி வருவானென்கிறபடியே ஆச்ரிதவிரோதி நிரஸனமாகிற வேட்டையாடினன். ஆசாரியர்களும்*ப்ரதிவாதிவாரணப்ரகடா டோபவிபாடநக்ஷமா:*என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியும்,*தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொல்கற்ற சோம்பரும்...நீசரும்மாண்டனர்*என்று அமுதனார் அருளிச்செய்தபடியும்,*மாயிமதங்கஜமஸ்தக கோடபாடநபாடலபாணிதலோ ய:, க்ருத்யடவீ குஹரேஷ ஸமிந்தே ஸ ப்ரதிவாதி பயங்கரஸிம்ஹ: என்று அஸ்மத் குல கூடஸ்தரை நோக்கி தச்சிஷ்யர் பணித்தபடியும் வேட்டையாடுவதையும் மேற்கொண்டேயுள்ளார்கள். நம் மாழ்வார்*பொலிக பொலிகவில்*இடங்கொள் சமயத்தையெல்லாம் எடுத்துக்களைவனபோலே, தடங்கடல் பள்ளிப்பெருமான் தன்னுடைப் பூதங்களேயாய்*என்று வேட்டையாடுமவர்களுக் கும் பல்லாண்டு பாடியருளினார்.

**உபஸம்ஹார விஜ்ஞாபனம் :—** திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த வை. மு. சட கோபராமாநுஜாசார்ய ஸ்வாமி பரமபதித்து ஐம்பது வருஷங்களுக்கு மேலாகிறது. இற்றைக் கும் அவர் ஜீவித்திருக்கலாம். வைணவவுலகின்–தமிழுலகின் தௌர்ப்பாக்யத்தினால் மிக்க இளமையிலேயே அவர் திருநாடலங்கரித்தார். அவருடைய பெருமைகளை அடியேன் செந்தமி ழாராய்ச்சி முதலிய சில நூல்களில் ப்ரஸங்காத் விளக்கியிருக்கிறேன். அவரைப்போன்ற எழுத் தாளர் அவரேயாவர். அவருடைய காலத்தில் காரப்பங்காடு கோபாலாசாரியரென்பவரும் தமிழ்ப் பண்டிதராக விளங்கிவந்தார். வை. மு. ச. ஸ்வாமியின் கீர்த்தியில் பொறாமை கொண்ட அவர் அப்போது தானெழுதிய (ஸ்கூல் டெக்ஸ்டு நோட்ஸ்) புத்தகமொன்றில்

வை. மு. ஸ்வாமியின் திருநாமத்தைத் தொடாமல் (வ்யங்கியமாக) அவருடைய நூல்கள் உண்மைப் பொருளுணர்த்த மாட்டாதவையென்று குறைகூறி வெளியிட்டிருந்தார் (காரப்பங்காடு கோபாலசாரியர்). வை. மு. ஸ்வாமி இதைப் பொறுத்திருக்க வல்லவரோ? உடனே அந்த கோபாலாசாரியருடைய உரைப்புத்தகமொன்றை வரவழைத்துப் பரிசீலனை செய்யப் புகுந்து இருபது விஷயங்களில் அவருடைய மருளை அசைக்கவுமொண்ணாதபடி விளக்கி ஒவ்வொரு பரிசீலனையின் முடிவிலும்

| | |
|---|---|
| " உண்மைப்பொரு ளுணர்த்திய திறம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய தன்மை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய வியப்பு இது | உண்மைப்பொரு ளுணர்த்திய மாட்சி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய புதுமை இது | உண்மைப்பொரு ளுணர்த்திய தேர்ச்சி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய ஆற்றல் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய அழகு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய அதிசயம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய போக்கு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய அற்புதம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய நிலை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய விதம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய நெறி இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய பாங்கு இது | உண்மைப்பெரு ளுணர்த்திய மாண்பு இது |
| உண்மைப்பொரு ளுணர்த்திய விசித்திரம் இது | உண்மைப்பொரு ளுணர்த்திய முறைமை இது |
| உண்மைப்பொரு ளுணர்த்தியவாறு இது | உண்மைப்பொரு ளுணர்த திய சால்பு இது. |

என்றெழுதி வெளியிட்டார். காரப்பங்காடு கோபாலாசாரியர் பார்க்கிறாரிதை பார்க்கிறார் பார்க்கிறார் பார்க்கிறார். என்ன செய்வர் பாவம்! 'வாய்திறக்கவுண்டோ வழி' என்று தாமே சொல்லி மாய்ந்துபோனார், உய்ந்துபோனார். வாதவிவாதங்கள் நேருவது அவத்தமன்று, அநீதியுமன்று. ப்ராப்தவிஷய விமர்சங்களை நேர்மை குன்றாமல் செய்வது உலகில் நீடூழி விளங்கும் மஹோபகாரமன்றோ. விபரீத வாதங்களைக் கண்டனம் செய்யாத பூர்வாசாரியர் ஒருவருமில்லை. ஸ்வாமி பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யத்தில் மஹாஸித்தாந்தம் தொடங்குகையில் "ததிதம் ஔபநிஷத...விரஹிணாம்" என்றாரம்பித்து பரம கம்பீரமாக *சீரிய சிங்கமறிவுற்றுத் தீவிழித்து ஸாதித்திருப்பவை......மேலே என்ன எழுதுவது? கிள்ளிக்களைய வேண்டியவற்றுக்கும் கோடாலி வேண்டியிருக்கிறதன்றோ. "சாது சாது என்ற பாம்பு சாகக்கடித்தது" என்றொரு பழமொழியுண்டு; அது எப்போது தோன்றிற்றென்றால், மேலேயுதாஹரித்த ஸ்ரீபாஷ்ய ஸூக்தி திருவவதரித்தபோதே யென்பர் பெரியோர்.

சுசேபர் "பல நூல் புனையாத காரணம்" என்று அநவஸரப்ரஸங்க மொன்றைக் கிளப்பிச் சில வரிகள் வரைந்ததுபற்றி ஒரு ரஸிக ஸார்வபௌமர் ஸாதித்ததாவது, பெருமாளைக் காட்டில் நின்றும் மீட்டுக்கொண்டுவர சித்திரகூடத்தேறச் சென்ற பரதாழ்வானுக்குச் சார்பாக ஜாபாலியென்பாரொருமுனிவர் நாஸ்திகவாதத்தைக் கிளப்பி *ப்ரத்யக்ஷம் யத் ததாதிஷ்ட பரோக்ஷம் ப்ருஷ்டத: குரு* என்றார். அதைக் கேட்டுப் பெருமாள் ஸஹித்திருக்ககில்லாமல் சீறிச்சிவந்து உடனே கண்டித்தாரென்பதை வான்மீகி முனிவர் விளங்கவைத்தேயுள்ளார். இக்காலத்து நாஸ்திகர்கள் பெருமாளுடைய ப்ரதிவசனமான ஸர்க்கத்தை மறைத்திட்டு ஜாபாலிவாதத்தையே ஸித்தாந்தம்போல் பேசிப் பாமரர்களை மயக்குவதுண்டு. அந்த வழியைப் பின்பற்றும் முறையில் 'அந்த நூலுண்டு, இந்த ஊசியுண்டு'......என்று சுசேபர் எழுதுவது உண்மை யுணர்ந்த விவேகிகளின் கோஷ்டியில் விலைசெல்லாதென்பதாம்.

(ச்லோ) ஷஷ்டிஸஹஸ்ரம் முத்ரா: யாஸாம் வாசாம் பவேந்மிதம் மூல்யம்.
தா இஹ வித்வத்வேங்கடஸூரேஸ் ஸவிதே ஸமர்ப்ய தந்யோஸ்மி.

(வெண்பா) மேதினியில் வீங்குபுகழ் வேங்கடவர் வீறுதனைப்
போதமிகு புண்ணியர்கள் போற்றிடவே-நீதியினால்
ஏற்றத்தாழ் வின்றிக்கே யேழ்பாரு மெஞ்ஞான்றும்
சாற்றிடவே செய்தேன் சதிர்த்து.

விலக்ஷண ஜகதுபகாரம் முற்றுப்பெற்றது.

# வித்யாபரிச்ரம பரீக்ஷா

சுலோகம்: லோகாபிராம ஸ்வாதிஷ்ட பஞ்சவிம்சதி வாக்ததீ:,
ப்ரஹர்ஷாய ஸதாம் வக்தி ப்ரதிவாதிபயங்கர:.,

வெண்பா: ஒருவரையு முள்ளத்துக் கொள்ளாது, உலகில்
மருவுங் கலைவலவர் மாண்பை—ஒருவாறு
நாலாறு மொன்றுமாம் நல்வாக்கியங்களினல்
மேலார்க் கியம்புகின்றேன் மேல்.

1. உலகில் அறிவாளிகள் அபரிமிதமாகத் தோன்றியுள்ளார்கள். நவத்வீபவதியான பூமியில் எத்தனை நாடுகள், எத்தனை பாஷைகள், எத்தனை அறிஞர்கள்! எண்ணி முடியாது. க்ராமங்களிலும் அக்ரஹாரங்களிலும் நகரங்களிலும் ராஜதானிகளிலும் எத்தனை பண்டிதர்கள் தோன்றிக் கழிந்தார்கள்! எத்தனை பண்டிதர்கள் விளங்கி வருகிறார்கள்! பொதுவாக எல்லார்க்குமே ஒரு ஆசையுண்டு; நம்மைப்பற்றி எல்லாரும் பெருமையாகப் பேசவேணுமென்பது. இதை எதிர்பாராதவர்கள் பெரும்பாலும் இருக்கமாட்டார்கள். இருந்தால் அவர்கள் அரண்ய வாஸந்தான் செய்வார்கள். நாநாஜனங்களிடையே நகரவாஸஞ் செய்பவர்கள் ஸ்வப்ரசம்ஸையிலே ப்ரதீக்ஷையில்லாமலிருக்க மாட்டார்களென்பது அடியேனுடைய ப்ரத்யயம்.

2. கீர்த்திமூர்த்தியான தேரழுந்தூராண்டவன் காஞ்சியிலே எழுந்தருளியிருந்தபோது [முப்பத்தைந்து வருடங்களுக்கு முந்தின செய்தி.] அடிக்கடி ஸந்தித்து வார்த்தையாட நேரும். பரமரஸிகராகையாலே ஆச்சரியமாக வார்த்தைகள் ஸாதிப்பர். ஒருநாள் வைராக்யத்தைப்பற்றி வார்த்தை வந்தது; ஆண்டவன் ஸாதித்ததாவது, உலகத்தில் ஆசைகள் பலவிதம்; மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, பொருளாசை யென்று சொல்லிவருகிறார்கள். எல்லாவிதமான ஆசைகளையும் துறந்தவனாக ஒருவன் இருக்க முடியாது. தொண்ணூறு வயதாகி எல்லா ஆசைளினின்றும் விடுபட்டாலுங்கூட, உத்தமாச்ரமியாயிருந்தாலுங்கூட நமக்கு நிறைய சிஷ்யர்களிருக்க வேண்டும், நம்மைச் சுற்றிப் பத்துப்பேர் காத்திருக்க வேண்டும் என்கிற ஆசையொன்று இருந்தே தீரும்...என்று இனைய பலவும் புன்முறுவலோடு கூறக்கேட்டேன். தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் "யதி குப்யதி கோபாய நகோபம் அதிவர்த்ததே. அகோப விஷயம் கோபம் கதம் கச்சித் விஜேஷ்யதே?" என்று விநோதமாக ஸாதித்துள்ளார். எவனும் கோபத்திற்கு வசப்பட்டுத்தானாக வேண்டுமென்பது இதன் கருத்து. இதே போல எவனும் ஏதேனுமொருவிதமான ஆசையைக் கொண்டவனாகத்தானிருக்க முடியுமென்பது மறுக்க முடியாதது. அவ்வாசைகளில் 'தன்னுடைய வித்வத்தை எல்லாரும் கொண்டாட வேணும்' என்கிற ஆசையானது தலையாக நிற்கும். இதைத் தவறாக நாம் நினைக்கக்கூடாது. "தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார், தோன்றலின் தோன்றாமை நன்று" என்று குறளாசிரியர் கூறியிருத்தலால் புகழ்க்கு ஆசைப்படுவது,தவறன்றே. இதில் முக்கியமாக ஊன்றிநோக்க வேண்டிய விஷயமொன்று; இதை விவேகிகளனைவரும் அவதானத்தோடு நெஞ்சிற்கொள்க.

3. காளிதாஸர் சாகுந்தலநாடகத்தில் "ஆபரிதோஷாத் விதுஷாம் ந ஸாது மந்யே ப்ரயோகவிஜ்ஞானம். பலவதபி சிக்ஷிதாநாம் ஆத்மநி அப்ரத்யயம் சேத:" என்கிறார். நம்முடைய உழைப்பை நாலு வித்வான்கள் கொண்டாடுகிறவரையில் நம்முடைய யோக்யதையில் நமக்கு

நம்பிக்கையிராது—என்பது இதன் தாற்பரியம். அடியேனுக்கு இதைப் பாடஞ் சொல்லும் போது திருத்தகப்பனார் ஸாதித்தது அறுபத்துமூன்று வருஷமானாலும் நேற்று ஸாதித்தாப் போலிருக்கிறது. அதாவது,பிறர்கொண்டாடுவதுகிடக்கட்டும்;அவரவர்களின்யோக்யதையைப் பற்றி அவரவர் தங்களுள்ளத்திலுண்டாகும் உகப்புதான் முக்கியமானது. "நான் தர்க்க பண்டிதன், வியாகரண வித்வான், வேதாந்த வித்யாநிதி, மீமாம்ஸா மாம்ஸளாத்மா, பாஷ்ய பகவத் விஷயங்கள் நாம் கொடுத்தது பிச்சை" என்றிப்படி தாங்கள் நினைத்துக்கொள்ளலாம், வாய்விட்டும் சொல்லிக் கொள்ளலாம்; நம்மைப்பற்றிப் பிறரும் இங்ஙனே ப்ரளயமாகச் சொல் லும்படி பண்ணிக்கொள்ளலாம். இதில் அருமையில்லை. ப்ராமாணிகர்கள் தங்களுடைய வித்யாபரிச்ரமத்தையும் அதன் பலனையும் தாங்கள் தெரிந்து கொள்ளாமலிருக்க முடியாது. ஆகவே ஆத்மஸந்துஷ்டிதான் ப்ரதானம்—என்று திருத்தகப்பனார் ஸாதித்தபடி:

4. கண்ணபிரானைப் பெற்ற யசோதைப் பிராட்டி "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று பிறர் கொண்டாட நின்றாளென்பதை அறியாதாரில்லை. ஆனால் அவளுடைய மனத்தினால் பிறர் செய்யும் அத்தகைய புகழ்ச்சி பெரி தாக நினைக்கப்படவில்லை. பின்னையோவென்னில் *சீலைக்குதம்பையொருகாது, ஒரு காது செந்நிறமேல்தோன்றிப்பூ, கோலப்பணைக்கச்சுங் கூறையுடையும் குளிர்முத்தின் கோடாலமும் காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தைவந்து காணீர்* என்று சொல்லி விட்டு, இதன்மேற் சொல்லுமற்புதம் கேளீர்—*ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை*என்றாள். இப்படி தன்னுள்ளம் கனிந்து தான் பேசுவதுண்டே இது தான் முக்கியமானது. தம்முடைய யோக்யதை தம்மனத்துக்குப் பரமத்ருப்தியளிக்க வேணும்.

5. திருக்குறளில் சொல்வன்மையதிகாரத்தில் "சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ் சொல்லின்மையறிந்து" என்னுங்குறள் ஆச்சரியமானது. இதில் 'பிறிதோர் சொல்' என்றதன் சுவையறியாமே பலர் பொருள் கொள்வர். பிறருடைய சொல் நம் சொல்லைக் கண்டனம் செய்ய முடியாதபடி பேசவேணுமென்பது மட்டும் இங்கு விவக்ஷித மன்று. நமது சொல்லை நமது சொல்லே கண்டிப்பதுமுண்டே; அதற்குமிடமின்றிப் பேச வேணுமென்க. ஐயோ! தப்பாகப் பேசிவிட்டோமே, தவறாகப் பேசிவிட்டோமேயென்று தாம் வருந்த வேண்டாதேயென்றபடி. சிலர் உபந்யாஸம் செய்யத் தொடங்கி எதையோ சொல்லி முடித்துவிட்டு, பிறகு 'அந்த கட்டத்தில் அந்த சுலோகம் சொல்லியிருந்தோமாகில் நன்றா யிருந்திருக்குமே; அந்த ப்ரகரணத்தில் அந்தப் பாசுரம் சொல்லியிருந்தோமாகில் நன்றாயிருந் திருக்குமே; அந்த வார்த்தையை அப்படிச் சொல்லாமல் இப்படிச் சொல்லியிருந்தோமாகில் ரஸமாக இருந்திருக்குமே? என்றிப்படி குறைப்படுவதுண்டு; இதுதான் *பிறிதோர் சொல் அச் சொல்லை வெல்லுஞ்சொல்*எனப்படுவது. இதற்கு அவகாசமில்லாமே பேசவோ எழுதவோ வேணுமானால் பிறரை வஞ்சிக்கத்தக்க ஞானமிருந்து பயனில்லை.*அப்திர் லங்கித ஏவ வாநர படை;* என்று முராரி சொன்ன கணக்கிலேவிளங்கும் வித்வான்கள் பிறருடைய ப்ரசம்ஸையை ப்ரளயமாகப்பெற்று த்ருப்தியடையலாமே தவிர அந்தரங்கத்ருப்தியை அணுவளவும் பெற இய லாது. தாங்கள் பேசுமவற்றையும் எழுதுமவற்றையும் பிறர் நூல்களும் தம்முள்ளமும் கண்டித்துக்கொண்டேயிருக்கத் தாம் பெறும் புகழ்ச்சி என்னாகும்? அந்தப் புகழ்ச்சிமாலைகளைக் கண்டு தாம் உள்ளம் பூரிக்கலாமத்தனை. அதற்குக் குறையில்லை.

6. பெரியவாச்சான்பிள்ளை பெரிய திருமொழி வியாக்கியானத்திலருளிய ஓர் அற்புதமான விஷயம் கேளீர். திருநாங்கூர்த் திருவெள்ளக் குளப்பதிகத்தின் பலச்ருதி பாசுரத்தில் 'கலியன் சொன்னமாலை வல்லரென வல்லவர் வானவர்தாமே" என்றுள்ளது வல்லரென வல்லவர்—

"இவர்கள் பெரிய திருமொழிப் புலவர்கள் என்று பிறர் கொண்டாடும்படி நன்ருக அதிகரிக்க வல்லவர்" என்பது இதற்கு அர்த்தம். இங்குப் பெரியவாச்சான் பிள்ளை ஸாதிப்பது பாரீர்—[" வல்லரென வித்யாதி.) தங்களுக்குப் போய்த்தில்லையாகிலும் பிறர் போமென்னும்படியாக; வல்லவர்கள்" என்கிருர். அதாவது, 'வழவழ அத்யாபகர்களென்று சிலருண்டு; அவர்கள் ஸேவாகாலத்தில் தனியாகஅகப்பட்டுக்கொள்ளமாட்டார்கள்; நிபுணர்கள் நால்வர் ஐவர் இருந்து ஸேவிக்குமிடத்திலே சேர்ந்துகொண்டு அவர்கள் வாயைப் பார்த்துக்கொண்டே கத்துவர்கள் அதைக் காண்பவர்கள் மருமமறியாதே அவர்களையும் மஹா நிபுணர்களாகக் கொண்டாடி விடுவர்கள். பெரிய வாச்சான் பிள்ளை காலத்திலும் இங்ஙனே சிலரோ பலரோ இருந்தார்கள் போலும். அதனால்"தங்களுக்குப் போய்ந்தில்லையாகிலும் பிறர்போமென்னும்படி வல்லவர்கள்" என்றருளிச் செய்தார். தங்களுக்கு நிருடியில்லாவிட்டாலும் பிறர் கொண்டாடிவிட்டால் போதும் என்று நினைப்பவர்களே உலகில் மலிந்துள்ளார்கள் என்று காட்டவே பெரிய வாச்சான் பிள்ளை அங்ஙனே ஸ்ரீ ஸூக்திவிந்யாஸம் செய்தருளிற்று. மணவாள மாமுனிகள் விம்சதியில் *வ்ருத்த்யா பசுர் நரவபு:* என்கிறச்லோகத்திலே "வஞ்சநபரோத்ர யதீந்த்ர! வர்த்தே.' என்று ஸாதித்திருப்பது உண்மையில் தம்மைப்பற்றியன்றே; அஸ்மதாதிகளின் படியையன்றோ தம்மிடத்தில் ஏறிட்டுக்கொண்டு ஸாதிக்கிறபடி. நைச்சியாநு ஸந்தானமாகப் பலர் பலவாறு பேசியிருந்தாலுங்கூட இங்ஙனே ஸாதித்தவர் மாமுனிகள் தவிர மற்ருருமில்லை. பிறருடையப்ரசம்ஸைக்குப் பர்யாப்தமானயோக்யதை தம்மிடத்தில் இல்லையாயிருக்கச்செய்தேயும் பிறர் எல்லைகடந்து புகழும்படி காட்டி வஞ்சிக்க வல்லவர்கள் உலகிலுளரென்றுகாட்டினபடி.

7. இல்லாதவற்றை ஏறிட்டுப் புகழ்வதனாலுண்டாகும் அனர்த்தத்தைத் திருவாய் மொழியில்(3–9)*சொன்னால் விரோதப்பதிகத்தின் ஈட்டுப்ரவேசத்திலே விலவறச் சிரிக்கும்படி பணித்திருக்கக் காணுநின்றோம். அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி கேளீர்—"கவி பாடி ஒரு ப்ரயோஜனம் பெருதொழிகை யன்றிக்கே கவி பாட்டுண்கிறவனுக்கு இல்லாத நன்மைகளையிட்டு 'இருமருங்கும் துய்யான்' என்னுமாபோலேயிறே கவி பாடுவது, அதனால் வருவதென்னென்னில் உத்பத்தியிலே சில குறைகளுண்டாயிருக்குமே இவன் தனக்கு, மறந்தவற்றையிறே இது கேட்ட நாட்டார் நினைப்பது. ஆக அவனுடைய தோஷங்களை வெளியிட்டு அவ்வழியாலே அவத்யாவஹராய்." இத்யாதி. நம்பிள்ளை சாஸ்த்ரார்த்தங்களை அத்புதமாக அருளிச்செய்வது போலவேயன்றோ லௌகிகார்த்தங்களையும் அருளிச் செய்வது. மேலே காட்டிய ஸ்ரீ ஸூக்திகளின் பொருளைச் சிறிது விவரிக்கிறேன். ஒரு மஹாப்ரபு தன்னைக் கொண்டாடிக் கவிபாடும்படி ஒரு கவிக்குக் கட்டளையிட்டான்; அவனும் ஏதோ காசு கிடைக்குமென்று சில கவிகளையியற்றிக் கொணர்ந்தான். பிரபு நம் பெருமை பலருமறிய ப்ரசுரமாக வேண்டாவோவென்று பெருந்திரளைக்கூட்டி வாசிக்கச் சொன்னான் கவியை; அவன் வாசித்துப் போகையில் "இருமருங்கும் துய்யான்" என்று வாசித்து அதை விளக்கவுரை தந்து விவரிக்கிருன். [இருமருங்கும் துய்யான்] உபயஸந்ததியிலும் பரமபாவனன். தாய் பிறந்த வர்க்கத்திலும். தந்தை வர்க்கத்திலும் ஒருவிதமான அபவாதமுமில்லாமல் பரம பவித்திரமான ஸந்ததி யென்று பொருள் விவரிக்கிருன், இதை வானம் பிளக்கக் கத்துகிருன் கவி. பாட்டுண்கிற பிரபுவுக்கு உபயவர்க்கத்திலும் அபவாதங்கள் மலிந்திருந்ததுண்டு. அது இந்தக் கவிக்குத் தெரியாது, ஸர்வஸாதாரணமாகக் கொண்டாடுகிற முறையில் கொண்டாடிக் கவியியற்றிவிட்டான். அதை வாசித்து விவரிக்கும்போது பிரபுவுக்கு இருமருங்கிலும் ஏற்கெனவேயிருந்து சிலர்க்குத் தெரிந்தும் மறந்தும் பலர்க்குத் தெரியாமலுமிருந்த அபவாதங்களை ச்ரோதாக்களில் சிலர் ஸ்மரிக்க நேர்ந்தது. தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்குக் காதோடு தெரிவிக்கிற முறையில் ஸதஸ்ஸிலேயே ப்ரஸ்தாவம் வலிதாக விளைந்துவிட்டது. பிரபு இதைத் தெரிந்து கொண்

டான். வெட்கம் தாங்க முடியவில்லை. ஏதோ வியாஜங் காட்டி எழுந்து போய்ப் பள்ளியறையில் தாளிட்டுக்கொண்டு கிடந்துறங்கினுன். கவி இங்குமங்கும் தேடியலைந்து ஏமாற்றமடைந்தோமேயென்று வருந்திச்சென்ருனும்.*அந்யதீயாங் குணுந் அந்யத்ரத்வஸதோதிரோப்ய பணிதி: என்று ஆழ்வானும்,*அந்யத்ர அதத்குணோக்தி:* என்று பட்டரும் ஸாதித்துள்ளபடி ஏறிட்டுப் புகழ்வதென்பது பலபடியாலும் பொல்லாங்கேயாகும்; ஆனாலும் பிறர் சிலாகித்துச் சொல்லுமவற்ருலும் எழுதுமவற்ருலும் உள்ளங்கனிந்து போவது உலகவியல்பு.

8. உலகத்தில் அவரவர்கள் சிரமப்பட்டுஸம்பாதிக்கும் யோக்யதைகள் பலவிதம். தர்க்க சாஸ்த்ரமதிகரித்தல், வியாகரணமோதுதல், உபய மீமாம்ஸைகளை யதிகரித்தல், வேதமோதுதல், திவ்யப்ரபந்தமோதுதல், ஸ்ரீபாஷ்யாதிகாரியாதல், பகவத் விஷயாதிகாரியாதல், ரஹஸ்யவ்யாக்க்யான ப்ரவசனதிகாரியாதல், ஸாஹித்யஸாகர பாரங்கதராதல்...என்றிப்படி பலபலவும் காணுகின்ருேம். இவற்றில் கூலங்கஷமான ஞானம் பெற்றவர்களாய் தார்க்கிகர்கள் (அல்லது) நையாயிகர்கள், வையாகரணர்கள்...இத்யாதி, பட்டங்களைப் பெறுமவர்கள் மிகச்சிலரேயாவர். தர்க்க சாஸ்த்ரத்தில் கதாதரீயவாத க்ரந்தங்கள்—பஞ்சலக்ஷணீ, சதுர்தசலக்ஷணீ, பக்ஷதா, அவயவம், ஸித்தாந்தலக்ஷணம், ஸாமாந்ய நிருக்தி...இத்யாதி க்ரந்தங்களை ப்ரவசனம் செய்வாருளரே. இந்த க்ரந்தங்களில் 'அவச்சிந்ந—அநவச்சிந்ந' என்னுமிவை அடிக்கடிவரும், மாறிமாறி வரும். அச்சுப் புத்தகங்களில் சிலசிலவிடங்களில் (அவச்சிந்ந) இருக்க வேண்டுமிடத்து(அநவச்சிந்ந) என்றும், வேறிடத்தில்(அவச்சிந்ந) என்றுமிருக்கும். அத்தகைய இடங்களில் அர்த்தாநுபபத்தி தோன்றி சோதித்துப் பாடஞ்சொல்லவேண்டும்.சாஸ்த்ரத்தில் ஆழ்ந்தவ்யுத்பத்தியுள்ளவர்கள்கூசாமல் பிழை திருத்தி ப்ரவசனம் செய்வர்கள்.மற்றையோர்கள் [எந்தக்ரந்தமும் எனக்குக் கடினமன்று என்று சொல்லிப்போருமவர்கள்] மயங்காமல் தயங்காமல் பாமரப்ராமகர்களாய் தாராளமாய் ப்ரவசனம் செய்துபோவர்கள், இது நாம் நேரில் பலரிடம் அநுபவித்த விஷயம்.

9. ஒருவித்யார்த்தி சோதிதமான புஸ்தகத்தை வைத்துக்கொண்டு வாசிக்கிருர். (அவச்சிந்ந) என்பதை (அநவச்சிந்ந) என்று அச்சிட்டிருந்தது. அதை ஒரு பெரிய வித்வான் திருத்தியிருந்தார் அந்த புஸ்தகம் வித்யார்த்தியிடமுள்ளது. உபாத்யாயர் அசுத்த புஸ்தகங்கொண்டு ப்ரவசனம் செய்பவராதலால் திருத்த வெண்டியதை யறியாமலே உள்ள அசுத்த பாடத்தையே அங்குலீநர்த்தனத்தோடு கோஷித்து உரைக்கிருர். முடிந்த பிறகு வித்யார்த்தி 'இங்கே ஒரு பெரியவர் இப்படி திருத்தியிருக்கிருர்' என்று காட்ட, அதற்குச்சொல்லுகிருருபாத்யாயர்—'அது ப்ராசீந நையாயிகபக்ஷம்; நவீநநையாயிகர்கள் இதை ஒப்புக் கொள்வதில்லை' என்று. இப்படிப்பட்ட அவ்யுத்பந்நர்கள் ப்ராமாண்யவாதாந்தம் பலகால் ப்ரவசநம் செய்ததாகச் சொல்லிக்கொள்வர்.

10. "ஸாத்ய வ்யாபகத்வே ஸதி ஸாதநாவ்யாபகத்வமுபாதி:" என்பதை ப்ரவசனம் செய்கிருரொருவர். ஸாத்யம் எதுவானுலும் ஸரி; ஸாதனமும் எதுவானுலும் ஸரி. ஸாத்யத்துக்கு வ்யாபகமாயிருக்க வேண்டும்; ஸாதனத்துக்கு அவ்யாகமாயிருக்க வேண்டும். அப்படியிருந்தால் உபாதியென்று பெயர். தெரிந்துவிட்டதல்லவா? ஸாத்யத்துக்கு அவ்யாபகமாயிருக்கக் கூடாது, ஸாதனத்துக்கு வ்யாபகமாயிருக்கக்கூடாது. அப்படியிருந்தால் அது உபாதியாகாது. அநுபாதியாகும்—என்றிப்படி ப்ரவசனம் செய்யவல்ல மஹாதார்க்கிகர்கள் கத்வால் வனபர்த்தி. புதுக்கோட்டைகளில் திரளுவர்களாம். எல்லாருமேயா இப்படியிருப்பார்கள்.

13. இக்காலத்து வையாகரணர்கள் "த்வம் பூர்வம் உக்த்வா ஸ: பச்சாத் வக்தவ்யம் என்று பிரயோகிப்பவர்கள் (அல்லது) இப்படி சிலர் பிரயோகித்தால் முகவிகாரமேயுண்டாகப் பெருதவர்கள். 'நீ முன்னே சொல்லியான பிறகு அவன் சொல்ல வேண்டும்' என்று கூற விரும்பின வையாகரணருடைய ப்ரயோகமிது. 'உக்த்வா' என்பதற்கு சொல்லியான பிறகு என்று பொருள் தானே; வக்தவ்யம் என்பதற்கு 'சொல்ல வேண்டும்' என்று பொருள்தானே; இதில்

என்ன தப்பு? என்பர்கள். ரகுவம்சத்தில் (4-2)*திலீபாநந்தரம் ராஜ்யேதம் நிசம்ய ப்ரதிஷ்டிதம், பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயேக்நிரிவோத்தித:.*என்ற சுலோகம் பண்டிதர்கள் பலரு மறிந்ததே. இங்கு நிசம்ய என்கிற ல்யபந்தம் ஒரு க்ரியையில் அந்வயித்தே தீரவேண்டும். (உத்திதம்) என்ற உத்தரக்ரியையில் அந்வயிக்க யோக்யதையில்லை. ஸமாந கர்த்ருகத்வம் ஸம்பவிக்கமாட்டாதாகையாலே, வேறு க்ரியையோ சுலோகத்தில் இல்லை. நிசமந கர்த்தாக்களான ராஜாக்கள் என்ன செய்தார்கள்? என்று வினவினால் ஸமஞ்ஜஸமாக விடையிறுக்க வல்ல பண்டிதர்களைத் தேடவேண்டியுள்ளது. இங்கு எவ்விதமான சங்கை? என்பதைக் கூட அறியகில்லாத அறிவாளிகளன்றோ மலிந்துள்ளார்கள். "வையாகரணர்களெனப் படுமவர்களை வியாகரணத்தில் பரீக்ஷிக்க வேண்டா; காவ்ய ப்ரயோகங்களில் பரீக்ஷித்தால்போதும்" என்று கீர்த்திமூர்த்தியான (மைஸூர்) கஸ்தூரி ரங்காசார்யஸ்வாமி ஸாதிப்பராம்.

12. அஷ்டாத்யாயியைச் சந்தை சொல்லிக் கண்டபாடம் பண்ணுதவர்களை வையாகரணரென்று வாராணஸீவித்வான்கள் ஏற்றுக்கொள்வதில்லை. இதேபோல், ப்ரஹ்ம ஸூத்ரத்தைக் கண்டபாடம் செய்யாதவர்கள் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளாக மாட்டார்கள். திடீரென்று ஒரு அதிகரணஸூத்ரத்தைச் சொல்லி உபநிஷத்தில் இதற்கு விஷயவாக்யமென்ன? என்று கேட்டால் பளிச்சென்று சொல்லவேணும். உபநிஷத்வாக்ய மொன்றைச் சொல்லி இது எவ்வதிகரணத்தில் சர்ச்சிக்கப்படுகிறதென்று கேட்டால் பளிச்சென்று அதையெடுத்துச் சொல்லவேணும். ஸமுதாயாதிகரணத்தைச் சொல்லி 'இது எந்த அத்யாயத்தில் எந்த பாதத்திலுள்ளது; இதில் சர்ச்சித்து முடிக்கப்படுகிற விஷயம் என்ன?' என்று கேட்டால் ஸ்ரீ கோசத்தைக் கையில் கொண்டு ஏடுகளை முன்னும் பின்னும் தள்ளித் திண்டாடி நிற்பவர்களும் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளே. ஸூத்ரமும் வரிசையாகப் பாடமின்றிக்கே உபநிஷத் வாக்யமும் உபஸ்தித மன்றிக்கே, "இந்த வருஷத்தில் நான்கு தடவை ஸ்ரீபாஷ்ய சாத்துமுறை செய்தேன்" என்பவர்கள் நாலுதடவை யென்ன? நாற்பது தடவையும் செய்யலாம், செய்ததாகச் சொல்லலாம். ஸ்ரீபாஷ்ய கோசத்தை ஸரஸ்வதீ பீடத்தில் வைத்து விழுந்துவிழுந்து ஸேவிப்பவர்கள் நான் ஸ்ரீபாஷ்யம் ஸேவிக்கிறேனென்றால் இதில் பிசகில்லையே உத்தீர்ணர்களுக்குப் பரீக்ஷை கிடையாது.

*13. திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி பலகால் ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன்; ஸ்ரீ பாஷ்யாதிகாரிகள் பலர் கிடைக்கக்கூடும்; உண்மையான பகவத் விஷயாதிகாரி ஒருவர்கூட தேறமாட்டாரென்று. தமிழ்ப் பாஷை நாம் பேசுகிற பாஷைதானே யென்று நினைத்துவிடுகிறார்கள், இலக்கிய இலக்கணங்களில் ப்ரவேச லேசமுமின்றிக்கே திவ்யப்ரபந்த மூலமுமதிகரியாதே அருளிச்செயல் வியாக்கியான ப்ரவசனங்களில் இறங்குவது மஹத்தான ஸாஹஸம். மூன்னம் பாசுரத்தைச் சொல்லிப் பொருள் விவரிக்க வேணுமே. ஸ்ரீகோசத்தைப் பார்த்துப் பாசுரத்தை வாசித்துவிடுவது; உடனே பன்னீராயிரப்படியை வாசித்துவிடுவது. அல்லது அதையே பார்த்துக் கொண்டிருந்து மூல பதங்களை விட்டிட்டு அர்த்தத்தை மட்டும் சொல்லிவிடுவது. முன்னாடிபார்த்து நுனி நாக்கில் வைத்துக்கொண்டிருந்து துப்பிவிட்டாலும் இரண்டு நாள் பொறுத்துப் பாசுரத்தின் பொருளைக்கேட்டால் புத்தகத்தை விரிக்கவேண்டியது தவிர வேறில்லை. காவ்ய நாடகாலங்கார சாஸ்த்ரங்களை வாசித்து வடமொழியறிவு பெறுதவர்கள் எப்படி ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் வாய்வைக்க முடியாதோ, அப்படியே இலக்கண இலக்கியப் பயிற்சியில்லாதவர்கள் தென்மொழி நூல்களில் தலையிடலாகாது. ஆனாலும் தலையிட்டுக்கொண்டுதானிருக்கிறேமென்று.*

14. இனி உபயவேதங்களைப்பற்றி யெடுத்துக்கொள்வோம். வேதத்திலும் திவ்யப்ரபந்தங்களிலும் வழவழப் பேர்வழிகள் பலரிருந்தாலும் 'எவ்விதமான பரீக்ஷைக்கும் எந்த க்ஷணத்திலும் ஸஜ்ஜனுயிருக்கிறேன்' என்கிறசூரர்கள் இல்லாமற் போகவில்லை. மூலத்தில் பரீக்ஷாப்ரகாரங்களே பலர்க்குத் தெரியாது. மூன்றெழுத்துப் பரீக்ஷையென்று ஒன்று. ஜயதி, பவதி, தரதி, திசதி....என்னுமிவையும் மூன்றெழுத்தேயானாலும் இவற்றில் பரீக்ஷை செய்யார்கள். (துருஷ) என்று மூன்றெழுத்தைச் சொல்லி இது எங்கிருக்கிறதென்று கேட்பர்கள். நிபுணர்கள் *நவோ நவோ பவதி*என்று உடனே சொல்லுவர்கள். இதில் *அஹ்நாம் கேதுருஷஸாமேதி* என்று வருகிறதன்றோ. (நரஜ) என்று மூன்றெழுத்தைச் சொல்லி இது எங்கிருக்கிறதென்று கேட்பர்கள். சதுரர்கள் *ஆஸத்யேநரஜஸா*என்று உடனே சொல்லுவர்கள். அநுவாகத்தினடியைச் சொல்லிக் கேட்டாலும் திசைதொறும் விழிப்பவர்களுமிருக்கின்றூர்கள்.

15. ஒரிடத்தில் எனக்கு நடந்த பரீக்ஷையைச் சொல்லுகிறேன்; தநேந என்கிற மூன்றெழுத்தைச்சொல்லி இது எங்கு வருகிறதென்றூர் பரீக்ஷகர் "ஜ்யேஷ்டம் புத்ரம் தநேந நிரவஸாயயந்தி" என்று உடனே பதில். 'தவர்க்க சதுர்த்தமன்று, த்ருதீயம்' என்றூர் பரீக்ஷகர் உடனே 'ஸங்க்ரந்தநேநாநிமிஷேணஜிஷ்ணுநா" என்று பதில். 'த்ருதீயமன்று ப்ரதமம்' என்றூர் பரீக்ஷகர். (*அக்நிஹோத்ரம் ஜுஹோதியில்) 'ப்ராதஸ் தநேநேதி ப்ராத:—தநேந' என்று உடனே பதில். இதை ஏகதேசமாக்கவல்ல மஹா சூரர்கள் கோதாவரீ தீரத்தில் விளங்குகிறூர்கள்.

16. இதைவிட்டுதிவ்யப்ரபந்த பரீக்ஷைகளிற் செல்வோம் பாட்டினடியைச் சொல்லிக்கேட்டாலும் வானம் பார்ப்பவர்கள்மலிந்தவிடத்தில் பரீக்ஷாப்ரகாரங்களை என்னென்பது. மூவெழுத்துப் பரீக்ஷையென்பது இதிலுமுண்டு (கநீபோ) என்றூல் உடனே (ஆநிரைமேய்க்கநீபோதி) என்னவேணும் நடந்ததொன்றைக் கேளுங்கள். (மானது) என மூவெழுத்தைச் சொல்லி எங்கிருக்கிறதென்று கேட்டார். இரண்டு மணி காலம் ஆலோசித்து தெரியவில்லையேயென்றூர். திருப்பல்லாண்டிலிருக்கிறதப்பா! என்றூர் ஒவ்வொருபாட்டையும் சொல்லிப்பார்த்து இரண்டு நாழிகை பொறுத்து இல்லவேயில்லை யென்றூர். *அல்வழக்கொன்றுமில்லா என்கிற பாட்டிலிருக்கிறது; இப்போதாவது சொல்லு என்றூர். அதைப் பத்து விசை சொல்லிப்பார்த்து 'என்ன புரளி பண்ணுகிறீரே' என்றூர். (அபிமானதுங்கன் செல்வனைப்போல) என்றவிடமெடுத்துக் காட்டின பின்பு ஓஹோ என்கிறூர். (மானப) என்றூல் (அபிமான பங்கமாய்வந்து) என்கிற திருப்பாவையை உடனே சொல்லவேணும். திருப்பல்லாண்டு திருப்பாவைகளில் கேள்விகளுக்கே வானம் பார்ப்பவர்கள் பெரிய திருமொழி முதலானவற்றில் பரீக்ஷைக்குப் பலகாத தூரத்தில் நிற்கவேண்டும்.

17. இத்தகைய சப்த பரீக்ஷையிருக்கட்டும், அர்த்தாநுஸந்தானத்தில் மிக மிக உட்புகுந்த பரீக்ஷைகள் ஆச்சரியமானவையுண்டு. ஆழ்வார்களில்பெரியாழ்வாரொருவரே கையாண்டபதம் எது? என்று கேட்டவுடனே கும்மாயம் என்பது வபரியாழ்வாரும் ஆண்டாளுமே கையாண்ட பதம் எதுசொல்லு? என்று கேட்

டால் குப்பாயம், பாணித்தல் என்பது. பெரியாழ்வாரொருவரே பேசின கதை எது? என்று கேட்டால். *சீமாலிகனவனோடு* மல்லிகை மாமாலை கொண்டு* *ஆமையாய்க் கங்கையாய்*மன்னர் மறுக* மருமகன் தன் சந்ததியை என்பது. இத்தகைய பரீக்ஷைகள் ஒன்றிரண்டு வகையல்ல; நூறு வகைகளுண்டு. அவற்றைப்பற்றித் தனியேயொரு நூல் விரைவில் வெளிவரும்.

18. இனி ரஹஸ்யவியாக்கியானக்ரந்தங்களைப்பற்றிப் பேசித் தலைக்கட்டுகிறேன். அஷ்டாதசரஹஸ்யங்களிருந்தாலும்முமுக்ஷுப்படி,தத்வத்ரயம்,ஸ்ரீவசநபூஷணம். ஆசார்யஹ்ருதயம் என்னுமிவை நான்கே காலக்ஷேபப்ரசாரத்திலுள்ளவை. விசதவாக்சிகாமணிகளின் வியாக்கியானங்கள் இவற்றுக்கே, அவதரித்தன. காலக்ஷேபம் குறையற நடந்துவருகிறதெங்கும், ப்ரவக்தாக்களுக்கும் மூலம் தெரியாது. ச்ரோதாக்களுக்கும் மூலம் தெரியாது. மணவாள மாமுனிகளின் வியாக்கியானங்களோ ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் வடிவெடுத்தவை. ஒரு கதை கேண்மின்.

19. ஒருவர் தத்வத்ரயவியாக்கியான ப்ரவசனம் செய்தருளுகிறார். அவதாரிகை நடக்கிறது. அதில் ''தத்வஜ்ஞானம்....சாஸ்த்ரஜந்யமாமளவில்....... துஸ்ஸாதமாகையாலும்'' என்பது மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. ஆசார்யர் கையில் வைத்துக்கொண்டிருக்கிற ஸ்ரீகோசத்தில் 'துஸ்ஸாத்யமாகையாலும்' என்று பதிப்புள்ளது. ஹு 1950-ல் ஸ்ரீரங்கம் ஸ்ரீவிலாஸமச்சுக்கூடத்தில் 'ஸ்ரீவானமாமலைமடத்தின் ஆதரவில் அச்சிடப்பட்டது' என்றுள்ள ஸ்ரீகோசம் ஆசாரியர் கையிலுள்ளது. சிஷ்யர்கள் கையிலும் இதே பதிப்புத்தானுள்ளது. ஒருவர் கையில் மட்டும் ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரக்ரந்த மாலையென்கிற தெலுங்குலிபிப் பதிப்புள்ளது. ஆசாரியர் தம் கையிலுள்ள ஸ்ரீகோசத்தின்படி 'துஸ்ஸாத்யமாகையாலும்' என்று பலகால் வாசித்து அஸாத்யமாகையாலும் என்று பொருள் கூறுகின்றார். தெலுங்கு பதிப்பைக் கொண்டிருக்கிற ஒரு சிஷ்யர் மட்டும் வியாகரணப்ரவேச முள்ளவராகையாலும் தாம் கொண்டிருக்கிற ஸ்ரீகோசத்தில் துஸ்ஸாத மென்கிற பாடம் கண்டவராகையாலும் ஆசாரியரை நோக்கி 'இந்த ஸ்ரீகோசத்தில் இப்படி பாடமுள்ளது' என்றார்; ஓஹோ!*அங்ய்மிந்த்ரம் கிரிஷ்யாமி காரருடைய பதிப்போ! என்று ஏசிக்கொண்டே 'ஸாத்யம் அஸாத்யம் துஸ்ஸாத்யம்' என்றிப்படி பதங்களுண்டே யல்லது 'ஸாதம் அஸாதம் துஸ்ஸாதம் என்கிற பதங்கள் எங்குமே கேட்டதில்லை' யென்கிறார் ஆசார்யர். அந்த சிஷ்யர் வியாகரணம் வாசித்தவராகையாலே 'ஸ்வாமிந்! இது மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியென்று திருவுள்ளம் பற்றவேணும்; வியாகரணத்தில்*ஈஷத் துஸ் ஸுஷு க்ருச்ச்ராக்ருச்ச்ரார்த்தேஷு கல்*என்று ஸூத்ரமிருக்கிறது; கவனிக்கவேணும்' என்றார். ஆசார்யர்க்குக் கண்கள் சிவந்துவிட்டன. சிஷ்யர் கையிலிருந்து புஸ்தகத்தை வாங்கி வீசியெறிகிறார்! நீஅதிகப்ரஸங்கி; என்னிடம் காலக்ஷேபம் கேட்கத் தகாதுனக்கு என்று உறுமுகிறார். சிஷ்யர் பொறுமைசாலி. ஸ்வாமிந்! துஸ்ஸாத்யமென்பதற்கு எப்படி விக்ரஹம்? என்கிறார் 'எமது திருமாளிகையில் பரம்பரயா ஸாளக்ராமாராதனமேயொழிய விக்ரஹாராதனமென்பது ஒருநாளும் கிடையாது காண்' என்கிறாராசாரியர்.* அரஸிகேஷு கவித்வநிவேதநம் சிரஸி மாலிக மாலிக மாலிக* என்று சொல்லிக்கொண்டே போயினர் சிஷ்யர். மாமுனிகளின் வியாக்கியானங்கள்

தமிழ்தானேயென்று நினைத்து அந்த ஸ்ரீஸூக்திகளின் மாதுர்ய காம்பீர்யங்களறியாதே அவற்றைப்படுத்துகிற பாடு என்னெனபது!*ஓதுள்ளுநீர்க் கண்ணபுரமென்கிறவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை (ஓ) படுகொலை படுகொலை படுகொலை! என்கிறார். ஸ்ரீஸூக்தி சித்ரவதந்தான்.

20. இங்ஙனே எத்தனை விஷயங்கள் அடியேனெடுத்துக்காட்டினாலும் அத்தனையும் விலக்ஷணஜகதுபகாரமேயாகும். இவ்வுபகாரத்தை ஓயாது செய்துகொண்டுதானிருக்கிறேன் மருமமறிவாரில்லையே யென்கிற துக்கம் அபரிஹார்யம். ஏதோ சிலர்க்குக் குறைகூறவெண்ணி இதெல்லாமெழுதுகிறேனென்று நினைப்பவர்களும் நிந்திப்பவர்களுமுளரேயல்லது, இவற்றால் எத்தனையபூர்வ விஷயங்களையறியப் பெறுகிறோமென்று அகங்குழைவாரில்லையே!

21. இனி ஆசார்யஹ்ருதய விஷயம் கேண்மின்.*ந பூதோ! ந பவிஷ்யதி]என்கிற ஆபாணகம் ஆசார்யஹ்ருதயக்ரந்தமொன்றுக்கே ஏற்கும். ஈச்வரஸ்ருஷ்டியில் இப்படியொரு ஸ்ருஷ்டி. *நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்களிதோரற்புதம் கேளீர்*என்னத்தகுமத்தனை. உபதேசரத்தினமாலையில் ஸ்ரீவசனபூஷணத்தைபபற்றி ஏழு பாசுரங்களருளிச்செய்த மணவாள மாமுனிகள் ஆசார்யஹ்ருதயத்தைப்பற்றி ஏன் ஒரு பாசுரங்கூட அருளிச்செய்யவில்லை? என்று அடியேனைப்பலர் கேட்பதுண்டு. அருளிச்செய்யவில்லை யென்பது வாஸ்தவம். என்ன காரணஞ் சொல்லுவது. ஒரு ரஸிகர்க்குச் சொன்னேன். திருநெடுந்தாண்டகத்தில் பரகாலநாயகியின் திருத்தாயார் கட்டுவிச்சியை யழைத்து, "என் மகள் பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவை பேணாள்...மடமானை இது செய்தார்தம்மை மெய்யே கட்டுவிச்சி! சொல்" என்றாளாம். அதற்கு அவள் என்ன சொன்னாள்? கடல்வண்ணரிது செய்தார் என்றாளாம். இத்திரு மங்கையாழ்வார் தாமே திருமடலில் கட்டுவிச்சிவாக்காலே ஒரு பாரா ராமாயணம் சொல்லுவித்தார்.*கூரார்வேற்கண்ணீருமக்கறியக் கூறுகேனோ*என்று தொடங்கி ஒரு பாரதம் பேசியிருக்கிறாள் கட்டுவிச்சி. அவளே இங்குவந்தவாறே*கடல் வண்ணரிது செய்தார்* என்று கையொழிந்தாள். பரிச்சேதிக்கவொண்ணாத வஸ்துவை நானோ பரிச்சேதித்துச் சொல்ல வல்லேன்? என்றாளென்பதுதான் இங்கு ஸாரமானபொருள்.

23. *அப்ரமேயோ மஹோததி:* என்னநின்ற ஆசார்யஹ்ருதய திவ்யக்ரந்தத்தைப்பற்றி என்ன பேசுவதென்று தோன்றாமே கட்டுவிச்சி சொன்னாப்போலவும் சொல்லாமே திகைத்து நின்றார் மாமுனிகள் என்றேன். ஸத்யம் ஸத்யமென்றார் கோயில் கோவிந்தாசார்யஸ்வாமி-நிற்க. இருநூற்றுமுப்பத்துநான்கு சூர்ணைகள் கொண்டது இவ்வாசார்ய ஹ்ருதய திவ்யக்ரந்தம். ஒவ்வொரு சூர்ணையும் அருளிச்செயல்மயம், இதிஹாஸ புராணாத்யநேக ஸூக்திமயம். இங்ஙனல்லாத சூர்ணிகை இரண்டு மூன்று, நாலைந்து தேறக்கூடும். இருநூற்று முப்பது சூர்ணைகள் ப்ரமாணமயம் என்பதில் ஸந்தேஹமில்லை. "விவேக பலம் வீடுபற்று. தயாஜ்யோபாதேயங்கள் ஸுக துக்கங்கள்" என்றாற்போன்ற சிறிய சூர்ணைகள் ஏழெட்டுத்தானிருக்கும். "கோஸலகோகுல சராசரம் செய்யுங்குணமொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்." 'இடகிலேன் நோன்பறிவிலேன்கிற்பன்கீழ்நாள்களெனென்கையாலே ஸாதனத்ரய பூர்வாப்யாஸஜமல்ல" என்றிப்படிப்பட்ட சூர்ணைகள் சிறியனவுமல்ல. பெரியனவுமல்ல. ஆனாலும் இவற்றில் எத்தனை ப்ரமாணங்களைச் சேர்த்திருக்கிறார்! முதல்சூர்ணையையேகொள்வோம். (காருணிகனுன வித்யாதி.) இதில்பதினாறு சந்தைகள்தொகுக்கப்பட்டுள்ளன. அவை நான்குஆயிரத்திலிருந்தும் கொள்ளப்பட்டவை. இதில் ஸம்ஸ்க்ருதப்ரமாணமும் கலந்துள்ளது. ப்ரவசனம் செய்பவர் சூர்ணிகையை ஸேவித்தவுடனே மூலத்தின்மேல் பொருளை விவரித்தாக வேண்டுமே. நிர்மூல காலக்ஷேபமென்னப் பெற்றவர்கள் என்ன செய்யமுடியும்? வியாக்கியானம் ஸேவிக்கும் போது புத்தகத்தைக் கொள்வது ஒக்கும் மூலத்தின் பொருளையும் கருத்தையும் ச்ரோதாக்கள்

நெஞ்சில் பதிய, வைக்கவேணுமே. நாலாயிரம் பாசுரங்களையும் கைகொள்கனியாகக் கொண்டவர்களுக்கன்றோ இது ஸாத்யம். அதற்கு இன்னொரு பிறவி பிறந்தாக வேணுமே. ஐந்தாவது சூர்ணையில் *மறந்தேனறியகிலாதேயென்று தொடங்கி அர்த்த பஞ்சகத்தின் ஞானத்திற்கு ஐந்து சந்தைகளும் அதன் அஜ்ஞானத்திற்கு ஐந்து சந்தைகளுமெடுக்கிறார். ஆகப் பத்து சந்தைகள். இவற்றில் நான்குஆயிரமும் கலந்திருக்கின்றது. புத்தகம் பாராமல் கிடுகிடுவென்று சொல்லக்கூடிய சக்தியற்றவர்கள் என்ன பண்ணமுடியும். அவரவர்கள் நேரில் ஸேவித்தறிவது.

23. "ம்லேச்சனும் பக்தனானால்—அதற்கு மூலம்—அதற்கு ஹேது—ஜந்மாந்தரஸஹஸ்ர—பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய்-இவர்கள் தேடிநிற்க-இராளெனில்-அழுந்தொழும்—ஸகி வெறிவிலக்கி—" இத்யாதி சூர்ணைகள் நூற்றுக்கு மேற்பட்டவை—நூற்றைம்பதுக்கும் மேற்பட்டவை. ச்ரோதாக்களின் முகத்தை நோக்காமல் புத்தகத்தையே இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டு பங்க்தியை ஸேவித்துத்தான் முடிக்கத்தக்கதாம். யார்க்கு? அருளிச்செயல்களை வாசோவிதேயமாகக்கொள்ளும் பாக்கியமற்றவர்களுக்கு. ஆசார்யஹ்ருதயத்தில் பரீக்ஷை இரண்டுவிதம்; ஒரு சூர்ணையைச் சொல்லி 'இதில் கையாளப்பட்டிருக்கின்ற சந்தைகளை வரிசையாக இந்தக் காகிதத்தில் எழுதிக்கொடும்' என்று கோருவது ஒரு பரீக்ஷை. ஒரு அருளிச்செயல் சந்தையைச் சொல்லி 'இது எந்த சூர்ணையில் கையாளப்பட்டிருக்கிறது?' என்று கேட்பது மற்றொரு பரீக்ஷை. இவையிரண்டில் ஒரு பரீக்ஷையாவது கொடுக்க வல்லாருளரேல் அவரெங்கள் குலதெய்வமே. அவருடைய திருமாளிகை வாசலில் சேவகனாயிருந்து ஆயுச் சேஷத்தைக் கழிப்பேன். ஒருவரிடம் வந்து பரீக்ஷை கொடுக்கவேண்டா; 'இங்ஙனே பரீக்ஷை கொடுக்கைக்கேற்ற பாக்கியம் நமக்குண்டு' என்று அந்தரங்கஸாக்ஷிகமாக எண்ணினாலும் போதும் *மாற்றாதே பால் சொரியும்* என்றவிடத்தில் [மாற்றாதே-அறிவிலிகளான ச்ரோதாக்களை ஏமாற்றாதே பால்போன்ற சீரிய பொருள்களைச் சொரியும் காமதேனுக்களான ஆசாரியர்கள் என்றும் உபந்யஸிக்கப்படுவதுண்டு.

24. இவையெழுதுமளவில் என்சிந்தைதன்னுள் நீங்காதிருக்கும் சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் அமுதமொழியொன்று நினைவுக்கு வந்ததை விஜ்ஞாபித்து நிற்கிறேன். திருவாய்மொழி ஆரம்பத்தின் ப்ரமேயத்தை ஸங்க்ரஹிக்கும் சூர்ணையில் (*என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் இத்யாதியில்) "ஸர்வலோக பூதேப்ய: என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலுமாகாமல்" என்பதொரு ஸ்ரீஸூக்தி இதில் 'ஸர்வலோகபூதேப்ய:' என்ற அமைப்பு அத்புதம் அத்புதம் அத்புதம். (ஸர்வலோக சரண்யாய) என்ற விபீஷண வாக்யத்திலிருந்தும் (அபயம். ஸர்வபூதேப்ய:) என்கிற பெருமாள் திருவாக்கிலிருந்தும் லோகபூத பதங்களை யெடுத்துக்கொண்டும், இரண்டு வாக்யங்களிலிருந்தும் ஸர்வபதத்தை யெடுத்துக் கொண்டும் (ஸர்வலோக பூதேப்ய:) என்னொரு விலக்ஷணஸூக்தி ஸ்ருஷ்டியாகியிருக்கிறது. ராஜமன்னார் ஸன்னிதியில் ஸ்வாமிகளிருவர் ஆசார்யஹ்ருதயப்ரவசனம் பலகால் செய்தவர்களாம். அவ்விருவரிடத்திலும் ஒரு பெரியவர் சென்று "ஸர்வலோக பூதேப்ய:" என்கிற வசனத்திற்கு ஆகரம் தெரியவில்லையே, ஸாதிக்கவேணும் என்றாராம். ஆகரம் தெரியாதப்ரமாணவசனங்களில் இதையும் எழுதிவைத்திருக்கிறேன், நானும் விசாரித்துக்கொண்டுதானிருக்கிறேனென்றாராம் ஒருவர். மற்றொருவர் சொன்னாராம்—விசாரிப்பது எதற்காக? வாஸிஷ்ட ராமாயணத்தில் நான் நன்றாகப் பார்த்திருக்கிறேன்; ப்ரஹ்மவைவர்த்த புராணத்திலுமிருப்பதாக அய்யா ஸாதிக்கக் கேட்டதுண்டு—என்று. இவ்விருவரும் பலகால் ஆசார்யஹ்ருதயப்ரவசனம் செய்தவர்களாம். இதைச் சொல்லிச்சொல்லி வயிறு குலுங்கச் சிரிப்பர் சிங்கப்பெருமாள் ஸ்வாமி.

பாஷாந்தர கலாசாலைகளில் சேர்ந்து ஆங்கிலம் பயின்று B.A. பட்டங்களும் M.A. பட்டங்களும் பெறுவதற்குச் சிலபல புத்தகங்களை வாசித்துப் பரீக்ஷை கொடுத்துத் தேறுகிறார்கள். அதன் பயனாகப் பெரும்பாலும் பலவகையான உத்யோகங்களில் அமர்ந்து பொருளீட்டுகின்றார்கள். அந்தப் படிப்பு பொருளீட்டுவதற்கே (பெரும்பாலும்) ஆதலால் ஸாத்யம் கை புகுந்தவாறே ஸாதனத்தை விட்டுத்தொலைக்குமடைவிலே அவர்கள் படித்த ஆங்கிலபுத்தகங்களை மறுபடியும் எடுத்துப் பார்க்க வேண்டிய ஆவச்யகதை சிறிதுமில்லை. "முன்பு பரீக்ஷை கொடுத்தீரே, இப்போது பரீக்ஷை கொடுப்பீரா?" என்று கேட்பாருமில்லை; கேட்டாலும் பரீக்ஷை கொடுக்கவேண்டிய அவசியமேயில்லை. ஸம்ஸ்க்ருதப்படிப்பு அப்படிப்பட்டதன்று; அறியாக்காலத்தில் வாசித்த சப்தமஞ்சரி, அமரம் முதற்கொண்டு எந்த புத்தகத்தில் எப்போது யார் பரீக்ஷிக்க வந்தாலும் பரீக்ஷை கொடுக்க ஸித்தமாயிருக்கிறேனென்று சொல்லித் திரவேண்டும். அல்பஜ்ஞனான அடியேனுடைய வார்த்தையன்றிது. வித்வத்ஸிம்ஹமாக எழுந்தருளியிருந்த திருப்பதி புரிசை ஸ்வாமி ஸாதிக்கப் பலகால் கேட்டவார்த்தை. "வாசித்து முடித்து விட்டோம். வாசித்த புத்தகங்களை இனி ஏதுக்கு ஸ்மரிக்க வேண்டும்?" என்று நினைப்பது பாஷாந்தர பண்டிதர்களுக்கேயொழிய ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கு உற்றதன்று.

25. அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்தில் மஹாபாஷ்யாந்த பண்டிதரென்று ஒரு பிரபல பண்டிதர் வந்திருந்தார். (முன்னம் சென்ற சுபக்ருத் வருஷத்துக் கதையிது.) அவரோடு நாலைந்து நிமிஷம் பேசினவாறே அவருடைய பாண்டித்ய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட திருத்தகப்பனார் 'சப்தமஞ்ஜரியில் ஒரு ஸந்தேஹம்' என்று கேட்கத் தொடங்கினார். 'சுசி சப்தம், ம்ருது சப்தம், கர்த்ரு சப்தம் ..இவற்றை சப்தமஞ்ஜரியில் நபும்ஸகலிங்கமாகவே யெடுத்துக்காட்டியிருக்கிறதே, இவை பும்லிங்க ஸ்த்ரீலிங்கங்களில் கிடையாதோ? கர்த்தா கர்த்ரீ என்றும், ம்ருது: ம்ருத்வீ என்றும் பிரயோகங்கள் காண்கிறோமே; அப்படியிருக்க நபும்ஸகலிங்கத்தில் மட்டுமே கர்த்ரு, கர்த்ருணீ, கர்த்ரூணி ..என்று காட்டியிருக்கிறதே; மற்றவை விட்டுப்போயிற்றா என்ன? அல்லது இதர லிங்கங்களில் பிரயோகிப்பது தவறா?" என்று கேட்டார். அதற்கு அவர் சொல்லுகிறார்—'சப்தமஞ்ஜரி ஏழெட்டு வயதில் வாசித்தது; வாசித்ததாகக்கூட ஞாபகமில்லை. அதில் இப்போது கேட்டால் அடியேன் என்ன சொல்லுவது? மஹாபாஷ்யத்தில் ஏதாவது கேட்டால் சொல்லுகிறேன்' என்றார். எழுந்தருள வேணுமென்று சொல்லியனுப்பிவிட்டார். இத்தகைய கேள்விகளை இக்காலத்துப் பிரபல பண்டிதர்களிடத்திலும் தாராளமாகக் கேட்கலாம். கேட்டவுடனே தூக்கியெறிந்தாற்போல் விடைகூறவல்ல மேதாவி வித்வான்கள் இல்லாமற்போகவில்லை. அன்னவர்களைத்தேடிப்பிடிக்கவேண்டும். "ஸஹஸ்ரேஷு கச்சித்" என்றாற்போல தேறுவர்களத்தனை. மற்றையோர்களுக்கு இந்த ப்ரஸ்தாவமே புரியாது.

(ச்லோ) 25. பரேஷாம் மூகேப்ய: ப்ரசஸ்திப்ரதீக்ஷா த்ருவம் பாமராணாம் ப்ரலோபாய ஹம்ஹோ
யதாபூதவைதுஷ்யஸம்பத் ஸம்ருத்தா: ஸ்வகீயேந சித்தேந த்ருப்திம் லபேரந்.

'வித்யாபரிச்ரம பரீக்ஷா' என்னுமிச் சிறுநூலை ஒரு பெரியவர் ஸன்னிதானத்தில் ஸமர்ப்பணம் பண்ணவேணுமென்று நினைத்துத் தகுந்த ஒரு பெரியாரை ஆராய்ந்து பார்க்கையில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆண்டவனை எம்பெருமான் திருவுள்ளம்பற்றி நியமித்தபடியால் அந்த ஸன்னிதானத்தில் ஸமர்ப்பணம் செய்கிறேன். முப்பத்தேழாண்டு அநுஸ்யூதமான அநுபவ பாக்யத்தினால் ஸ்ரீஸ்வாமியின் பாண்டித்யம் ப்ராமாணிகத்வம் விவேசன நைபுண்யம் மாத்ஸர்யலவலேச விவர்ஜிதத்வம் முதலிய எண்ணில் பல்குணங்களை நெஞ்சார அநுபவித்தவடியேன் க்ருதக்ருத்யனாயினேன்.

இதி. ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணாதாஸ:.

| | ரூ. | பை. |
|---|---|---|
| 75. திருப்பாவை ஜீயர் | 0 | 75 |
| 76. திருப்பாவை ஸ்வாபதேச உரை | 1 | 00 |
| 77. திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| 78. திருமந்த்ரார்த்த ஸாரம் | 2 | 00 |
| 79. திருவல்லிக்கேணி உபந்யாஸமாலை | 1 | 50 |
| 80. திவ்யப்ரபந்தக்கண்ணாடி | 1 | 00 |
| 81. திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு | 0 | 75 |
| 82. திவ்யஸூரி சரிதகால நிர்ணயம் | 0 | 75 |
| 83. துவரைப்பிரான் திருவருள் | 0 | 75 |
| 84. தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 25 |
| 85. தொழுகையும் தொழச்செய்கையும் | 0 | 75 |
| 86. த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| 87. த்வயார்த்தஸாரம் | 1 | 00 |
| 88. நப்பின்னையவதார ரஹஸ்யம் | 1 | 00 |
| 89. நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம் | 0 | 75 |
| 90. நல்வார்த்தை நானூறு | 2 | 00 |
| 91. நற்போது போக்கு | 0 | 75 |
| 92. நித்யாநுஷ்டான பத்ததி | 0 | 75 |
| 93. நித்யாநுஸந்தான உரை | 5 | 00 |
| 94. நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி உரை | 1 | 50 |
| 95. பகவத்கீதை யறுபத்திரண்டு | 1 | 00 |
| 96. பக்ஷீச சாகாநிலய: (உபந்யாஸம்) | 0 | 75 |
| 97. பன்னிருதிங்களனுபவம் | 2 | 00 |
| 98. பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| 99. பாதுகா ஸஹஸ்ராவதார விசாரம் | 1 | 00 |
| 100. பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி | 0 | 75 |
| 101. பார்த்தஸாரதியின் ப்ரபாவம் | 1 | 00 |
| 102. பூர்வாசார்ய வைபவம் | 1 | 50 |
| 103. பெரிய திருமொழி தீபிகை | 16 | 00 |
| 104. ப்ரமேயஸார உரை முதலியன | 1 | 50 |
| 105. மணவாளமாமுனிகள் கட்டியம் | 0 | 76 |
| 106. மணவாளமாமுனிவாத்ஸல்ய விவரணம் | 0 | 75 |
| 107. மணவாளமாமுனிகள் வைபவம் | 0 | 75 |
| 108. மதுரோபந்யாஸமாலை | 0 | 75 |
| 109. முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை | 2 | 00 |
| 110. முதலாயிரவுரை தீபிகை | 16 | 00 |
| 111. யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 112. யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம் | 0 | 75 |
| 113. ரத்னபரீக்ஷா (வடமொழி) | 0 | 75 |
| 114. ராமாநுஜ தயாபாத்ரதத்வம் | 1 | 00 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| 115. ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| 116. ஷி வடமொழியும் ஆங்கிலமும் | 1 | 50 |
| 117. ராமாநுஜ ஜயந்திமலர் | 1 | 00 |
| 118. வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| 119. வர்ணமாலை | 0 | 75 |
| 120. வரதன் ஸன்னிதி வரலாறு | 1 | 00 |
| 121. வாக்யஜ்ஞமலர் | 1 | 00 |
| 122. வாதிபீகர விஜயம் | 1 | 00 |
| 123. வால்மீகி ராமாயண வசனம் | 8 | 00 |
| 124. விசிஷ்டாத்வைத தர்சனம் | 1 | 00 |
| 125. விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் | 1 | 00 |
| 126. வித்வத்வைதிக பூஷணம் | 1 | 00 |
| 127. விதவாவபன விசாரம் | 0 | 75 |
| 128. வேதபாஷ்ய விமர்சம் | 0 | 75 |
| 129. வேதாந்த தேசிக சரித்ரம் | 1 | 00 |
| 130. வேதாந்தாசார்ய வைபவம் (ஸம்) | 1 | 25 |
| 131. வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை | 1 | 00 |
| 132. வைதிகலௌகிகமஹநீயமண்டலி | 2 | 00 |
| 133. வைதிக வித்வதாபரணம் | 1 | 00 |
| 134. வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 135. ஸத்புருஷஸமாராதனம் | 1 | 00 |
| 136. ஸத்ஸம்ப்ரதாய பரிதராணம் | 1 | 00 |
| 137. ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| 138. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி | 2 | 00 |
| 139. ஸதாசார்யஸூக்தி ரக்ஷா | 1 | 00 |
| 140. ஸதுபந்யாஸரத்ன மாலை | 1 | 00 |
| 141. ஸம்வாத ஸம்மார்ஜநீ | 0 | 75 |
| 142. ஸர்வஜ்ஞ ஸூக்தி ஸர்வஸ்வம் | 2 | 00 |
| 143. ஸாதுஸாத்விக ஸம்வாதம் | 1 | 00 |
| 144. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா | 1 | 25 |
| 145. ஸ்ரீராமாநுஜன் மாதப் பத்திரிகை வருடச் சந்தா | 5 | 00 |
| 146. வைதிக மநோஹரா வடமொழி மீ பத்ரிகை சந்தா | 10 | 00 |
| 147. ஸ்ரீராமாநுஜ பத்ரிக (தெலுங்கு) | 10 | 00 |
| 148. ஸ்ரீராமாநுஜன் பழைய ஸஞ்சிகைகளின் வால்யம் (பயிண்டு) | | |
| 149. P. B. A. நூல் தொகுதிகள் 12 | 100 | 00 |
| 150. வைதிக லௌகிக மஹநீய மண்டலி | 2 | 00 |

மற்றுமுள்ள நூற்றுக்கணக்கான புத்தகங்களுக்கு வேறு கியாடலாக் காண்க.

மிக முக்கியமான அறிவிப்பு;—நம்து ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை புத்துயிர்பெற்று நாலைந்து மாதங்களாகின்றன வென்பதும் இச்சபையின் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதும் உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரு. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

If un-delivered please return to:
**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.



123. [illegible]garamanuja[illegible],
29, Mosque Street,
SAIDAPET – MADRAS.15

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.